# கோட்சார பலன்களைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளும் முறைகள்



மணிமேகலைப் பிரசுரம்

# கோட்சார பலன்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் முறைகள்

[பலவகை ஆய்வுக் குறிப்புகள் பதகங்கள் முதலியவற்றுடன் கூடியவை]



ஆசிரியர் :

தெய்வக்ஞ ரத்னம்
திருமலை நல்லான் சக்கரவர்த்தி

டாக்டர் 'புலிப்பாணி' சுந்தர வரதாச்சாரியார்

(ஆசிரியர் தஞ்சை மஹாலின்
பஞ்சபக்ஷி சாத்திரம் முதலியன)
(Secretary, Indian Council of
Astrological Sciences Madras)

பதிப்பாசிரியர்: லேனா தமிழ்வாணன், எம்.ஏ.,



மணிமேகலைப் பிரசுரம்
தபால் பெட்டி எண் : 1447
4, தணிகாசலம் சாலை,
தியாகராயநகர்,
சென்னை—600 017
போன் : 442926

# பொருளடக்கம்

# விற்பனையாகும் இதர ஜோதிட நூல்கள்

## ஜாதகம் — Horoscope

| | ரூ. பை |
|---|---|
| ஜாதகம் பார்ப்பது எப்படி? | 27-00 |
| ஜாதகம் இல்லாதவர்கள் ஜாதகம் பார்ப்பது எப்படி? | 7-50 |
| திருமணப் பொருத்தம் பார்ப்பது எப்படி? | 21-00 |
| நவக்கிரகங்களும் அவற்றிற்குரிய தோஷப் பரிகாரங்களும் | 15-00 |
| கூட்டுக் கிரகப் பலன்கள் | 18-00 |
| குழந்தைகளுக்கு வரும் பாலக்கிரக தோஷமும் பரிகாரங்களும் | 10-50 |
| நிராயன துவாதச பாவ ஸ்புடக் கணிதம் | 21-00 |
| கிரகங்கள் பேசுகின்றன! | 28-00 |
| தசவர்க்க ஜாதக விளக்கம் | 18-00 |
| வராகமிகிரரின் பிருகத் ஜாதகச் சாரம் | 18-00 |
| செவ்வாய் தோஷப் பரிகாரமும் மாங்கல்ய பாக்கியமும் | 8-00 |
| பெண்களின் ருது ஜாதகமும் வாழ்க்கை நலமும் | 14-00 |

## உங்கள் ஜாதகம் — You & Your Horoscope

| | |
|---|---|
| உங்கள் ஜாதகப்படி நிகழும் திசாப்புத்திப் பலன்கள் | 25-00 |
| உங்கள் ஜாதகப்படி என்ன தொழில் செய்யலாம்? | 7-00 |
| உங்கள் ஜாதகப்படி ஆயுளும் ஆரோக்கியமும் | 11-00 |
| உங்கள் ஜாதகப்படி உங்கள் குடும்பம் | 8-50 |
| உங்கள் ஜாதகப்படி செல்வமும் வாழ்க்கை வசதியும் | 10-75 |
| உங்கள் ஜாதகப்படி அமையும் அதிர்ஷ்டங்களும் ராஜயோகங்களும் | 21-00 |

# ஆசிரியர் முன்னுரை

திருவருள் பணிகொள்ளும் திறம் நமக்குப் புரியாதது. நான் எழுத்துத்துறைக்கு வந்த புதிதில், ஒரு தந்நலம் கொண்ட நபர் இடையீட்டால், என்னை எழுத்துத் துறைக்கு அறிமுகப்படுத்திய பெரியவரிடம், என் அனுபவ மின்மை காரணமாகச் சிறிது கருத்துவேற்றுமை ஏற்பட்டு விட்டது. என் முன்னேற்றமும் தடைபட்டது. இந்த நிலையில்தான் திரு. லேனா தமிழ்வாணனின், ''கத்தரி போடாதீர்;'' என்ற ஒரு பக்கக் கட்டுரையைப் படிக்க நேர்ந்தது. எனக்கு மின்சாரம் தாக்கியது போலாயிற்று. ''என்னதான் கருத்துவேற்மை இருந்தாலும், ஏற்கெனவே இருக்கும் ஒருவரின் தொடர்பைக் கத்தரி போட்டுத் துண்டித்து விடாதீர்கள். அதனால் பயனில்லை. தொடர்பு அப்படியே இருந்தால், இப்பொழுது இல்லை என்றாலும், எதிர்காலத்தில் எந்த வகையிலாவது அவர் உதவி நமக்குத் தேவையாய் இருக்கலாம். அப்பொழுது எந்த முகத்துடன் அவரை நாடிச் செல்வது?'' என்ற வகையில், அக்கட்டுரை அமைந்திருந்தது.

என் தவறு ஒருவாறு புரிந்தபின், ஒரு புத்தாண்டுத் தொடக்க நாளன்று அப்பெரியவரைத் தயக்கத்துடன் போய்ப் பார்த்தேன். அவர் எதுவுமே நடக்காததுபோல், எதையுமே பாராட்டாமல் பழைய அன்பு ஆதரவுடன் என்னை வரவேற்று, மீண்டும் பணிகொண்டார். இன்று

நான் இவ்வளவு நிலைக்கு வந்தது, அப்பெருந்தகையால் தான். இன்றும் எங்கள் நட்பு எல்லா எதிர்பார்ப்பு களையும் மீறி வளர்ந்து வருகிறது. இதற்கெல்லாம் காரணம் மேற்கண்ட கட்டுரைதான். இந்த வகையில் என்னைவிட வயதில் இளையவராயினும், திரு. லேனா தமிழ்வாணனுக்கு நான் நன்றியுடையவன் ஆகிறேன்.

அவ்வப்போது மணிமேகலைப் பிரசுரத்தில் புத்தகங்கள் நேரில் சென்று பெறும் வழக்கமுடைய தான், ஒரு முறை அவர்களுடைய நூல் ஒன்றைப் பற்றிக் கூறிய கருத்தை எழுதிவைக்கும்படி பணித்தார். அங்குள்ள பணியாளர், அதுவே தலைக்கீடாக திரு. ரவி தமிழ்வாணன் என்னுடன் தொடர்புகொண்டு பணி கொள்ள விரும்பினார். வெறும் ''மணிமேகலை ஆசிரியர் குழு'' என்ற முறையில் அவர்கள் புத்தகங்களை வெளியிடுவது வழக்கமாயினும், நான் எழுதும் நூலுக்கு, என் பெயரையும் 'ஆக்கியோன்' என்று வெளியிடுவதாகவும் பெருந்தன்மையுடன் அவர் கூறினார். திரு. லேனாவிடம் நான் மேற்கண்ட விதத்தில் கடமைப்பட்டதை எண்ணி, இதுவும் திருவருள் செயலே எனத் தெரிந்து, ''ராசி பலன் என்னும் கோசார பலன்'' என்னும் நூலை அவர்களுக்காக எழுதினேன். இதன் மூலம் நான் இன்னும் பரந்து விரிந்த உலகுக்கு அறிமுக மாகிறேன். இதற்காக முதன்முதலில் என்னை இத்துறை யில் பணி கொண்ட. நான் குறிப்பிட்ட பெரியவர் திரு. பி. ஆதிமூலம், எம்.ஏ., (ஆசிரியர், 'பொய்யாமொழி') அவர்களுக்கு என் நன்றியை முதலில் தெரிவிக்கிறேன். அடுத்து, என்னை இனங்கண்டு இப்பொழுது பணி கொள்ளும் திரு. ரவி தமிழ்வாணனுக்கு என் நன்றி உரித்தாகும்.

முனிவர்கள் சொல்லிய சட்டதிட்டங்களுக்கு உட்பட்டுக் கோசார பலனைப் பல புதிய கோணங்களில் பரந்து விரிந்த ஆனால் அளவுக்குட்பட்ட ஒரு பாடநூல் (Text Book)

போலவே, இதை உருவாக்கியுள்ளேன். அங்கங்கே விஞ்ஞானக் கருத்து விளக்கங்களும், விளக்க அட்டவணைகள் பலவும் கொடுத்துள்ளேன். 10 ஆண்டுகளாக 'சனிப்பெயர்ச்சி' 'குருப்பெயர்ச்சி' எழுதியும்,(Astrotogical magazine), என்ற ஆங்கில மாத இதழில் இவைபற்றி ஆய்வுக் கட்டுரைகள் எழுதியும் பெற்ற அனுபவத்தாலும், பல்லாண்டுகளின் ஆய்வின் பலனாலும், கோசார பலன் ஒன்றையே தெளிவாகத் தெரிந்து கொண்டால், நம் எதிர்காலத்தை நாம் நன்றாகப் புரிந்து கொள்ளலாம் என்ற முடிவு எனக்குள் ஏற்பட்டுவிட்டது. அதன் விளைவே இந்த நூலாகும்.

முதன்முதலில் வடமொழி ஜோதிடக்கடலை ஆங்கிலத்தில் தந்து. தெளிவான பாடநூல்கள் போன்ற உருவில் பல நூல்களை வெளியிட்டு, 50 ஆண்டுகளுக்கு மேலாக Astrological magazine என்ற ஜோதிட மாத இதழை வெளியிட்டு வருபவரும், ஜோதிட உலகில் அகில உலக அளவில் இன்று புகழ் பெற்று விளங்குபவரும், ஜோதிடத்திற்கு என் மானசீக குருவுமான டாக்டர். பி. வி. ராமன் அவர்களுக்கு என் வணக்கமும் நன்றியும் உரித்தாகும்.

முதன்முதல் திரு. ராமன் நூல்களை எனக்கு அறிமுகப் படுத்தியதோடல்லாமல், ஜோதிடக் கலையை நான் கற்கத் தூண்டுகோலாக இருந்தவரும், ஜோதிடக் கலையை நன்குணர்ந்தவரும், நியூ பேங்க் ஆப் இண்டியா வங்கியில் அதிகாரியாகவும் இருந்துவருபவருமான எனது மைத்துனர், திரு. ஆர். ஜகந்நாதன் இந்த நூலின் எழுத்துப்படிவத்தைத் திருத்திச் செப்பம் செய்தும் ஆலோசனைகள் கூறியும் உதவினார். அவருக்கும் என் நன்றி உரித்தாகும்.

எனக்கு ஞான குருவாகி, எனக்குள் சித்தர் நூல் கொள்கை, சோதிட நுணுக்கங்கள் இவையும் சொல்லி வைத்து, தெளிவுகாட்டி, வாழ்க்கையை நன்றாகப் புரிந்து

கொள்ள வைத்த என் ஆசான் மகாவித்வான் குப்புசாமி ஆச்சாரியார் அவர்கள் திருவடிகளுக்கு இந்நூல் சமர்ப்பண மாகிறது. இதில் வரும் நுண்கருத்துகளுள் நல்லவை எல்லாம் அவரைச் சார்ந்தவை; பிழைகள் எல்லாம் என்னைச் சார்ந்தவை.

குற்றங்கள் நீக்கிக் குணங்கண்டு வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

10, ஆர்டிசான்
ஷண்முகம் தெரு
அயன்புரம்
சென்னை-600 023.

'ஜ்யோதிஷ வாசஸ்பதி'
திருமலை நல்லான் சக்ரவர்த்தி
'புலிப்பாணி'
சுந்தர வரதாச்சாரியார்.

# கோட்சார பலன்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் முறைகள்

## இராசி பலன் என்னும் கோட்சார பலன் ஆராய்ச்சி முன்னுரை

"உலகெலாம் பூத்தும் காத்தும் அழித்தலும் உடையோ னாகி
நிலவுறும் மூர்த்தி யாகிப் பிறப்பிறப் பிலனாய் நின்றும்
அலகிலாச் சோதி யாகி அணுமுதல் எவையு மாகி
கலைகளின் முடிவாய் நின்ற கதிரினைச் சிந்தை செய்வாம்

—வராஹர் ஓரா சாத்திரம்

உலகுக்கெல்லாம் காணும் கடவுளாக முன்னின்று காக்கும் கதிரவனாம், நவக்கிரகங்களுக்கெல்லாம் நாயகனான சூரிய பகவானை வணங்கி, இந்நூலினை எழுத ஆரம்பிக்கிறேன்.

எதிர்காலத்தை அறிந்துகொள்ளும் ஆர்வம், மனிதன் தோன்றிய நாள் முதலாகவே உண்டு. எதிர்காலத்தை அறிய உதவும் கருவியே ஜோதிடமாகும். 'ஜோதிடம்' என்ற சொல்லில், ஆங்கிலத்தில் வான சாஸ்திரத்திற்கு வழங்கும் Astronomy என்ற சொல்லும், அதன் பயனான Astrology என்ற ஜோதிடம் என்பதுமாகிய இரண்டுமே அடங்கும். வான சாஸ்திரம் விஞ்ஞானமாகக் கருதப்படும் போது, அதன் பயனான ஜோதிடத்தை விஞ்ஞானமாக ஏற்றுக்கொள்வதில் தவறென்ன? மற்ற விஞ்ஞானமெல்லாம் பருப்பொருள்களோடு மட்டும் நின்று விடுகின்றன. ஆனால் ஜோதிடம் உயிர்ச் சக்தியையும் சேர்த்து நுணுகி ஆராயும் அளவுக்கு வன்மையுடையது. பிறப்புமுதல் இறப்புவரை

எல்லா நிகழ்ச்சிகளும் ஜோதிடத்தோடு பின்னிப் பிணைந்துள்ளன.

இனி, ஜோதிடத்தின் விஞ்ஞானத் தன்மையை சிறிது ஆராய்வோம். சூரியனும், சந்திரனும் நமக்கு நேருக்கு நேர் இயங்கும் கிரகங்களாவார்கள்.

இதில், சந்திரனின் சுழற்சிக்கேற்பப் பெண்கள் மாதவிலக்கு அமைவதும், அமாவாசை பௌர்ணமியில் மனம் திரிந்து சிலர் தன்னிலை மறப்பதும், சந்திரன் பெயரான Luna என்ற சொல்லிலிருந்து 'பைத்தியம்' என்ற பொருளுள்ள Lunatic என்ற சொல் ஏற்பட்டு வழங்கப்படுவதும், சந்திரன் விஞ்ஞானத் தன்மையைக் குறிக்கும் அமாவாசை பௌர்ணமி நெருக்கத்தில் கடல் அலைகள் கொந்தளிப்பதும், மனிதனுக்கு ஏற்படும் நோய்களின் கொடுமை, வலி ஆகியவை அதிகமாவதும், யாவரும் அறிந்ததே. பயிர் வகைகள் மருத்துவ மூலிகை வகைகள் ஆகியவை சந்திரனின் ஒளிக்கற்றையால் ஊட்டம் பெறுவதும், விஞ்ஞானிகளும் நம் சித்தர்களும் கண்ட உண்மையாகும். தமிழ்ச் சொல்லான 'மதி' என்ற சொல், மனத்தெளிவையும், சந்திரனையும் குறிக்கும் 'இறைவனின் மனத்திலிருந்துதான் சந்திரன் தோன்றினான்' என்ற பொருளில், ''சந்த்ரமா மன சோஜாத!'' என்று வேதமும் இதைக் கூறும்.

சூரியனில் கரும்புள்ளிகள் தோன்றும் போதெல்லாம் உலகில் இறப்பு எண்ணிக்கை இரட்டிப்பு ஆகிறது என்றும், 11.5 வருடங்களுக்கு ஒரு முறை இவை சூரியனின் மேற்பரப்பில் வருகின்றன என்றும், 192/-இல் 'டாக்டர் மாரீஸ்' என்ற விஞ்ஞானி கண்டுணர்ந்தார். அண்மையில் ஏற்பட்ட வளைகுடாப்போர் மற்றும் இயற்கை அழிவுகளால் பெருத்த உயிர்ச்சேதம் ஏற்பட்டதற்கும் இவ்வாண்டு (1991) இந்தக் கரும்புள்ளிகள் (Sun spots) மீண்டும் மேற்பரப்புக்கு வருவதே காரணம்.

எனலாம். இதனாலும் இந்த ஒளிக்கதிரியக்கங்களின் செயல் திறனை நாம் அறிய முடிகிறது.

கோள்கள் என்பவை ஐவகைப் பருப்பொருள்களால் ஆன வெவ்வேறு கூட்டுக் கலவையால் ஏற்பட்ட. சிறிய பெரிய ஒளிப் பிண்டங்களாகும். இவை ராசி மண்டலத்தைக் குறிப்பிட்ட வேகத்தில், குறிப்பிட்ட வரன் முறையில் தொடர்ந்து சுற்றி வருகின்றன. இவை பெரும் பாதிப்பை ஏற்படுத்தும் உயர்நிலைக் கதிரியக்கங்களை உமிழ்ந்தவண்ணமும் இருக்கின்றன. இந்தக் கதிரியக்கப் பாதிப்பின் தன்மை மிக நுண்ணிய கால இடைவெளி களிலும், ராசிப் பாதையில் வெவ்வேறு கோண நிலையில் இருக்கும் அவற்றின் இருப்பால், ஒன்றுக்கொன்று வேறு பட்டுக் கொண்டே இருக்கும்.

இந்த நிலையில், மனிதனின் கரு முதிர்ந்து, வெளி யுலகுக்கு வரும் பக்குவம் வரும்போது, மேற்படி கதிரியக் கங்களால் உந்தப்பட்டு, ஒவ்வோர் உயிரும், தன் உடலுடன் ஒவ்வொரு குறிப்பிட்ட நேரத்தில் தான் வெளி வருகின்றது. அப்படி வெளிவரும்போது, மனிதனின் உள் மனத்தளத்தில் (Sub Conscious mind) இராசி மண்டலத்தின் வெவ்வேறு நிலைகளில் உள்ள, இந்தக் கோள்களின் கூட்டுக் கதிரியக்கம் பதிந்து விடுகின்றது. An imprint is made in the sub conscious mind by virtue of occupation of particular angular positions of the planets in the Zodiac, their cumulative cosmic radiations; which make the imprint) இந்தப் பதிவே குறியீடாக, ஜாதகமாகக் கணிக்கப் படுகிறது. The imprint being converted in to a symbolic form in the sub -conscious, this is otherwise called horoscope) இந்தப் பதிவுகளால் உந்தப்பட்டே, தன் வசமின்றி அவற்றின் வசமாகவே மனிதன், நடக் கின்றான். அதனாலேயே, அவன் வாழ்க்கை, 'விதி' என்ற எல்லைக்குள் வந்து விடுகின்றது.

இந்த ஜாதகத்தை, 'இயற்கை உயர்சக்தி' என்ற, கடவுள் என்ற, இன்ஜினீயர் (Super Intellegence) நம்வாழ்வு என்ற வரைபடமாக்கிக் கொடுத்துள்ளார். அந்த வரைபடம்தான் 'ஜாதகம்' என்னலாம். வரை படத்திற்குட்பட்டு வீட்டை ஒருவர் சிறப்பாகவும் வேறொருவர் எதிரிடையாகவும் அமைத்துக் கொள்ள முடியும். முன்னவர், விதிக்குட்பட்டு, விதியை வெல்லும் மதியுடையவர் (Free will played within the compass of destiny) மற்றவர் விதிக்குட்பட்டு விதிக்கே அடிமைப்பட்டு விடுபவர். He becomes slave to fate within his compass of destiny) இதுவே, ஓரளவு ஜோதிடத்திற்கு விஞ்ஞான விளக்கமாகும். உயிரின் பரிமாணம், அதன் பிறவி எடுக்கும் தத்துவம், முன்வினை ஆக்கம், இவற்றையும் விஞ்ஞான ரீதியாக விளக்க முடியும், ஆயினும், விரிவு பற்றி அவற்றை இங்கே விளக்கவில்லை.

'மனோதத்துவம்' இன்று முதிர்ந்து வளர்ந்த நிலையில் உள்ளது. புறமனம், உள் மனம், உள் மன ஆற்றல் என்னும் இவற்றை நம் யோக சாத்திரம் வரன் முறையாக விளக்கியுள்ளது, இதையே மேலைநாட்டு விஞ்ஞானம் தன் எல்லைக்குட்பட்டு விளக்குகின்றது. உள் மன இயக்க வலிமையால், மனிதன் தன் உடலை விட்டு வெளிவந்து, விரிந்த நிலையில் ஆய்வு செய்ய முடியும் என்பது, இன்றைய விஞ்ஞானிகளும் ஒப்புக் கொண்ட உண்மை.

இந்த நிலையில் தான் நம் முன்னோர்களான ரிஷிகள், சித்தர்கள் என்று சொல்லப்பட்ட நம்நாட்டு விஞ்ஞானிகள், கோடிக்கணக்கான கி. மீ. களுக்கு அப்பாலுள்ள கோள் களையும் அவற்றின் தன்மைகளையும் ஆராய்ந்து உணர்ந்து. அதை ஜோதிட சாத்திரமாக உருவாக்கித் தந்துளளனர், இதையே, இன்றைய விஞ்ஞானிகள் பல்வேறு கருவிகளுடன் ஆராய்ந்து 'வான சாஸ்திரம்' என்ற Astronomy யைத் தனியாகப் பிரித்துக் காட்டி யுள்ளனர்.

இதுவன்றி, கோள்களின் பாதிப்பை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனிதன் உணர்ந்த அனுபவமும் இதை ஏற்றுக் கொள்ளுவதாகும். கிரஹணங்களின் பாதிப்பு, வால் நக்ஷத்திரங்களின் பாதிப்பு என்னும் இவை எல்லாம் அவன் அறிந்த வகையில், இன்றும் உண்மையாகக் காணப்படுகின்றன.

குறிப்பிட்ட கோள்களின் சேர்க்கை, பார்வை இவற்றின் காரணமாகப் பேரழிவு, உயிர்ச்சேதம், இயற்கை உத்பாதங்கள் போன்றவை உண்டாவதை நாம் அறிவோம். செவ்வாய் சனி சேர்க்கை. ராகு சனி சேர்க்கை, பார்வை என்றும் இவற்றின் போதெல்லாம் இவை ஏற்படுகின்றன. அண்மையில், ஏற்பட்ட செவ்வாய் சனி பார்வை, ராகு சனி பார்வை ஆகியவற்றின் பாதிப்பால் வளைகுடாப் போர், பூகம்பங்கள், அரசியல் மாற்றங்கள் ஆகியவை ஏற்பட்டதை யாவரும் அறிவர்.

இதேபோல், செவ்வாய் தோஷமுள்ள ஜாதகர்கள் R. H. நெகடிவ் இரத்தம் உள்ளவர்களாகக் காணப்படு கிறார்கள் என்று, இப்பொழுது மருத்துவ உலகமும் அறிந்துள்ளது. இப்படிச் செவ்வாய் தோஷமுள்ளவர் களைத் தோஷம் அற்றவர்களுடன் இணைக்கும்போது, யாராவது ஒருவருக்கு நோய், துன்பம். பிரிவு அல்லது இறப்பு போன்றவை ஏற்படுவதாகவும் அறியப்பட்டுள்ளது.

இதேபோன்று நட்சத்திரங்களின் தன்மை, பருவ வேறுபாடுகளின் தன்மை, சந்திர சூரியர் இடையிலுள்ள இடைவெளி வேறு பாடான திதிகளின் நல்ல அல்லது கெட்ட தன்மைப் பாதிப்பு என்பன பலவும் உண்மை எனக் காணப்பட்டுள்ளது.

இன்னும் உயிரின் அழிவற்ற தன்மை, அதன் அதன் முன்வினைக்கேற்ப மற்றொரு பிறவிக்குப் பரிணாமம் பெறும் வகை போன்ற பல உண்மைகளையும் விஞ்ஞான அடிப்படையில் விளக்கலாமாயினும், விரிவஞ்சி இங்கு

சுருக்கமாகவே சில உண்மைகள் மட்டும் சொல்லப் பட்டுள்ளன. இதுவரையில் சொல்லப்பட்டவற்றிலிருந்து, மற்ற விஞ்ஞானங்கள் போல் ஜோதிடமும் ஒரு விஞ்ஞானமே என்பதும், மற்ற விஞ்ஞானங்கள்போல் உடல் என்ற எல்லைக்குள் நிற்காமல் உயிர் அளவுக்கும் சென்று ஊடுருவிப் பார்க்கும் உண்மைத் திறனுடையது ஜோதிடம் என்ற உண்மையும் தெரியவரும்: எனவே, ஜோதிடமும் விஞ்ஞானம்தான் என்பதையும், அது மனித வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படுவதாகும் என்பதையும் ஏற்றுக் கொள்வோமாக.

## பகுதி I - அடிப்படைகள்

### அத்தியாயம்—1

# பொதுச் செய்திகள்

### தோற்றுவாய்

உலகில் ஒருவன் பிறக்கும்போது, கீழ்க்கதுவாயில் (Horaizon) உதிக்கும் ராசியின் பாகையே, அவன் பிறந்த லக்னமாகும். இதை மையமாக வைத்து, அப்போதுள்ள கோள்களின் அமைப்பைக் கணித்து உருவாக்குவதே ஜாதக மாகும். இதில் 'லக்னம்' தான் உயிர் ஆகும். (ஜீவன்), சந்திரன் இருக்கும் ரர்சியே உடல் எனக் கொள்ளலாம் (சரீரம்). அந்த ராசியையே நமது ஜென்மராசி என்றும், அன்று சந்திரன் நிற்கும் நக்ஷத்திரமே ஜென்ம நக்ஷத்திரம் என்றும் சொல்லுகிறோம். ஒருவன் பிறந்தபோது அமைந்த இந்த ஜன்மராசியிலிருந்தும், ஜென்ம நக்ஷத்திரத்திலிருந்தும், இன்றைய நாளில் உள்ள எல்லாக் கோள்களின் நிலையின் அடிப்படையில், அவை ஏற்படுத்தும் அன்றைய பலனே

ராசிபலன், அல்லது கோசார பலன் எனப்படும். பிறந்த போது அமைந்த லக்னத்திலிருந்து 12 பாவங்கள், வீடுகள், அங்கங்குள்ள கோள் நிலைகளிலிருந்து ஜாதகனின் வாழ்க்கைத்தரம், அமைப்பு ஆகியன பற்றி எல்லாம் அறிய முடியும். ஆனால், அதைச் சாதித்து உண்மையாக்கித் தருவதுதான். அன்றாடம் உள்ள கோள்நிலைகளின் பாதிப்பால் ஏற்படும் கோசார பலனாகும்.

பிறந்த நேரத்திலிருந்தே வாழ்க்கை தொடங்குவதால், லக்னத்தை 'உயிர்' என்கிறோம். ஆனால், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நக்ஷத்திரத்தைக் கடந்து, அவற்றின் ஒளிக் கதிரோடு தன் கதிரையும், வாழ்க்கையின் அன்றைய நாளை ஒரு மையமாக்கி, மற்ற கோள்களால் ஏற்படும் பாதிப்பின் விளைவே, கோசாரமாகும். இதனாலேயே ராசி பலனை நாம் பிறந்த ஜென்ம ராசியிலிருந்து கணக்கிட்டு அறிகிறோம். உயிர் வளர்வதில்லை, அதைப் போல் லக்னமான உயிரும் மாறாது. ஆனால், 2¼ நாளுக்கு ஒரு ராசியைக் கடக்கும் சந்திரன், தினமும் அன்றைய கோள் நிலைகளில் 'பாதிப்பை ஏற்படுத்தி, மாறி மாறிப் பலனளிப்பதால், சந்திரன் உடலேயாகும். இதனாலேயே, நாம் சந்திர ராசியை மையமாக வைத்துக் கோசார பலன் அல்லது ராசிபலனைப் பார்க்கிறோம்.

வாழ்க்கையின் பல்வேறு கூறுபாடுகளை 12 வீடுகளாக வகுத்து, முன்னர் சொன்ன லக்னம் எந்த ராசியாக வருகிறதோ அதை முதலாக வைத்து, லக்னம், தனம், சகோதரம் போன்ற 12 விதமான அமைப்புகளை வாழ்க்கை பூராவுக்குமே உள்ளடக்கும் விதத்தில் எண்ணப்பட்டு, கோள்நிலைகளையும் சந்திரன் உட்பட ஆய்ந்து, வாழ்க்கை பூராவுக்குமே பலன் சொல்லப்படுகிறது. அன்றாடப்பலனை அறிவதற்குச் சந்திர ராசியை முதலாக வைத்து 12 பாவங்களாகக் கொண்டே பலன் சொல்லப்படுகிறது. 12 ராசிகளிலும் அமையும் 27 நட்சத்திரங்கள் என்ற ஒளிமண்டலங்கள், கோள்களைப் போல் சுற்றாமல், நிரந்தரமாக

அங்கங்கே இருந்து, ஒளிவிடுபவை. இவற்றில் ஏதாவது ஒன்றில் ஜனன காலத்தில் சந்திரன் இருக்கும். 27 நட்சத்திரங்களும் அவற்றின் தன்மைக்கேற்ப, 9 கோளும் ஒவ்வொன்றுக்கு மும்மூன்று நட்சத்திரங்கள் வீதம் ஆளுமை அல்லது ஆதிபத்யம் அடைகின்றன. முதல் நட்சத்திர அதிபதியின் காலம் அல்லது பாதிப்பு. குறிப்பிட்ட கால அளவு வாழ்க்கையில் நடக்கிறது. அடுத்து, அடுத்த நட்சத்திர அதிபதியின் ஆளுமை ஏற்படுகிறது. இதுவே 'தசாபுக்தி' என்ற பெயரில் வாழ்க்கைக் காலத்தோடு பரிணாமம் பெறும் தன்மையைக் காட்டுகிறது. (Progress of evolution of life). சந்திரன் உடல் என்று சொன்ன விதத்தில், அதன் அன்றாட நிலையில் மற்றக் கோள்கள் இருக்கும் வீட்டின் கணக்கைக் கொண்டு, தற்காலிகப் பலன் அல்லது ராசிபலன் அறியப்படுகிறது. இந்த இரண்டு வகைப் பலன்களும் இணைந்து அன்றாட வாழ்க்கைப் பலன் நிர்ணயமாகிறது, இரண்டையும் சீர் தூக்கிப் பார்த்துத் தான், நிகரப்பலனை நாம் மதிப்பிடுவோம். இது, மூன்று விதமாக நடக்கிறது.

1 தசாபுத்தி பலன் நல்லதாக இருந்து, கோசார பலன் அசுபமாக இருந்தால் நல்லது கெட்டது இரண்டும் அற்ற மத்திம பலன் நடக்கும்.

2. தசாபுத்தி பலன், கோசாரபலன் இரண்டுமே கெட்டதாக அசுபமாக நடக்குமானால், காலம் மிகவும் அசுபம், கஷ்டம் உள்ளதாக, அடிமட்டமான நிலையில் நடக்கும்.

3. இரண்டும் நன்றாக நடந்தால் காலம் மிகவும் உன்னதமாக நடக்கும். இதுமாதிரி காலகட்டங்கள்தான் வாழ்க்கையின் பொற்காலமாக அமைகின்றது.

எனவே, லக்னத்திலிருந்து 12 ராசிகளில் உள்ள கோள் நிலைகளுக்கேற்ப, அவற்றின் நட்சத்திர ஆதிபத்திய

தன்மைக்கேற்ப கிரகங்களின் வரிசைக்கிரமத்தில் தசாபுக்தி என்ற வடிவில் பலன் தருகின்றன.

சந்திரன் நின்ற ராசியிலிருந்து அங்கங்கே அன்றாடம் உள்ள கோள்நிலைகளின் தன்மைக்கேற்ப, அவை சஞ்சரிக்கும் 12 ராசிகள் ஜன்ம ராசி முதல் இருக்கும் கணக்குப்படி, அன்றாடம் சுபம் அல்லது அசுபபலன்களைத் தருகின்றன. முன்னால் சொன்னது மாறாது. இந்தக் கோசார பலன் நாளுக்குநாள் மாறும். இதனாலேயே இரண்டையும் கூட்டிப் பார்த்து நிகர பலனை அறிய வேண்டும். இதில், ஒவ்வொரு கோளும் ஒவ்வொரு புது ராசிக்குப் பெயரும் போது, சந்திர ராசியிலிருந்து அது செல்லும் பாவம் அல்லது வீடு மாறுபடுகிறது, எனவே அன்றாட நிலையில் இவற்றின் மாற்றத்தின் தன்மைக்கேற்ப புதுப்புது ஜாதகம் அமைவது போலுள்ளதாகும், இது. ஆனால் ஜென்ம ஜாதகம் மாறுவதில்லை. எனவே, ஜென்ம ஜாதகம் காட்டும் பலனை, அன்றாடம் உள்ள கோள் நிலைகள் மாறி மாறி அடையச் செய்கின்றன. எனவே, கோசாரப் பலன் மிகவும் முக்கியமாகிறது. எனவே, இவை எல்லாவற்றையும் நாம் தெரிந்து மதிப்பிட வேண்டுமென்றால், இதில் அங்கம் வகிக்கும் 12 ராசிகளின் தன்மை, அவை ஜென்ம லக்னமாக அமையும்போது அமையும் 12 விதத் தன்மைகள், இவற்றில் தங்கள் பயணத்தை இடைவிடாமல் தொடரும் கோள்களின் தன்மைகள், 12 பாவங்கள் என்று சொல்லப்படும் வாழ்க்கையின் வெவ்வேறு துறைகளின் தன்மைகள் என்னும் எல்லாவற்றையும் நன்றாகப் புரிந்து கொண்டால்தான் நாம் கோசார பலனை நன்றாகப் புரிந்து கொள்ள முடியும்.

இந்த 12 ராசிகளுக்கும் தனித்தனித் தன்மைகள் உண்டு. அதே போல் 9 கோள்களுக்கும் தனித்தனிக் குணதர்மங்கள் உண்டு. இவற்றை 'ராசி சீலம்' என்றும் 'கிரக சீலம்' என்றும் சொல்லுகிறோம். இவற்றை விரித்துக் கூறினால் விரிவாகிப் புத்தகம் பெரிதாகும்

ஆதலால் இவற்றைப் பதசமாகக் காட்டியுள்ளோம். பலன் சொல்லுவதற்கும் இந்த 12 ராசிகளுடையவும், கிரகங் களுடையவும் பண்புகளைத் தெரிந்து கொள்ள வேண் டியது முக்கியமாகும்.

இந்த 12 ராசிகளும் லக்னமாக அமையும்போது லக்னம், லக்னாதிபன் தன்மைக்கேற்ப வாழ்க்கையின் முழுத்தன்மையும் அமைகிறது. எனவே 12 லக்னங்களுக் குரியவற்றைச் சுருக்கமாகக் கூறியுள்ளோம்.

இந்த 12 ராசிகளும், லக்னம் எதுவாயினும் அது முதல் எண்ணப்படும்போது 12 பாவங்கள், அல்லது வீடுகளாகி, வாழ்க்கையின் பல்வேறு துறைகளையும் விளக்குவன ஆகும். எனவே, பாவ காரகங்களைத் தனியாகக் கொடுத் துள்ளோம்.

அடுத்து 9 கோள்களும் வாழ்க்கையில் பல துறைகளை நிர்வாகம் செய்கின்றன.

சூரியன் (தகப்பன்,) ஆத்மாவையும், சந்திரன் (தாய்) உடலையும்— இப்படி ஒன்பது கோள்களும் வாழ்க்கையின் பல கோணங்களை ஆதிக்கம் செலுத்துகின்றன. இவை 'கிரக காரகம்' எனப்படும். இவையும் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

எல்லாவற்றிற்கும் மேலாக, மேலைநாட்டினர் இந்தக் கோசார பலனைப் பார்ப்பதற்கும் நாம் பார்க்கும் முறைக் கும் வேறுபாடு உண்டு. அவர்கள் ராசி மண்டலமும் நம் ராசி மண்டலமும் குணதர்மங்களில் ஒன்றானாலும், பலன் காணும் விதத்தில் இரண்டுக்கும் வேறுபாடு உண்டு. இதைச் சிறிது விளக்கிவிட்டு மேற்கொண்டு செல்வோம்.

சூரியன் தெற்கிலும் வடக்கிலும் பூமத்திய ரேகையைக் கடக்கும் நாள்அன்று இரவும் பகலும் சமமாக இருக்கும். எனவே, இதைச் 'சமநாள் மையம்' அல்லது 'ஈக்வினாக்ஸ்' என்று வழங்குகிறோம். மார்ச் 21ஆம் தேதியும் செப்டம்பர்

21ஆம் தேதியும் இந்தச் சமநாள் அமைகின்றன. ஆனால் இந்த சமநாள் மையம் ஒவ்வோர் ஆண்டும் அதே இடத்தில் நிகழ்வதில்லை. ஒவ்வோர் ஆண்டும் 50.25 விகலை அளவு முன்னோக்கி நகர்கிறது. இதனால், சூரியன் ஒவ்வோர் ஆண்டும் இந்த அளவு முன்னரே மேஷத்தின் முதல் பாகையில் நுழைகிறது.

எனவே, இந்த மேஷத்தின் முதல் பாகை ஆரம்பம் வருஷத்திற்கு 50.25 கலைகள் வீதம் பின்னோக்கிச் செல்கிறது. இப்படியே இந்த ராசி மண்டலம் 4320 வருஷங்களில் முழுவதுமாகப் பின்னோக்கி நகர்ந்து, மீண்டும் ஆரம்பித்த இடத்திற்கே வந்து விடுகின்றது. இதனால் இது நகரும் ராசி மண்டலம் அல்லது Moving Zodiac என்று சொல்லப்படுகிறது. ஏறக்குறைய 1502 வருஷங்களுக்கு முன்னுள்ள மேஷத்தின் முதல் பாகையை விட்டு பின்னோக்கி நகர்ந்து, இன்று இந்த நகரும் ராசி மண்டலம் 23°—36° பின்னே சென்றுள்ளது. இதையே நாம் 'அயனாம்சம்' என்று சொல்லுகிறோம். ஆங்கிலத்தில் இதனை Precession of Equinoxes என்று அழைக்கிறோம்.

இனி, சூரியனின் இந்தப் பின்னோக்கும் தன்மையாக முக்கியத்துவம் வகிப்பதால் சூரியனை மையமாகக் கொண்டு மேலை நாட்டினர் ராசி பலனைக் கணித்து அறிகின்றனர். இந்த நகரும் ராசி மண்டலத்தை 'சாயன ராசி' என்றும் அழைக்கிறோம்.

ஆனால், நாம் அப்படி ஏற்றுக் கொள்வதில்லை. பூமியின் பாதை, சூரியனின் பாதை சுழற்சி இவற்றின் விகித வேறுபாட்டால் இந்தப் பின்னோக்கு இருப்பதாகத் தெரிவதே அன்றி, உண்மையில் இது நகருவது கிடையாது. ஒரு மின்வண்டியில் செல்பவனுக்கு இருபுறமும் உள்ள மரங்கள் நகருவன போன்று தோன்றினும் அது உண்மையில் நகர்வதில்லை. அது போலத்தான் இதுவும். ராசி மண்டலம் ஒரு வீதி போன்றது. வீதி அல்லது தெரு நகராது, அதில்,

செல்பவர்கள் தான் நகர்வார்கள். எனவே நாம் நகராத Fixed Zodiac என்னும் நிராயன ராசி மண்டலத்தையே கணக்கில் எடுக்கிறோம். இதில் ஏற்கனவே சொன்னபடி சந்திரன் உடல்வளர்ச்சிபோல் அன்றாட இயலைக் குறிப்ப தாலும், 2¼ நாள் ஒரு ராசியில் தங்கி விரைவில் அடுத்த ராசிக்கு நகருவதாலும் சந்திர ராசியிலிருந்து கணக்கிட்டு நாம் பலன்களை அறிகிறோம். அடுத்து, மற்ற விஷயங் களை ஒவ்வொன்றாக விளக்குவோம்.

## அத்தியாயம்—2

## கிரக சீலம் அல்லது ஒன்பது கோள்களின் குண தர்மங்கள்

சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்ரன், சனி, ராகு, கேது இவை ஒன்பதும் கிரஹங்களாகும். இவற் றில் ராகுவும் கேதுவும் உண்மையில் கிரஹங்கள் அல்ல. நவக்கிரஹங்கள் செல்லும் யாதையே ராசி மண்டலமாகும். ஆனால், நம் பூமி நகர்ந்து செல்லும் பாதை வேறானது. இதை ''எக்லிப்டிசு'' என்று ஆங்கிலத்தில் சொல்லுகிறோம். அல்லது, பூமியின் 'நீள்வட்டம்' எனலாம். சந்திரன் பூமியைச் சுற்றும்போது பூமியின் இந்த நீள்வட்டப் பாதையை வட பகுதியிலும் தென்பகுதியிலும் கடந்து செல் கிறது. இப்படி கடந்து செல்லும்போது ஏற்பட்ட மையங்கள், ராசி மண்டலத்தில் தலைகீழாக 1½ வருஷத் திற்குச் சரியாக நகர்ந்து முடிக்கின்றன. எனவே, வடக்கு மையத்தை ராகு என்றும் தெற்கு மையத்தை கேது என்றும் வழங்குகிறோம். இந்தக் குறுக்கு மையங்கள் பூமியின் மையத்தால் நிழலாக, பூமியின்மேல் நிழலாக விழுகின்றன. இந்நிழல் தன்மையால்தான் கிரஹணங்கள் ஏற்படுகின்றன. இவை வாழ்க்கையில் பாதிப்பையும் ஏற்படுத்துகின்றன. இதனாலேயே இவற்றைக் கோள்களாகப் பின்வந்தவர்கள்

ஏற்றுப் பலன் கண்டு வருகின்றனர். முதலில் இவை கணக்கில் சேர்க்கப்படாததால், வாரத்தின் நாள்கள் சூரியன் முதல் சனிவரை அந்தக் கோள்களின் பெயரால் மட்டுமே அமைந்தன.

இவற்றில் ராகுவின் பாதிப்பு சனியின் பாதிப்பை ஒத்ததாகும். அதேபோல் கேதுவின் பாதிப்பு செவ்வாயுடையது போலப் பலன் தருவதாகும். அனுபவத்தில் இவ்வாறு கண்டுணரப்பட்டுள்ளது. இனி, தொடர்ந்து ஒன்பது கோள்களின் செய்திகளைச் சொல்லுவோம்.

ஒன்பது கிரஹங்களின் முக்கிய குணதர்மங்கள், தன்மைகளை அடுத்துவரும் பக்கத்தில் விரிவாக கொடுத்துள்ளோம். அதன்மூலம் தெரிந்து கொள்ளலாம். இங்கே அவற்றின் முக்கிய காரகங்களையும், இன்னும் இன்றியமையாத குறிப்புகளையும் தருகிறோம். எல்லாவற்றையும் நினைவில் வைத்துக் கொண்டால், பலன் சொல்ல மிகவும் உபயோகமாக இருக்கும்.

**சூரியனின் முக்கிய காரகங்கள் :**

தகப்பன் உயிர், தர்மம், மருத்துவம், விஞ்ஞானம், அரசியல், அரசிடமிருந்து பெறும் சலுகை, அதிகார பதவி, புகழ், மரியாதை, தைரியம், மனத்திடம், வீரம், ஆரோக்யம், ஆயுள், மின்சாரம், வலக்கண் இவை சூரியனால் குறிக்கப்படுபவை. எனவே, சூரியன் ஜென்ம ராசியிலிருந்து சுபபலன் தரும் இடங்களில், அவன் காரகங்கள் குறிக்கும் விஷயங்களிலும், சுப பலன் கிடைக்கும். உதாரணமாக, சூரியன் ஜென்ம ராசிக்கு 3இல் சுபபலன் தருபவன். எனவே, சகோதரர், தைரியம், சாமர்த்தியம் போன்றவற்றின் மூலமாக மேற்கண்ட காரகங்களைக் குறித்த நற்பலன்கள் கிடைக்கும் என்று கொள்ளவேண்டும். மற்றக் கிரஹங்களுக்கும் இப்படியே கொள்க.

சூரியன் ஜாதகத்தில் 3, 6, 10, 11-ஆம் இடங்களில் சுப பலன் கொடுப்பவன். இந்த இடங்களுக்கு 6,12,4 5-ஆம் இடங்களில் வேறு கோள்கள் இருந்தால் சூரியன் சுப பலன் தரமாட்டான். இது ஜாதக வேதை. இது பிறப்பு ஜாதகத்திற்கு மட்டும் பொருந்தும். கோசார வேதை தனியாக விளக்கப்படும். சூரியனுக்குச் சனியால் வேதை கிடையாது, சூரியனின் சுபபலன் தரும் இடங்களில் வேறு கிரகம் இருந்தால் அது விலோம வேதை யாகும். இதுவும் சுபபலனைக் கெடுக்கும் தன்மை உடையதே ஆகும். சூரியன் உத்தராயனம், உச்சிப் பொழுது, 10-ஆம் இடம் இவற்றில் வலியவன். 22 முதல் 24 வயதுவரை இவன் பாதிப்பு அல்லது பலன் வாழ்க்கையில் தெரியும். இங்கு சொன்ன பொது விஷயங்களை மற்றக் கோள்களுக்கும் பொருத்திப் பார்த்துக் கொள்ளவும். புது ராசிக்குப் புகுவதற்கு 5 நாள்கள் முன்னதாகவே இவன் அந்த ராசி யின் பலனைத் தர ஆரம்பிக்கிறான்.

**சந்திரனின் முக்கிய காரகங்கள் :**

தாய், இருதயம் உணர்ச்சிகள், உறக்கம், வளமான செல்வம், வாகன சுகம், பெண்கள், அவர்கள் மூலம் நன்மை, தொலை தூரப் பயணங்கள், மணம், முகத்தின் ஒளி, புத்திக் கூர்மை, அழகு, நீண்ட ஆயுள், இடக் கண் இவற்றைச் சந்திரன் குறிக்கும்.

ஜாதகத்தில் 5, 9, 12, 9, 4, 8 ஆகிய இடங்களில் இவன் அசுபன். 1, 3, 6, 7, 10, 11 ஆகிய இடங்களில் இவன் சுபன். இவை ஒன்றுக்கொன்று முறையே வேதை, மற்றும் விலோம வேதை ஸ்தானங்களாகும். இங்கு கோள்கள் வேறு இருந்தால் அசுப பலனே தரும். தக்ஷணாயனம், இரவு, 4-ஆம் இடம் இவற்றில் பலவான். ரோஹிணி, திருவோணம். புனர்பூசம், விசாகம், பூரட்டாதி இந்த நக்ஷத்திர சாரத்தில் இவன் சுபபலன் தருகிறான். கிருத்திகை, உத்திரம், ஆயில்யம், கேட்டை, உத்திராடம்,

ரேவதி இந்த நக்ஷத்திரங்களில் இவன் அசுப பலன் தருகிறான். ஒருவன் வாழ்க்கையில், தான் ஜாதகத்தில் அமைந்த நிலைக்கேற்ப 24 வயது முதல் 26 வயது வரை சுபம் அல்லது அசுப பலனைத் தருகிறான். மறு ராசியில் புகுவதற்கு 1 மணி 12 நிமிஷம் முன்னாலிருந்தே இவன் அந்த ராசியின் கோசார பலனைத் தருகிறான். ராசிகளின் முடிவிலும் இவன் பலவான்.

வளர்பிறை ஏகாதசி முதல் கிருஷ்ணபக்ஷ (தேய்பிறை) பஞ்சமி வரை இவன் பூர்ண சந்திரன். கிருஷ்ணபக்ஷ ஏகாதசி முதல் சுக்லபக்ஷ (வளர்பிறை) பஞ்சமி வரை இவன் க்ஷீண சந்திரன். கிருஷ்ண பக்ஷ சஷ்டி முதல் கிருஷ்ண பக்ஷ தசமி வரை, சுக்லபக்ஷ சஷ்டி முதல் சுக்லபக்ஷ தசமி வரை இவன் ''மத்திம சந்திரன்'' எனப் படுவான். பூர்ண சந்திரன் சுபன். க்ஷீண சந்திரன் அசுபன்.

**செவ்வாய் குறிக்கும் காரகங்கள்;**

இளைய சகோதரர்கள், தைரியம், வீரம், தேகவலிமை சத்துரு, சண்டை, போர், தலைமை, சேனைத்தலைமை, பூமி, ஸ்திர சொத்துகள், விபத்துகள், காயம், இரணங்கள், தீக்காயங்கள், ஆயுதக் காயங்கள், கொள்ளை, திருடு, களவு, சினம், பொய்யான அவப் பெயர், மிகுந்த பழிகள், போலீஸ் துறை, மருத்துவம், விஞ்ஞானம், பல்வைத்தியம், தட்டார் தொழில் செய்ப வர்கள்; கருமான், உலோக ஆய்வாளர் (Metallorgy); பொறியியல்துறை, இறப்பு, படை வீரர்கள் ஆகியவற்றைச் செவ்வாய் குறிக்கும். தீவிர இச்சை, எதிர்ப்பு ஒன்றுவிட்ட உறவினர்கள் ஆகியவற்றையும் செவ்வாய் குறிக்கும்.

3, 6, 11-இல் சுப பலன் தருபவன். ஆனால் 12, 5, 9 ஆம் இடங்களில் வேறு கோள்கள் இருந்தால், மேற்கண்ட இடங்களில் சுப பலன் தரான். தனது வாரம், ராசி, நவாம்சத்தில் வலியவன். மீனம், விருச்சிகம், மகரம்,

கும்பம், மேஷம், தெற்கு திக்கு, இராசிகளின் ஆதிபத்தியத்திலும் 10ஆம் இடத்திலும் வலியவன். ஒரு புதுராசியில் நுழைவதற்கு 8 நாள்கள் முன்னாடியே அந்தப் புது ராசியின் கோசார பலனைக் கொடுக்க ஆரம்பிக்கிறான்.

இவன் ஒரு ஜாதகத்தில் 2, 4, 8, 12, 7, 8-ஆம் இடங்களில் இருந்தால், செவ்வாய் தோஷம் எனப்படும். இதே போன்று சமதோஷமுள்ள ஆண் பெண் ஜாதகங்களைத தான் ஜோடி சேர்க்க வேண்டும். வாழ்க்கையில் 28 வயது முதல் 32 வயது வரை இவன் சுபம் அல்லது அசுப பலனைத் தருகிறான்.

**புதன் குறிக்கும் காரகங்கள் :**

புத்திக் கூர்மை, படித்து அறிதல், தெரிந்து கொள்ளல், வாக்கு, வாக்கு வன்மை, கெட்டிக்காரத்தனம், கல்வி, தருக்கம், ஜோதிடம், எழுத்துத் தொழில், புத்தகம் வெளியீடு, கணிதம், பேச்சாளர், பத்திரிகை ஆசிரியர், தூதுவர், எழுத்தாளர், காரியதரிசி, கணக்காயர் (ஆடிட்டர்), பள்ளி ஆசிரியர், எழுத்தர் (குமாஸ்தா) போஸ்ட்மேன், மூளை, தந்திர புத்தி, யுக்தி, அரசியல் தந்திரம் (Diplomacy), கெட்டிக்காரத்தனம், சாமர்த்யம், தாய் மாமன் வகை, நண்பர்கள், வேதாந்தம் (Philosophy) இவை முதலானவை புதனால் குறிக்கப் பெறும். நகைச்சுவை, விகடப் பேச்சு இவையும் புதனையே சாரும். நடனம், நாடகம் பல்வகைத் தொழில், துளிர்க்கும் மரம், ரத்ன பரிக்ஷை பண்ணல், குளிசம், தாயத்து தயார் செய்து மந்திரித்து பரிகாரம் செய்தல் போன்றவையும் புதனுக்கு உரியவைதான்.

புதன் 5, 3, 6, 1, 9, 12-இல் சுப பலன் தருபவன் ஆனால் இதே சமயம் 2, 4, 6, 8, 9, 10, 11-இல் வேறு கோள்கள் இருந்தால் சுப பலன் இராது. தன் ராசி, நவாம்சம், தன் வாரம், மிதுனம், கன்னி ராசிகள், தனுசு

ராசி, உத்தராயனம் இவற்றில் இவன் வலியவன். மருமான் சிற்றப்பன் ஆகிய இவர்களைப் புதனே குறிப்பவன். ஆயில்யம், கேட்டை, ரேவதி, ரோஹிணி, ஹஸ்தம், திருவோணம் ஆகிய நக்ஷத்திரங்களின் சாரத்தில் சுபபலன் தருவான். திருவாதிரை, சுவாதி, புஷ்யம், அனுஷம், சித்திரை, மகம் ஆகிய நக்ஷத்திரங்களின் சாரத்தில் அசுரப் பலனையும் தருபவன்.

ஒரு ராசியை விட்டு மற்றொரு ராசிக்குப் புகு முன்னர் 7 நாள்கள் முன்னதாகவே, புது ராசியின் பலனைத் தர ஆரம்பித்து விடுவான். பத்தாம் இடம், மற்றும் 7-ஆம் இடத்தில் வலுவுள்ளவன். ஒருவன் வாழ்க்கையில் 32 முதல் 35 வயது வரை இவன் தன்னிலைக்கேற்ப சுபம் அல்லது அசுப பலனைத் தருபவன். இவன் ராசி சஞ்சார காலம் முழுவதும் பலன் தருபவன்.

**குருவின் காரகங்கள்:**

வாழ்க்கையின் பொதுத் தரம் (Standard of life), செல்வம், மக்கட்பேறு, மகிழ்ச்சி, அறிவு, புத்தி, உயர் பண்புகள், அறிவுரை கூறுபவர்கள், மந்திரிகள், மதம், தர்மம் சம்பந்தமான காரியங்கள், உயர் குணம், புத்திக் கூர்மை, உயர் கௌரவம், வேதப் பயிற்சி, புண்ணிய காரியம், ஞானம், உடல் பருமன், புஷ்டி, தத்துவம், அன்பு, மரியாதை, ஆண் சந்ததி. மத குருமார்கள், பழம், பழம் தரும் மரங்கள், ஜோதிடம், மூத்த சகோதரம், அரசாங்கத் தால் வரும் விருது, மரியாதை, பட்டங்கள், தேசிய விருதுகள். நண்பர்கள், நியாயம், நேர்மை, நிர்வாகத் திறமை, விரிவுரையாளர், கல்லூரி முதல்வர்கள், துணை வேந்தர்கள், சட்ட நிபுணர், அதிர்ஷ்டம், (பெண் ஜாதகத்தில் இது கணவனையும் குறிக்கும்.) விவேகம், வித்தை, அந்தஸ்து எல்லாம் தருபவன் இவனே. நியாயம் உரைக்கும் நீதிபதி வழக்குரைஞர் (அட்வகேட்), ஆத்ம சிந்தனை, மறு

உலக சிந்தனை, ஆரோக்கியம், தாராள மனம், தரும நெறிப் படல், நியாயம் நிலை நாட்டல், அமைதியான சுபாவம், அரசியல் தந்திரம் (Diplomacy), புரோகிதம் செய்து வைத்தல், மந்திரித் தொழில், மனைவி கணவன் மேல் வைக்கும் மரியாதை, தன தான்யம், தூய்மை, ஐம்புலனடக்கம், பௌத்ரர் என்னும் பேரக் குழந்தைகள், குன்ம சிலேஷ்ம ரோகங்கள் ஆகியவற்றிற்கும் காரகர் இவரே.

குரு 2, 5, 7, 9, 11 ஆம் இடங்களில் ஜாதகத்தில் சுப பலன் தருகிறார். இதே சமயத்தில் முறையே 12, 4, 3, 10, 8 ஆம் ராசிகளில் வேறு கோள்கள் நிற்க மேற்கண்ட சுப பலன் அமையாது. ஜாதகத்தில் கடகம், விருச்சிகம், கும்பம் மற்றும் மீன ராசிகளில் குரு இருந்தால் நற்பலன் தருகிறார். சுயவர்க்கம், சுய வாரம், உத்தராயணம், இரவு பகலின் சந்திகள் இவற்றிலும் லச்னத்திலும் இவர் பலவானாகிறார். வக்ரம், அதிசாரம், அஸ்தங்கதம் ஆகிய நிலைகளில் குரு சுப பலன் கொடுப்பதில்லை. உத்திரம், உத்திராடம், புனர்பூசம், உத்திரட்டாதி, விசாகம் ஆகிய நக்ஷத்திரத்தில் சுப பலன் தருகிறார் (ஜாதகப்படி) அஸ்தம், திருவாதிரை, சதயம், சுவாதி ஆகிய நக்ஷத்திரங்களில் இவர் அசுப பலன் தருகிறார் இராசியின் நடுவில் இவர் முழுச் சுப பலன் தருகிறார். ஒரு ராசியில் புகுவதற்கு 2-மாதங்கள் முன்னாடியே, புது ராசியில் இவர் இருக்கும் கோசார பலன் இவரால் தெரிய ஆரம்பித்து விடுகிறது. ஒரு வருஷ காலம் ஒரு ராசியில் சஞ்சரிக்கும் இவர் அதில் நடு இரண்டு மாதங்களில் சுப பலன் தருகிறார்.

**சுக்கிரனின் காரகங்கள்:**

செல்வம், வாகனங்கள், துணி, அணிகலன் வகைகள், பெண்கள், அவர்களிடம் அனுபவிக்கும் சுகம், திருமணம், சிற்றின்பம், ஐம்புல இன்பம், வாசனைப் பொருட்கள், சுக போக உபகரணங்கள், சுதந்தரமான கூட்டில்லாத

வியாபாரம், வியாபார லாபம், ஆண் சுக்கில வீரியம், காம இச்சை, புஷ்பங்கள், விற்றல், வாங்கல், பசுக்கள், நீர் நிறைந்த இடங்கள், வெண்நிறம். ஆண் பெண் குறிகள் இவை சுக்கிரனால் குறிக்கப்படும். திரைப்படத் தொழில், நடன நாடக இசைக் கலைகள், மதிப்பு, கௌரவம் பட்டம் பதவி போக பாக்யம், வெளி நாட்டுப் பயண சுகம், சுவை யான உணவு, போஜனம், பான சுகம், வசந்தகாலம், அதில் தனக்கு வலிமை, நடன நாட்டிய சாலைகள், ஸ்டூடியோக்கள், படுக்கை அறைகள் ஆண் பெண் உறவாடும் இடங்கள். ஹோட்டல்கள் முதலியவை இவனைச் சார்ந்தவையே. புத்திக் கூர்மை, ஒயிலும் அழகும் நளினமும் கூடிய அங்க அளவுகள், பால் உணர்வைத் தூண்டிவிடும் ஒப்பற்ற அழகு, புலமை, கவிதை, காவியம், புனையும் தன்மை, காவியம் கவிதையால் புகழ், பிறருக்கு ஒத்தாசை செய்தல், பி. ஏ. ரிஸப்ஷனிஸ்ட் போன்ற தொழில்கள், போட்டோக் கலை, மேக்கப் பியூட்டி பார்லர் தொழில் போன்றவையும் சுக்கிரனைச் சார்ந்தவையே. புதையல், லாட்டரி போன்ற திடீர்ப் பணவரவுகளும் இவனால்தான்.

தன் வர்க்கம், தன் ராசி, தன் உச்சராசி, இவற்றில் சுப பலன் தருபவன். 6 ஆம் பாவத்தில் நல்லதும் கெட்டதும் இரண்டும் அற்ற பலன் தருபவன். 7 ஆம் பாவத்தில் கெட்ட பலன்தான். ஜாதகத்தில், இவன் 1,2,3,4,5,8,9.11,12 ஆகிய இடங்களில் சுப பலன் தரு கிறான். இதே சமயம் 8.7,1,10,9,5.11.3.6 ஆகிய இடங் களில் முறையே வேறு கோள்கள் இருந்தால் சுப பலன் தரமாட்டான். இவன் ஆயில்யம் கேட்டை, ரேவதி, கிருத்திகை, சுவாதி, திருவாதிரை, ஆகிய நட்சத்திரங்களில் சுப பலன் தருவான். பரணி, பூரம், பூராடம், மிருக சீரிஷம், சித்திரை, அவிட்டம், ஆகிய நட்சத்திரங்களில் அசுப பலன்களையே தருகிறான். சொந்த நட்சத்திரமான பரணி, பூரம், பூராடத்தில் இவன் தரும் அசுப பலன்

குறைவாக இருக்கும். துலா ராசியில் விசேஷ பலம் உள்ளவன். ஜாதகத்தில் கேந்திரத்தில் இருப்பதால் கோடி கோடி நிவர்த்தி என்பது உண்டு. வாழ்க்கையில் 25 வயது முதல் 28 வயது வரை இவர் தரும் சுபம் அசுப பலனின் தன்மை நன்றாகத் தெரியும். கோசாரத்தில் புது ராசியில் புகுவதற்கு 7 நாள் முன்னதாகவே புது ராசியின் பலனைத் தர ஆரம்பித்து விடுகிறான். ஒரு ராசியின் நடுப் பகுதியில் நல்ல பலன் தருபவன். இவன் ஜாதகத்தில் 4 ஆம் பாவத்தில் இருந்தால் வலுவுள்ளவன்.

**சனியின் காரகங்கள்:**

உத்தியோகம், தொழில், வாழ்க்கை, ஆயுள், இறப்பு, விதி, வாழ்க்கைப் பரிணாமம் (படிப்படி வளர்ச்சி), அச்சம், வறுமை, உழைப்பு, உழைக்கும் தொழிலாளர்கள், உடலுழைப்பு, அவமரியாதை, வியாதிகள், அந்நிய மொழிகள் அறிந்து கொள்ளல், விஞ்ஞானத் தேர்ச்சி, பயிர்த் தொழில், உலோகங்கள், எண்ணெய் வகைகள், பூமிக்கு அடியில் புதையுண்ட பொருள்கள் அவை வெளிப் படல் (புதை பொருள் ஆராய்ச்சித் துறை), வேலைக் காரர்கள், மிகவும் முதியவர்கள், களவு, குரூரமான இரக்கமற்ற செயல்கள், நொண்டி, முடமாதல், பேராசை, தூண்டுதல்கள் (Temptations) போன்றவை சனிக்கு உரியன.

அரசியலில் சனி ஜனநாயகத் தலைவனைக் குறிக்கும். அடிமைத் தனத்தைக் குறிப்பவன். இரும்பு அது சம்பந்தப்பட்ட பொருள்கள். இயந்திரம் பொறிகள், கருமை நிறப் பொருள்கள், தொழிற்சாலை, அதன் தலைமை. பிச்சைக்காரர்கள், பிச்சையால் பிழைப்பு இவற்றைக் குறிப்பவனும் இவனே. வாழ்க்கையில் விடியாத தொல்லை துக்கம் எல்லாம் சனியே தருபவன், கண்ணீர் பெருக்கி

-அழச் செய்பவன் இவனே. பழைய உணவு ஊசிப்போனது எல்லாம் இவனால் குறிக்கப்படும்.

மூத்த வயதில் செல்வம்; ஆயுளுக்குக்காரகன், கழிவுப் பொருட்கள் போடுமிடம், கழிப்பிடம், எச்சில் உணவு போடும் இடங்கள். பாழ் வீடுகள் எல்லாம் இவனால் குறிக்கப்படுகின்றன. ஆபத்து, விபத்து, மனக் கஷ்டம், கெட்ட நடத்தை, நியாயமற்ற மனப்பான்மை, வெள்ளாட்டி, இரக்கமற்ற தொழில், நொண்டித் தனம், அங்க ஈனம், கண்ணாடி, எரு, எண்ணெய் வகைகள், எருமைக் கடா, எள்ளு, உப்பு, ஒட்டகம் எல்லாம் இவனால் குறிக்கப் பெறுகின்றன. நீதித் துறை, நீதிபதித் தொழில், இவனுடையதே. யோகப் பியாசம், உண்ணா நோன்பு, கருமாதி போன்ற காரியங்களில் உண்ணும் சாப்பாடு, தைரியம் மெத்தனம், கீழ்த்தர இன்ப நுகர்ச்சி, கவலை, அளவுக்கு மீறிய செலவு, பிணம் தூக்கும் தொழில், அடிமட்ட நிலைத் தொழிலாளர்கள் எல்லாம் சனிக்கு உரியவையே.

3,6,11 ஆம் இடங்களில் இவன் சுபபலன் தருகிறான். இதே சமயம் 12, 9, 5, ஆம் இடங்களில் வேறு கிரகங்கள் இருந்தால், சுபபலன் அசுப பலனாகிவிடும். கண்டச்சனி அர்தாஷ்டமச்சனி. அஷ்டமச் சனி, 7½ நாட்டுச்சனி இப்படி பல வகையாலும் சனியின் தொல்லை உண்டு. 7 இல் மற்றும் மகர கும்ப ராசிகளில், துலா ராசி ஆகியவற்றில் இவன் சுபபலன் தருபவன். ஒரு ராசியின் முடிவில், சனிக் கிழமையில், தன் வர்க்கங்களில், இவ்ன் சுபன். கிருஷ்ண பட்சத்தில், வக்ரமடைந்த சனி வலுப்பெறுகிறான். இரவு நேரத்தில் பிறந்த குழந்தைக்கு இவன் பித்ருகாரகன். ஒருவன் வாழ்க்கையில் 36 முதல் 42 வயது வரை இவனால் சுபம் அல்லது அசுப பலன் ஏற்படுகின்றன. ஒரு ராசியுள் புகுவதற்கு 6 மாதத்திற்குமுன் இவன் புது ராசியின் கோசார பலனைத்தர ஆரம்பிக்கின்றான்.

**இராகுவின் காரகங்கள்:**

தகப்பன் வழிப் பாட்டன், பொய் வாதங்கள், இங்கும் அங்கும் போதல், சலனம், வெளிநாட்டவர்கள், மிகவும் தாழ்த்தப்பட்டவர்கள், கடுமையான சுடும் தைக்கும் பேச்சு, பாம்பு, பாம்பு கடி, கனவு, கெட்ட எண்ணம், விதவை, உடலில் காணும் வீக்கங்கள், அரசு அதாவது சாம்ராஜ்யம், வேதாந்தம் தெய்விக ஆத்மிக விசாரணை, நஞ்சு (விஷம்) இனம்காண முடியாத நோய் (Undiagnisable illness) குஷ்டம், கருமையான தோல் வியாதி, புண்ணியத் தல யாத்திரை, மந்திர தந்திர உபாசனை, பில்லி, ஏவல் சூனியம் போன்ற அபிசார வித்தைகள், உலகியல் அறிவு முதிர்ச்சி, அரசியல், பெரும் பதவிகள், புகழ், ஆற்றல் எல்வாவற்றையும் தருபவன். சுபபலன், அசுப பலன் இரண்டும் தருபவன். பொய், கள்ளக் கடத்தல், சூதாட்டம் எல்லாம் இவன் வாரியமே (Department) தான். இளமையில் கல்வித் தடங்கல் இவனால் ஏற்படும். ஓர் ஆளை ஒரு பெண் மூலம் வாழ்க்கையின் உச்சகட்டத்திற்கு இட்டுச் செல்பவன் இவனே, முஸ்லிம் வகுப்பினரையும் குறிப்பவன் ராகுவே. அரபி உருது மொழிகளுக்கு இவன் காரகன். மேஷம், ரிஷபம், கடகம், கன்னி, மகரம் ஆகிய ராசிகளில் அவை எந்த பாவமாக வந்தாலும் நன்மை தருபவன். வாழ்க்கையில் துக்கம் என்ற அம்சம் இவனுடையது. வேலைக்காரர்கள், அடிமையாள், சோம்பேறித் தனம் ஆனால் புத்திக் கூர்மை, கசாப்புத் தொழில், கருங்கல் வகை, கண்ணாடி எல்லாம் ராகுவால் குறிக்கப் பெறுபவை. கரம்பு நிலம், பசுமையற்ற காய்ந்த வனம் வனாந்திரம், கருட வித்தை, பாம்பாட்டும் தொழில், விஷ வைத்தியம் எல்லாம் ராகுவால் குறிக்கப் பெறுபவையே. அதிக உடல் வலிமை, முரட்டுத் தைரியம், கெட்ட நிகழ்ச்சிகள், சூழ்ச்சிகள், அது சம்பந்தப்பட்ட நாச வேலைகள், அரசியல் சூழ்ச்சிக் கொலைகள், மதுப் பழக்கம், ஒற்றர்

வேலை, கீழ்த்தரமான காரியங்கள் சில, இவற்றையும் ராகு குறிப்பான்.

சிமெண்ட், கடுகு, கடுகு எண்ணெய், அழுகும் பொருள் தோல், தோல் பதனிடும் தொழில், ஈட்டி பிச்சுவா போன்ற ஆயுதங்கள், மறைந்து போர்செய்யும் கொரில்லாப் போர், மிஷின் தொழிற்சாலை, அச்சுத் தொழில், இவையும் ராகுவைச் சார்ந்தவையே. மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், கும்பம் ஆகிய ராசிகளில் இவன் சுபபலன் தருகின்றான். எந்த பாவத்தில் நின்றாலும் அதன் நல்ல பலனை அழித்து விடுகிறான். ரிஷபம், துலாம் லக்னங்களுக்கு யோககாரக னாகக் கொள்ளப்படுகிறான் இவன். திருவாதிரை, சுவாதி, சதயம் ஆகிய நட்சத்திரங்களில் சுப பலன்களைத் தரு கின்றான். நீண்ட காலம் திட்டமிட்டு செய்யும் சூழ்ச்சியும் இவனே. கலியுகத்தில் பிரத்தியக்ஷமாகப் பலன் அளிப்பவனா கவும் சொல்லப்படுகின்றான்.

ஒருவன் வாழ்க்கையில் 42 முதல் 48 வயது வரை இவன் சுபம் அல்லது அசுப பலனைத் தருகின்றான். 1 ஆம் பாவத்தில் இவன் வலியவன். கோசாரத்தில் ஒரு புது ராசிக்கு பெயருவதற்கு 3 மாதத்திற்கு முன்னாடியே அதன் பலனைத் தருகிறான்.

**கேதுவின் காரகங்கள்:**

தாய் வழிப்பாட்டன், காயம், அபிசார வித்தை, கொம்புள்ள விலங்குகள் இவற்றால் தாக்கப்படல், நாய், கோழி, இருமல் காசம், பகைவரால் தொல்லை, வெண் குஷ்டம், லுகோட்ராமா என்ற நோய்கள் ஆகியவை கேது சம்பந்தப்பட்டவை.

ஆத்ம சாக்ஷாத்காரம், தன்னைத்தான் உணர்தல் இதுவும் கேதுவுடையதே. ஏன் என்றால் இவன் ஞான காரகனாதலால். ஞான வேத வேதாந்தங்களுக்கும்

இருப்பிடம். அறிவு, மோட்சம் இவற்றுக்கும் இவனே காரகன். யோகி, விஞ்ஞானி, சிவபக்த சீலன். வேள்வி களுக்கு நாயகன். மதக் கோட்பாடுகள் பந்தம் பாசம் இவற்றை ஆராய்பவன் இவனே, இவனால் நோயும் ஏற்படும், நோய் நிவாரணமும் ஏற்படும், இவன் வைசூரி. தோல் வியாதிகள் முதலியவற்றையும் குறிப்பான். இவன் 7 ஆம் இடத்தில் வலியவன். அதிசயக் கனவுகள் இவனா லேயே ஏற்படுகிறது. சுளுக்கு, மூச்சுப் பிடிப்பு, விடாத காய்ச்சல். ஏவல் பில்லி சூனியம் முதலியவற்றால் ஏற்படும் பாதிப்பு, இந்த நோய்கள் இவனால் தான். கை கால், குடைச்சல் நரம்பு சம்பந்தமான கோளாறுகள் இவையும் கேது வால்தான். விதவைப் பெண் சூழ்ச்சி, அவள் தொடர் பால் தொல்லை, அவப் பெயர், கேது வால் ஏற்படலாம்.

இவன் ரிஷபம், மீனம் ராசிகளில் பலவான். மிதுனம் தனுசு, கன்னி, மகரம், மீனம், அஸ்வினி, மகம், மூலம் இவற்றில் சுபபலன் தருபவன். சுபக்கோள்களுடன் சேர்ந்தால் சுபபலன் தருவான். சில வித்வான்கள் இவனைச் சுபக் கோளாகவே கொள்கிறார்கள். ஒருவன் வாழ்க்கை யில் 48 முதல் 54 வயது வரை இவனால் பலன் ஏற்படு கின்றது. ஒரு ராசிக்குப் பெயருவதற்கு 3 மாதத்திற்கு முன்னாலேயே புது ராசியின் கோசார பலனைக் கொடுக்க ஆரம்பித்து விடுகிறான்.

## ஒன்பது கோள்களின் சுருக்கமான காரகங்கள்

1. சூரியன் — ஆத்மா (தான்) தகப்பன், கர்மம்
2. சந்திரன் — தாய், மனம்
3. செவ்வாய் — இளைய சகோதரன், தைரியம்
4. புதன் — தாய் மாமன், கல்வி, வித்தை
5. குரு — சந்ததி, முக்கியமாக மகன், மூத்த சகோ தரம், தனம், லாபம், கர்மம். வினை.

6. சுக்ரன் — மனைவி, காதல் விவகாரம், கலை, வாணிபம்.

7. சனி — உத்தியோகம், தொழில், ஆயுள், நஷ்டம் பகைவர்.

8. ராகு — தகப்பன் வழிப்பாட்டன், ஆத்மிக தெய்விக சிந்தனை

9. கேது — தாய்வழிப் பாட்டன், மோட்சம், ஞானம்

கிரக காரகங்கள் பதகம் எண் — I

| விஷயம் | சூரியன் | சந்திரன் | செவ்வாய் |
|---|---|---|---|
| சாதி | க்ஷத்திரியர் | வைசியர் | க்ஷத்திரியர் |
| பால் | ஆண் | பெண் | ஆண் |
| நிறம் | சிவப்பு | வெண்மை | செவ்வெண்மை |
| குணம் | சத்வம் | சத்வம் | தாமசம் |
| உத்யோகம் | ராஜா | ராஜா | சேனாதிபதி |
| அதிதேவதை | அக்னி | ஈஸ்வரன் | சுப்ரமணியன் |
| பிரத்யதி தேவதை | ருத்ரன் | கௌரி | பூமாதேவி |
| திக்கு | கிழக்கு | வடமேற்கு | தெற்கு |
| பூதம் | தேயு (தீ) | நீர் | தேயு |
| வித்தை | சம்ஸ்க்ருதம் | தமிழ் | மந்திரம் |
| உடல் தாது | எலும்பு | ரத்தம் | மஜ்ஜை |
| பருவம் | கிழவன் | பாலன் | குமரன் |
| வாகனம் | ரதம் | முத்து விமானம் | அன்னம் (ஆடு) |
| இஷ்டகாலம் | பகல் | இரவு | பகல் |
| சுவை | கைப்பு காரம் | உப்பு | கைப்பு |
| சுபாவம் | குரோதம் | சௌமியம் | குரூரம் |

| | | | |
|---|---|---|---|
| உச்சம் | மேஷம் | ரிஷபம் | மகரம் |
| நீசம் | துலாம் | விருச்சிகம் | கடகம் |
| ஆட்சி | சிம்மம் | கடகம் | மேஷ, விருச்சிகம் |
| பார்வை | 7 | 7 | 4, 7, 8, |
| மித்ரு | சந், செ, குரு | சூரி, புத, | சூரி, சந், குரு |
| சமம் | புதன் | செ, குரு, சுக்ரன், சனி | சுக்ரன், சனி |
| பகை | சுக்ர, சனி | — | புதன் |
| தான்யம் | கோதுமை | நெல் | துவரை |
| சமித்து | எருக்கு | பலாசு | கருங்காலி |
| புஷ்பம் | செந்தாமரை | வெள்ளாம்பல் | சண்பகம் |
| ரத்னம் | மாணிக்கம் | முத்து | பவளம் |
| உலோகம் | தாமிரம் | வெண்கலம் | செம்பு |
| தானம் | கபிலைபசு | சங்கு | செவ்வெருது |
| வஸ்திரம் | செம்பட்டு | வெண்பட்டு | செம்பட்டு |
| ஆசனம் | அஷ்டதள பத்மம் | சதுரம் | முக்கோணம் |
| இயற்கை | பாபி | பகுளம் பாபி தேய்பிறை) | பாபி |
| பார்வை | சமப் பார்வை | கீழ்வெட்டு பார்வை | மேல்நோக்கு பார்வை |
| நாடி | பித்தம் | சிலோத்துமம் (கோழை) | பித்தம் |
| உணவு | சூடு | குளிர்ச்சி | சூடு |
| பலம் | ஆதி | எப்போதும் | ஆதி |
| அங்கம் | மார்பு | குரல்வளை | தலை |
| கோத்திரம் | காச்யபர் | ஆத்ரேயர் | பரத்துவாசர் |
| உருவம் | நடு | குள்ளம் | குள்ளம் |
| நவத்துவாரம் | வ. மூக்கு | இ. மூக்கு | வாய் |
| வலியகோள் | இராகு. கேது | சூரியன் | சனி |

| | | | |
|---|---|---|---|
| தன்மை | ஸ்திரம் | சஞ்சலம் | உக்ரம் |
| அதிகாரம் | ஆத்மா | மனம் | சக்தி |
| ஆப்தர் | தந்தை | தாய் | சகோதரர் |
| வித்தை | ராஜ வித்தை அரசியல் | ஜோதிஷம் (மொழி) | வில் வாள் துப்பாக்கி |
| ருது | கிரீஷ்மம் | வர்ஷம் | கிரீஷ்மம் |
| பசு | பட்சி | வேகமான விலங்கு | நாற்கால் |
| காரக இடம் | காடு மலை | நீர்நிலை | காடுமலை |
| வருஷம் | 50 | 70 | 10 |
| கிரீடாஸ் | | | |
| தானம் | தேவாலயம் | நீர்க்கரை | தீ இடம் |
| காலம் | அயனம் | கணம் | நாள் |
| தோற்றல் | சனி | புதன் | குரு |
| பாக்ய காலம் | 22-24 | 24,25 | 28-32 வயது |
| சாரநிலை | 1 மாதம் | $2\frac{1}{4}$ நாள் | $1\frac{1}{2}$ மாதம் |
| சாரநிலைக்கு பின்பார்வை | 5 நாள் | 3 நாழி | 8 நாள் |
| அடுத்த வீட்டின் பார்வை | 7 நாள் | 3 நாழி | 8 நாள் |
| மறைவு இடம் | 8,12 | 3.8,12 | 3,12 |
| நாடு | கலிங்கம் | யவனம் | சிலோன் முதல் க்ருஷ்ணா வரை |
| க்ஷேத்திரம் | ஆடுதுறை ஆரியனார் கோயில் | திருப்பதி | வைத்தீஸ் வரன் கோயில் |
| தசைவருஷம் | 6 | 10 | 7 |

| விஷயம் | புதன் | குரு | சுக்ரன் |
|---|---|---|---|
| சாதி | வேளாளர் | பிராமணர் | பிராமணர் |
| பால் | அலி | ஆண் | பெண் |
| நிறம் | பச்சை | மஞ்சள் | வெண்மை |
| குணம் | ராஜசம் | சத்வம் | ராஜசம் |
| உத்யோகம் | இளவரசு | மந்திரி | மந்திரி |
| அதி தேவதை | விஷ்ணு | இந்திரன் | இந்திராணி |
| பிரத்யதி தேவதை | புருஷோத் தமன் | பிரம்மா | சசிதேவி |
| திக்கு | வடக்கு | வடகிழக்கு | தென்கிழக்கு |
| பூதம் | பூமி | ஆகாயம் | தண்ணீர் |
| வித்தை | ஜோதிஷம் | சம்ஸ்க்ருதம் | சம்ஸ்க்ருதம் |
| உடல் தாது | தோல் | மூளை | இந்திரியம் |
| பருவம் | பாலன் | இளைஞன் | நடுவயது |
| வாகனம் | குதிரை | யானை | கருடன் |
| இஷ்ட காலம் | காலை | காலை | இரவு |
| சுவை | அறுசுவை | இனிப்பு | புளிப்பு |
| சுபாவம் | சௌமியம் | சௌமியம் | சௌமியம் |
| உச்சம் | கன்னி | கடகம் | மீனம் |
| நீசம் | மீனம் | மகரம் | கன்னி |
| ஆட்சி | மிதுன, கன்னி | தனு, மீனம் | ரிஷப, துலாம் |
| பார்வை | 7 | 5, 7, 9 | 7 |
| மித்ரு | சூரி, சுக்ர | சூரி, சந் அங் | புத, சனி |
| சமம் | அங், குரு, சனி | சனி | அங், குரு |
| பகை | சந்திரன் | புத, சுக்ரன் | சூரி, சந்திரன் |
| தான்யம் | பயறு | கடலை | மொச்சை |
| சமித்து | நாயுருவி | அரசு | அத்தி |
| புஷ்பம் | வெண் காந்தள் | முல்லை | வெண்தாமரை |

| | | | |
|---|---|---|---|
| ரத்னம் | பச்சை | புஷ்பராகம் | வைரம் |
| உலோகம் | பித்தளை | பொன் | வெள்ளி |
| தானம் | குதிரை | பானை | சுமங்கலிக்கு புடவை |
| வஸ்திரம் | பச்சைப் பட்டு | மஞ்சள்பட்டு | வெண்பட்டு |
| ஆசனம் | அம்பு வடிவம் | நீண்டசதுரம் | பஞ்ச கோணம் |
| இயற்கை | சுபன் | சுபன் | சுபன் |
| பார்வை | சமபார்வை | சமபார்வை | மேல்நோக்குபார்வை |
| நாடி | வாதம் மூன்றும் | வாதம் | சிலேத்துமம் |
| உணவு | சமம் | குளிர்ச்சி | குளிர்ச்சி |
| பலம் | எப்போதும் | மத்தியில் | மத்தியில் |
| அங்கம் | கழுத்து | வயிறு | முகம் |
| கோத்திரம் | ஆத்திரேயர் | அங்கீரசர் | பார்க்கவர் |
| உருவம் | நெட்டை | நெட்டை | நடு |
| நவத்துவாரம் | இடக் காது | வலக்காது | குறி |
| வலியகோள் | செவ் | சுக்கிரன் | சந்திரன் |
| தன்மை | கலப்பு | மிருது | லகுவான |
| அதிகாரம் | வாக்கு | ஞானம் | காமம் |
| ஆப்தர் | அம்மான் | சத்புத்ரன் | மனைவி |
| வித்தை | கணிதம் | வேதாந்தம் | சங்கீதம் |
| ருது | சரத் | ஹேமந்த | வசந்தம் |
| பசு | பக்ஷி | இருகால் | இருகால் |
| காரக இடம் | வித்வான் வீடு | நீர்நிலை | பெண்கள் இருப்பிடம் அந்தப்புரம் |
| வருஷம் | 16 | 30 | 16 |

கோ—3

| | | | |
|---|---|---|---|
| கிரீடாஸ்தானம் | விளையாடுமிடம் | பண்டாரம் | படுக்கையறை |
| காலம் | இருது | மாதம் | பக்ஷம் |
| தோற்றல் | புத | சந்திரன் | புதன் |
| பாக்யகாலம் | 32-36 வயது | 16-22 வயது | 25-28 வயது |
| சாரநிலை | 1 மாதம் | 1 வருஷம் | 1 மாதம் |
| சாரநிலைக்கு பின்பார்வை | 7 நாள் | 2 மாதம் | 7 நாள் |
| அடுத்த வீட்டின் பார்வை | 7 நாள் | 2 மாதம் | 7 நாள் |
| மறைவு இடம் | 3, 8, 12 | 3, 8, 12 | 3, 8 |
| நாடு | விந்தியம் கங்கை மகதம் | கௌதமி முதல் விந்தியம் சிந்து | கிருஷ்ணா முதல் கௌதமி வரை |
| க்ஷேத்திரம் | மதுரை | செந்தூர் | திருவரங்கம் |
| தசை வருஷம் | 17 | 16 | 20 |

| விஷயம் | சனி | ராகு | கேது |
|---|---|---|---|
| சாதி | தாழ்த்தப்பட்ட | நீசர் | நீசர் |
| பால் | அலி | அலி | அலி |
| நிறம் | கருமை | கருமை | பல நிறம் |
| குணம் | தாமசம் | தாமசம் | தாமசம் |
| உத்யோகம் | ஊழியன் | பரிசாரகன் | பரிசாரகன் |
| அதிதேவதை | யமன் | காலன் | பிரம்மா |
| பிரத்யதி தேவதை | பிரஜாபதி | சர்வேஸ்வரன் | சித்ரகுப்தன் |
| திக்கு | மேற்கு | தென் மேற்கு | வடகிழக்கு |

| | | | |
|---|---|---|---|
| பூதம் | வாயு | ஆகாயம் | தண்ணீர் |
| வித்தை | பிறமொழி | பிறமொழி | பிறமொழி |
| உடல் தாது | நரம்பு | தோல் மணம் | தோல் ஞானம் |
| பருவம் | கிழவன் | கிழவன் | குமரன் |
| வாகனம் | காகம் | ஆடு | சிங்கம் |
| இஷ்ட காலம் | மாலை | மாலை | பகல் |
| சுவை | துவர்ப்பு | புளிப்பு | புளிப்பு |
| சுபாவம் | குரூரம் | குரூரம் | குரூரம் |
| உச்சம் | துலாம் | விருச்சிகம் | ரிஷபம் |
| நீசம் | மேஷம் | ரிஷபம் | விருச்சிகம் |
| ஆட்சி | மகர கும்பம் | கன்னி | மீனம் |
| பார்வை | 3, .10 | , | 7 |
| மித்ரு | புத, சுக் | — | — |
| சமம் | குரு | — | — |
| பகை | சூரி, சந், அங் | — | — |
| தான்யம் | எள் | உளுந்து | கொள்ளு |
| சமித்து | வன்னி | அறுகு | தருப்பை |
| புஷ்பம் | கருங்குவளை | மந்தாரை | செவ்வாம்பல் |
| ரத்னம் | நீலம் | கோமே தகம் | வைடூரியம் |
| உலோகம் | இரும்பு | கருங்கல் | துருசுக்கல் |
| தானம் | எள்ளு எருமை | கறுப்புக் கடா உளுந்து | பலநிறக்கடா கொள்ளு |
| வஸ்திரம் | நீலப்பட்டு | கறுப்புப் பட்டு | சிவப்புப் பட்டு |
| ஆசனம் | வில்லு | சுளகு | கொடி |
| இயற்கை | பாபி | பாபி | பாபி |
| பார்வை | கீழ்நோக்குப் பார்வை | மேல் நோக்குப்பார்வை | மேல் நோக்குப் பார்வை |
| நாடி | வாதம் | பித்தம் | பித்தம் |

| | | | |
|---|---|---|---|
| உணவு | சமமாக | சமமாக | சமமாக |
| பலம் | கடைசியில் | கடைசியில் | கடைசியில் |
| அங்கம் | தொடை | முழங்கால் | உள்ளங்கால் |
| கோத்திரம் | காஸ்யபர் | பைஷீனகர் | ஜைமினி |
| உருவம் | குள்ளம் | நெட்டை | நெட்டை |
| நவத்துவாரம் | ஆசனம் | வலக்கண் | இடக்கண் |
| வலியகோள் | குரு | — | — |
| தன்மை | தீக்ஷணியம் | — | — |
| அதிகாரம் | துக்கம் | துக்கம் | துக்கம் |
| ஆப்தர் | வேலையாள் | பரிசாரகன் | பரிசாரகன் |
| வித்தை | காய்தா | காருடீ | தந்த்ரம்மந்திரம் |
| ருது | சிசிரம் | அதிகுளிர் | அதிவெயில் |
| ப்சு | நாற்கால் | — | — |
| காரக இடம் | காடு மலை | காடு | முள்காடு |
| வருஷம் | 100 | 100 | 100 |
| க்ரீடாஸ்தானம் | கீழ்த்தர இடம் | கிராமக் கோடி | சுடுகாடு |
| காலம் | வருஷம் | வருஷம் | வருஷம் |
| தோற்றல் | செவ்வாய் | — | — |
| பாக்ய காலம் | 36-42 வயது | 42-48வயது | 48-54 வயது |
| சாரநிலை | 2½ வருஷம் | 1½ வருஷம் | 1½ வருஷம் |
| சாரநிலைக்கு பின்பார்வை | 3 மாதம் | 3 மாதம் | 3 மாதம் |
| அடுத்த வீட்டின் பார்வை | 3 மாதம் | 3 மாதம் | 3 மாதம் |
| மறைவுஇடம் | 8,12 | 8,12 | 8,12 |
| நாடு | கங்கை முதல் இமயம்வரை | அம்பரம் | பர்வதம் |
| க்ஷேத்திரம் | திருநள்ளாறு | காளஹஸ்தி | காளஹஸ்தி |
| தசைவருஷம் | 19 | 18 | 7 |

அத்தியாயம் — 3

# கிரஹசீல சங்கிரஹம்

ஒன்பது கிரஹங்களுக்கும் பொதுவான சில விஷயங்களை இங்கு கொடுக்கிறோம்.

1. குரு சுக்ரன் முழுச்சுபர்கள். இதில் சுக்ரன் இவ்வுலக இன்பங்களையே தருபவன். குரு, பக்தி,யோகம், மறு உலக இன்பம், சுகம் இவற்றைத் தருபவன், சுக்ரனின் பாதிப்பால் மனிதன் சுயநலவாதியாகிறான். குருவின் பாதிப்பால் மனிதன் தியாகபுத்தியுள்ளவனாகிறான். சேவை தொண்டு, பிறநலம் எண்ணுபவனாகவும் ஆகிறான்.

2. சனி, செவ்வாய் பாபக்கிரஹங்கள். இதில் சனி அதிக பாபியாகக் கொள்ளப்பட்டாலும் சனியின் முடிவான பரிணாம பலன் சுபமாகவே இருக்கும். இவன் ஜாதகனை துர்ப்பாக்யம், கஷ்டம், துக்கம் இவற்றில் மாட்டிவிட்டு அந்த அனுபவத்தால் ஜாதகனைப் புடம்போட்ட தங்க மாக, நல்லவனாக, சாத்வீகனாக்கி விடுகிறான். ஆனால், செவ்வாய் ஒருவனுக்கு ஆத்திரம், உணர்ச்சி, கோபம், கொதிப்பு, தூண்டுதல்கள் இவற்றை ஏற்படுத்தி, ஜாதகனுக்குக் கடைசி வரை அசுப பலனையே கொடுக்கிறான். ஆசை, விருப்பம், இவற்றை அதிகமாக்கி விடுகிறான்.

3. ஜாதகத்தில், எல்லாக் கோள்களை விட, யார் பலவானாக இருக்கிறானோ, அந்தக் கோளின் சுபாவம் உள்ளவனாகவே ஜாதகன் ஆகிவிடுகிறான்.

4. ராகு சாயாக்கிரஹம் என்றால் கேது அவனுடைய சாயாக்கிரஹமாகும். இதனால் ராகுவைவிட கேதுவுக்கு பாபத் தன்மை குறைவு. சுபத்தன்மையே அதிகம்.

5. கலியுகத்தில் சனி, ராகு, கேதுக்கள் பலவானான கோள்கள். மிதுனமும் கன்னியும் இவர்கள் திரிகோணந் தானம் எனப்படும்.

சூரியனுக்கும் செவ்வாய்க்கும் மகர கும்பங்கள் திரிகோணத் தானங்கள். மற்றக் கிரஹங்களுக்கு சிம்மமும் தனுசும் திரிகோணத்தானங்கள். இங்கே திரிகோணத் தானங்கள் என்று குறிப்பட்டது, இந்த இடங்களில் இவர் களுக்குச் சுபபலன் தரும் வன்மை, சாத்தியம் அதிகமாகிறது என்பதைக் குறிக்கும். மற்றப்படி ஆட்சி, உச்சம், மூலத் திரிகோணம் என்று இவற்றுக்கு சொல்லப்பட்டதற்கும் இதற்கும் சம்பந்தங்கள் இல்லை.

6. லக்னத்திலிருந்து 2 ஆம் இடத்தில் உள்ள கிரஹம் உதயமாகும் சமயத்தில் உள்ளவன், 8 ஆம் இடத்தில் உள்ளவன், அஸ்தமனமான சமயத்தில் உள்ளவன். 6ஆம் பாவத்தில் உள்ளவன், அஸ்தமனத்திற்கு எதிராகவும் 7 ஆம் பாவத்தில் உள்ளவன், அஸ்தமனத்தைப் பார்த்துக் கொண்டும் இருக்கிறான்.

உதய நிலையில் உள்ள கோள் சுபபலனையும் அஸ்த மனமாகும் சமயத்தில் உள்ளவன் அசுப பலனையும் தருவார்கள்.

கோசாரத்திற்கு சந்திர ராசியிலிருந்து பலன் பார்க்கும் போது, ஜென்ம ராசியிலிருந்து 8 ஆம் வீடு முதல் 12ஆம் வீடு வரையில் உள்ள கிரஹங்கள், அந்தச் சமயம் சுபபலன் தரவேண்டிய கோளானால் சுபம் குறைந்தும், பாபபலன் தரவேண்டிய கோளானால் அசுபம் குறைந்தும், விளங்குவதை அனுபவத்தில் காணலாம். இதற்கு எதிரிடை யாக 2 முதல் 7 வரை உள்ள கோள்கள் சுப பலன் கொடுக்க வேண்டியதை அதை அதிகரித்து அதிக சுபத்தையும் பாப பலன் தரவேண்டியவை பாப பலனை அதிகரித்தும் தருவார்கள்.

உதாரணமாக. குரு 2,5,7,9,11 ஆம் இடங்களில் சுப பலன் தருகிறான். இதில் 2,5 இல் தருவதைவிட 7,9,11ஆம் இடங்களில் அதிக சுப பலனைத் தருவான்.

இதே போல் சனியை எடுத்துக் கொண்டால் 1,2,4,5 ஆகிய இடங்களில் இவன் தரும் அசுப பலன் குறைந்தும், 7,8,9,10,12 ஆம் இடங்களில் அசுப பலன் அதிகமாகவும் காணும், ஆனால், விதி விலக்காக 7½ சனி காலத்தில் மட்டும் ஜென்மச் சனிதான் அதிக அசுபத்தைத் தரும்.

7. ஆட்சி நட்பு உச்ச வீடுகளில் கோள்கள் சுபபலன் களைத் தருவது அதிகமாகும், சம ராசிகளில் மத்திம பலனும், சத்துரு நீச ராசிகளில் அதிக அசுப பலனையும் தரும்.

8. சூரியன் தலையையும், முகத்தையும் பீடிக்கிறான், சந்திரன் இதயம் கழுத்தையும் பீடிக்கிறான். செவ்வாய் முதுகு வயிறு இவற்றைப் பீடிக்கிறான். புதன் கைகளைப் பீடிக்கிறான். குரு இடுப்பு முழங்கால்களைப் பீடிக்கிறான், சுக்கிரன் ஜனனேந்திரியங்களைப் பீடிக்கிறான், சனி கால் களைப் பீடிக்கிறான். சனியைப் போல் ராகுவும், செவ்வாயைப் போல் கேதுவும் பீடிக்கிறார்கள்.

9. சனியைவிடச் செவ்வாயும், செவ்வாயைவிடப் புதனும், புதனைவிடக் குருவும், குருவைவிடச் சுக்கிரனும், சுக்கிரனை விடச் சந்திரனும், சந்திரனை விடச் சூரியனும், ஒருவரை விட ஒருவர் பலவான்கள், சனியைவிட இரு மடங்கு செவ்வாயும், மூன்று மடங்கு புதனும், நான்கு மடங்கு குருவும், ஐந்து மடங்கு சுக்கிரனும், ஆறு மடங்கு சந்திரனும், ஆறு மடங்கு சூரியனும், பலவான்கள் என்று கொள்ள வேண்டும்.

10. சுபக்கோளால் பார்க்கப்பட்ட கோள், பார்வை யால் பலிஷ்டன் ஆகிறான்.

11. உச்சத்தில் ஒரு கோள் முழுபலவான், மூலத் திரிகோணத்தில் ¾ பலவான், ஆட்சியில் ½ பலவான், நட்பு ராசியில் ¼ பலவான், சமராசியில் ⅛ பலவான், நீசத்தில் 1/16 பலவான், அதாவது பலஹீனன் ஆகிறான்.

சந்திரனும் சுக்கிரனும் சம ராசிகளில் அதாவது ரிஷபம் கடகம், கன்னி, விருச்சிகம், மீனம் ஆகிய ராசிகளில் பல வான்கள். மற்ற கோள்களான, சூரியன், புதன், செவ்வாய் குரு, சனி, ராகு, கேது ஆகியவர்கள் மற்ற ராசிகளில் பலவான்கள்.

12. ஜாதகத்தில் லக்னம் கிழக்கு, 7 ஆம் இடம் மேற்கு, 4 ஆம் இடம் வடக்கு, 10 ஆம் இடம் தெற்கு, சிலர் 4ஐ வடக்காகக் கொள்வர். லக்னத்தில் புதனும் குருவும் (கிழக்கில்), வடக்கில் 4ல் சுக்கிரனும் சந்திரனும், மேற்கில் சனியும், தெற்கில் 10ல் சூரியனும் பலவான்கள் ஆவார்கள்,

13. பாவக்கோள்கள் கிருஷ்ண பக்ஷத்திலும், சுபக் கோள்கள் சுக்லபக்ஷத்திலும் பலவான்கள்.

14. ஜைமினி முனிவரின் கொள்கைப்படி ஒரு ராசியில் எந்த கிரகம் அதிக பாகையில் அதாவது கடைசியில் இருக் கிறானோ அவன் ஆத்மகாரகன் எனப்படுவான். ஒரு ஜாதகத்தில் இந்த ஆத்மகாரனிடத்திருந்து 1,4,7,10, ஆகிய இடங்களில் உள்ள கோள் அதிக பலவான். அதை அடுத்த பணபர ஸ்தானத்தில் அதாவது 2,5,8,11, ஆம் இடங்களில் (ஆத்மகாரகனிடம் இருந்து) உள்ளவர்கள் ½ பங்குபலவான். இதை அடுத்த 6 ஆபாக்கிலிமம் எனப்படும். 3,6,9,12 ஆகிய இடங்களில் ¼ பங்குதான் பலவான் ஆவார்கள்.

15. கோசரத்திலும் பல ஜோதிடத்திலும் கிரஹங் களின் அவஸ்தை எனப்படும் நிலைகளுக்கு ஏற்பப்பலன் தருவதில் விததியாசம் ஏற்படுகிறது.

ஒற்றைப்படை ராசிகளில் முதல் 6 பாகை பால அவஸ்தை, அடுத்த 6 பாகைகள் (7 முதல் 12) குமாரபருவம்

அடுத்த 6 பாகைகள் (13 முதல் 18), யௌவனம் (வாலிப) பருவம், அடுத்த 6 பாகைகள் (19 முதல் 24) கிழப் பருவம் அதற்கடுத்த கடைசி 6 பாகைகள் (25 முதல் 30) இறந்த பருவம், என்று கொண்டு, அந்தந்தப் பகுதியில் உள்ள கோள்களின் பலனை அறிய வேண்டும். இரட்டை இராசிகளில் இந்த அவஸ்தைகள் முதல் 6 பாகைகள் 'இறப்பு, என்று ஆரம்பித்து, தலை கீழாகப் பலனைத் தருகின்றன. இப்படிச் சொன்னவற்றில் பால அவஸ்தையில் மிக்க குறைந்த $\frac{1}{4}$. பலனும் குமாரப் பருவத்தில் $\frac{1}{2}$ பலனும், யுவப் பருவத்தில் முழுப்பலனும்,கிழப்பருவத்தில் உள்ள கோள்கள் கெட்ட பலனும், இறப்புப் பருவத்திலுள்ள கோள்கள் இறப்புக்குச் சமமான பலனும் கொடுப்பதாகவும் கொண்டு ஒரு ராசி ஜென்ம ராசியிலிருந்து எத்தனையாவது ராசி என்று கணக்கிட்டு, அதில் கோசாரப்படி நிலவும் கோள் சுபபலன் தருவதானால், அதுவுள்ள அவஸ்தைகளுக்கேற்பச் சுபபலனைக் கூட்டியும் (முறையே ஒன்றுக்கொன்று அதிகமாகவும்) அசுபபலன் தரும் கோளானால் பால, இறப்பு குமார பருவங்களில், அசுபபலன்களை முறையே ஒன்றுக்கொன்று அதிகமாகவும், யுவப்பருவத்தில் செல்லும் கிரகம் எல்லாவற்றையும் விட மிக அசுபபலன் தருவதாகவும் கொள்ள வேண்டும்.

16. வக்ரகதி, நேர்கதி, அதி வேக அதிசார கதி என்ற கோள்களின் சஞ்சாரத்தில்—

சூரியனுடன் இணைந்த கோள் 'அஸ்தங்கதன்' என்று சொல்லப்படுகிறான். சூரியனிலிருந்து பிரிந்தவர்கள் 'உதயமானவர்கள்' என்று சொல்லப்படுகிறார்கள். சூரிய, சந்திரர் இருவருக்கும் வக்ரகதி கிடையாது. இராகுவும் கேதுவும் எப்பொழுதும் வக்ர கதியிலேயே இருக்கிறார்கள், எனவே, இந்த நால்வருக்கும், இந்த வகையில், கதி பேதத்தால் ஏற்படும் பலனில் வித்தியாசம் கிடையாது. மற்றவற்றைப்பார்ப்போம்.

சூரியனிலிருந்து 2இல் உள்ள கோள் அதிசாரம் அடைகிறான். 3ஆம் ராசியில் சமகதி அடைகிறான். 4ஆம் இடத்தில் உள்ளவன் மந்த அதி அடைகிறான். 5, 6 ஆவது ராசிகளில் உள்ளவன் நேர்கதி உள்ளவன். 7,8,ஆம் இடங்களில் உள்ளவன் வக்ரகதி அடைகிறான். 9ஆம் இடத்தில் உள்ளவன் வக்ரகதி அடைகிறான். 10ஆம் இடத்தில் வ்க்ரநிவர்த்தி அடைகிறான். மீண்டும் 11, 12 ஆம் இடங்களில் அதிசாரம் என்னும் வேக கதியை அடைகிறான்.

இவற்றில், ஒவ்வொரு நிலையும் எத்தனை நாள்கள் செல்லுகின்றன என்பதை விளக்கினால் — விரியும். ஆதலால் உண்மையான காலக் கெடுக்களைப் பஞ்சாங்கங்களைக் கண்டு தெரிந்து கொள்ளவும்.

வக்ரகதியை அடைந்த அசுபக் கிரகம் அதிகக் கொடிய பலனையும், சுபக்கிரகம் அதிக சுபபலனையும் தருவார்கள். இப்படிப் பார்க்கும்போது அசுபக்கோள் வக்ரமாகி, அசுப இடத்தில் இருந்தால், அசுபபலன் கூடும், சுபபலன் தரவேண்டிய இடத்தில் இருந்தால் சுபபலனும் கூடும். சுபக்கோள்களுக்கு இது நேர்மாறாக நடக்கும். சுபபலன் தரவேண்டிய இடத்தில் சுபக்கோள் இருந்து வக்ரமானால் சுபபலன் கூடும். அசுபபலன் தரவேண்டிய இடத்தில் அசுபபலனைக் குறைத்துக் கொடுப்பார்கள்.

17. இயல்பான முறையில் கோள்களின் சுபத்துவம் வருமாறு:-

1. பூரண சந்திரன்—குரு, இவர்கள் முழுச் சுபர்கள்
2. சுக்கிரன் —$\frac{3}{4}$ சுபன்
3 புதன்— $\frac{1}{2}$ சுபன்
4. க்ஷீணத் தேய்பிறைச் சந்திரன் — (தேய்பிறை அஷ்டமி முதல் வளர்பிறைப் பஞ்சமி வரை) $\frac{1}{4}$ பலன் தருகின்றான்.

5. மேற்கண்ட நிலையில், சந்திரன் புதனோடு கூடினால் $\frac{1}{8}$ சுபன் ஆகிறான்.

மேற்கண்ட விகிதாசாரத்தில் கோசாரத்தில் சுபபலன் தரும் கோள் சுபபலன் தரும் இடங்களில் தரும் சுப பலனின் அளவை எடுத்துக்கொண்டு, மேற்கண்ட 1 முதல் 17 பத்திகளில் சொன்னபடி வகைப்படுத்தி, கூட்டியோ குறைத்தோ அளவிட்டுக் கொள்ளலாம். உதாரணம் காட்டி விளக்கலாம் ஆயினும், அது மிகவும் விரியும் ஆதலால், அம்முயற்சியை மேற்கொள்ளவில்லை. வாசகர்களே உய்த்துணர்ந்து கணிதம் செய்து கண்டு கொள்ளவும்.

18 கிரகங்களின் பாபக் கணக்கு :—

1. சனி, இராகு — முழுப்பாபர். கேதுவும் இதே அளவு பாபனே.

2. செவ்வாய் — $\frac{3}{4}$ பாபர்

3. சூரியன் — $\frac{1}{2}$ பாபர்

4. ராகு கேதுக்களுடன் கூடிய புதனும் சந்திரனும்— $\frac{1}{4}$ பாபர்.

5. இராகுவுடன் கூடிய குரு முழுப்பாபர்

அசுபக்கோள் அசுபபலன்களைத் தரவேண்டிய இடத்தில் அதன் பரிமாணம் மேற்சொன்ன அளவில் இருக்கும். அதேபோல், இவர்கள் கோசாரத்தில் சுபபலன் தரவேண்டிய இடத்தில் இருந்தால், தாங்கள் கொடுக்க வேண்டிய சுபபலனின் அளவை மேற்சொன்ன விகிதத்தில் முழுவதும் தருவர். மேலே சொன்ன 1 முதல் 18 பத்தி களின் விதிப்படி, ஒரு கோள் கொடுக்கும் சுப, அசுப பலனைக் கூட்டியும் குறைத்தும் விகிதப்படுத்தி, நிகர அளவைக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும்.

இனி 9 கோள்களின் விரிவான காரக விஷயங்களைப் பின்வரும் அட்டவணையில் கண்டு வரப்படுத்திக் கொள்ளவும்.

அத்தியாயம்—4

## 12 ராசிகளைப் பற்றிய விவரங்கள்

ஒருவர் ராசி, அல்லது கோசார பலனை, அவர் பிறந்த காலத்தில் சந்திரன் இருக்கும் ஜென்ம ராசியிலிருந்தே கணக்கிட்டு அறிய வேண்டியுள்ளது. இதனால், 12 ராசிகளின் குணதர்மங்களையும் நன்றாகத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டியதும் அவசியமாகிறது. மேஷம் முதல் மீனம் வரையுள்ள இந்த 12 ராசிகளின் வெவ்வேறு செய்திகள் பலவற்றையும் அட்டவணையாக்கிக் கொடுத்துள்ளோம், அவற்றை மனத்தில் வரப்படுத்தி வைத்துக் கொண்டால், கோசார பலனைத் தெளிவாக அறிந்து கொள்வதற்கு உதவியாக இருக்கும். இனி, இந்த 12 ராசிகளும் லக்னமாக வந்தால், அவற்றின் தன்மைகள் என்னென்ன என்பதையும், அட்டவணையை அடுத்து எழுதியுள்ளோம். அவற்றையும் அறிந்து கொள்வது அவசியமே யாகும்,

### இராசி சீல காரக பதகம் (பதகம் எண் — 2)

| விஷயம் | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
|---|---|---|---|
| அங்கம் | சிரசு | முகம் | மார்பு |
| திக்கு | கிழக்கு | தெற்கு | மேற்கு |
| நிறம் | சிவப்பு | வெள்ளை | பச்சை |

| | | | |
|---|---|---|---|
| உருவம் | குட்டை | குட்டை | சமம் |
| ஜலம் | நிர்ஜலம் | கொஞ்சம் | கொஞ்சம் |
| சாதி | க்ஷத்திரியன் | பிராமணன் | வைசியன் |
| தேசம் | பாடலம் | கர்நாடகம் | சேர நாடு |
| பால் | ஆண் | பெண் | ஆண் |
| பூதம் | அக்னி | பூமி | வாயு |
| சரஸ்திர | சரம் | ஸ்திரம் | உபயம் |
| பாதம் | நாற்கால் | நாற்கால் | இருகால் |
| தொனி | அதிசத்தம் | அதிசத்தம் | அதிஸ்வரம் |
| மாதம் | சித்திரை | வைகாசி | ஆனி |
| பகல் இரவு | இரவு | இரவு | இரவு |
| அளவு | அல்பம் | சமம் | அதிகம் |
| குருடு முதலி | குருடு | செவிடு | ஊமை |
| மூப்பிணி | பித்தம் | வாதம் | வாதம் |
| உஷ்ணாதிகள் | உஷ்ணம் | சீதளம் | உஷ்ணம் |
| உதயம் | ப்ருஷ்டோதயம் | ப்ருஷ்டோதயம் | சீர்ஷோதயம் |
| முக்குணம் | ராஜசம் | ராஜசம் | ராஜசம் |
| இடம் | மலை | கிராமம் | கிராமம் |
| அதிபதி | செவ்வாய் | சுக்ரன் | புதன் |
| இயற்கை | குரூரம் | சௌம்யம் | குரூரம் |
| உருவம் | ஆடு | எருது | ஆண் பெண் |

| விஷயம் | கடகம் | சிம்மம் | கன்னி |
|---|---|---|---|
| அங்கம் | இதயம் | வயிறு | தொப்புள் |
| திக்கு | வடக்கு | கிழக்கு | தெற்கு |
| நிறம் | வெளிர் சிவப்பு | மங்கிய வெள்ளை | பல நிறம் |
| உருவம் | சமம் | நெட்டை | நெட்டை |
| ஜலம் | அதிகம் | நிர் ஜலம் | அதிகம் |

| | | | |
|---|---|---|---|
| சாதி | வேளாளன் | க்ஷத்திரியன் | வேளாளன் |
| தேசம் | சோழநாடு | பாண்டிய நாடு | கேரளம் |
| பால் | பெண் | ஆண் | பெண் |
| பூதம் | நீர் | அக்கினி | பிரிதிவி |
| சரஸ்திர | சரம் | ஸ்திரம் | உபயம் |
| பாதம் | பல கால் | நாற்கால் | இருகால் |
| தொனி | நிசப்தம் | அதிஸ்வரம் | நடுஸ்வரம் |
| மாதம் | ஆடி | ஆவணி | புரட்டாசி |
| பகல் இரவு | இரவு | பகல் | பகல் |
| அளவு | அதிகம் | அல்பம் | அல்பம் |
| குருடு முதலி | நொண்டி | குருடு | செவிடு |
| முப்பிணி | சிலேத்தும | பித்தம் | வாதம் |
| உஷ்ணாதிகள் | சீதளம் | உஷ்ணம் | உஷ்ண சீதளம் |
| உதயம் | பிருஷ்டோ தயம் | சீர்ஷோ தயம் | சீர்ஷோ தயம் |
| முக்குணம் | சாத்விகம் | சாத்விகம் | தாமசம் |
| இடம் | வனம் | வனம் | பர்வதம் |
| அதிபதி | சந்திரன் | சூரியன் | புதன் |
| இயற்கை | சௌம்யம் | குரூரம் | சௌம்யம் |
| உருவம் | நண்டு | சிங்கம் | கன்னிப் பெண் |

| விஷயம் | துலாம் | விருச்சிகம் | தனுசு |
|---|---|---|---|
| அங்கம் | அடி வயிறு | சிசினம் (குறி) | தொடை |
| திக்கு | மேற்கு | வடக்கு | கிழக்கு |
| நிற | கருமை | பொன் நிறம் | மஞ்சள் |
| உருவம் | நெட்டை | நெட்டை | சமம் |
| ஜலம் | நிர் ஜலம் | அதிகம் | நிர் ஜலம் |
| சாதி | வைசியன் | பிராம ணன் | க்ஷத்திரியன் |

| தேசம் | கொல்லம் | மலையாளம் | சைந்தவம் |
|---|---|---|---|
| பால் | ஆண் | பெண் | ஆண் |
| பூதம் | வாயு | நீர் | அக்னி |
| சரஸ்திர | சரம் | ஸ்திரம் | உபயம் |
| பாதம் | இருகால் | பலகால் | முற்பாதி இருகால் பிற்பாதி நாற்கால் |
| தொனி | நிசப்தம் | நிசப்தம் | அர்தஸ்வரம் |
| மாதம் | ஐப்பசி | கார்த்திகை | மார்கழி |
| பகல் இரவு | பகல் | பகல் | இரவு |
| அளவு | அல்பம் | அதிகம் | சமம் |
| குருடு முதலி | ஊமை | நொண்டி | குருடு |
| முப்பிணி | வாதம் | சிலேத்துமம் | பித்தம் |
| உஷ்ணாதிகள் | உஷ்ணம் | சீதளம் | உஷ்ணம் |
| உதயம் | சீர்ஷோதயம் | சீர்ஷோதயம் | பிருஷ்டோதயம் |
| முக்குணம் | ராஜசம் | ராஜசம் | சத்வம் |
| இடம் | பூமி | ஜலம் | பூமி |
| அதிபதி | சுக்ரன் | செவ்வாய் | குரு |
| இயற்கை | குரூரம் | சௌம்யம் | குரூரம் |
| உருவம் | தராசு | தேள் | நராசுவம் |

| விஷயம் | மகரம் | கும்பம் | மீனம் |
|---|---|---|---|
| அங்கம் | முழங்கால் | கணுக்கால் | பாதங்கள் |
| திக்கு | தெற்கு | மேற்கு | வடக்கு |
| நிறம் | மங்கலான சிவப்பு | பழுப்பு | வெள்ளை |
| உருவம் | சமம் | நெட்டை | சமம் |
| ஜலம் | அதிகம் | கொஞ்சம் | அதிகம் |
| சாதி | வேளாளன் | வைசியன் | பிராமணன் |

| | | | |
|---|---|---|---|
| தேசம் | உத்தர பாஞ்சாலம் | யவனம் | கோசலம். |
| பால் | பெண் | ஆண் | பெண் |
| பூதம் | பூமி | வாயு | நீர் |
| சரஸ்திர | சரம் | ஸ்திரம் | உபயம் |
| பாதம் | முற்பாதி நாற்கால் பிற் பகுதி இருகால் | இருகால் | பலகால் |
| தொனி | அர்தஸ்வரம் | அர்தஸ்வரம் | நிசப்தம் |
| மாதம் | தை | மாசி | பங்குனி |
| பகல் இரவு | இரவு | பகல் | பகல் இரவு |
| அளவு | சமம் | சமம் | அதிகம் |
| குருடு முதலி | செவிடு | ஊமை | நொண்டி |
| முப்பிணி | வாதம் | வாதம் | சிலேத்துமம் |
| உஷ்ணாதிகள் | உஷ்ணசீதளம் | உஷ்ண சீதளம் | சீதளம் |
| உதயம் | பிருஷ்டோ தயம் | சிர்ஷோ தயம் | உபயோ தயம் |
| முக்குணம் | தாமசம் | தாமசம் | சாத்விகம் |
| இடம் | பூமி | ஜலம் | ஜலம் |
| அதிபதி | சனி | சனி | குரு |
| இயற்கை | சௌம்யம் | குரூரம் | சௌம்யம் |
| உருவம் | முதலை | பூர்ண குடம் | மீன். |

அத்தியாயம்—5

## 12 லக்னங்களையும் பற்றிய விவரங்கள்

### 1. மேஷம் லக்னமானால்

செம்பு நிறமுள்ளவர். கோழை அதாவது கபம், பிருக்ருதி உள்ளவர். சீக்கிரம் முன்கோபம் வரும். மந்த

புத்தி, ஸ்திரமான தன்மை, பெண் போகப் பிரியம், குணசாலி, பந்துஜன உபகாரரர், தன் முயற்சியால் புகழ் அடைபவர், தேஜஸ்வியாவார், ஆவேசம், பெரும குறிக்கோள், எதிர்க்கும் தன்மை, எடுத்த முயற்சியை முடிக்கும் திறன், கஷ்டத்தைக் கண்டு பயப்படாமை. போரில் திறமை, பேசுவதைவிட எழுதுவதில் சமர்த்தர், மத்திம சரீரம்.—இவை மேஷ லக்னமே.

ராஜ பூஜிதர், பொதுமக்கள் தொடர்பால் புகழ் பெறுபவர். தைரியம், பிடிவாதம், முரட்டுத்தனம். சாமர்த்யம் எல்லாம் உள்ளவர். அடிமைகள் உள்ளவர், மெலிந்த தேகம், அறிவு, அழகு, மனஉறுதி இவை உள்ளவர் இரு தாரங்கள் அமையவும் வாய்ப்பு உண்டு, ஆயுதம். துப்பாக்கிச் சூடு, கல், மரத்திலிருந்து விழுதல் சுவரிடிந்து விழுதல், வெட்டுக் குத்து—இவை போன்ற வற்றால் காயம் ஏற்படும். தன் மேலும் குலத்தில் புகழுடன் விளங்குவார். அற்ப சந்ததி உள்ளவர். 4,5,7,10,20, 22, 25, 28 இந்த வயதுகளில் அக்கினி, காய்ச்சல், சொறி சிரங்கு, வைசூரி, விஷப்பீடை போன்றவை ஏற்படலாம். இந்த லக்னத்திற்கு உரிய யோக காரகர், மாரகர், சுபர், பாபியர் ஆகிய விவரங்களை 12 லக்னத்திற்கும் தனியாகக் கொடுத்துள்ள அட்டவணையில் காணலாம்.

பௌர்ணமி, வியாழக்கிழமை, ரோஹிணி, நக்ஷத்திரம் கூடிய நாளில் இரவு நேரத்தில் தலைவலியால் இவர் இறக்கலாம்; லக்னம், லக்னாதிபதி, ஆயுள் காரகர், ஆயுள் ஸ்தானாதிபதி ஆகியோர் வலுத்திருந்தால் 100 வயது வரையும் ஜீவித்திருப்பார்.

### 2. ரிஷப லக்னமானால்

இந்த லக்னத்தில் பிறந்தவர் சூரர். வீரர். குணவான். புகழ் உள்ளவர். குரு, தெய்வம் இவர்களிடத்தில்

சிரத்தை உள்ளவர். இவர் பிறந்தவுடன் ஆயுதம் போன்ற கருவியால் தாக்கப்பட்டு, ரண காயம் ஏற்படவும் வழியுண்டு. அதனால் பணச்செலவும் உண்டு, குடும்பத்தில் பிரிவும், பித்தநோயும் ஏற்படும்.

இவர் அழகர். தடித்த சதைப்பற்றான வடிவ முள்ளவர். சிவப்பு நிறம் உள்ளவர் தேஜஸ் உள்ளவர். வட்டமான கவர்ச்சியான முகம் உள்ளவர். சுருண்ட கருங்கூந்தல் உள்ளவர். இந்த லக்னத்து ஆண் கூடப் பெண்ணின் நனினமும், மென்மையும் பொலிவும் பெற்று விளங்குவார்.

சத்திய சீலர். சுபகாரியங்களில் பிரியமுள்ளவர். பிறர் சொத்தைத் தான் சேர்த்துக் கொள்ள வல்லவர். பிறரைக் கவர்பவர். ஆளடிமைகளும் வேலைக்காரரும் உடையவர். இவருக்குக் குழந்தைகள் பெரும்பாலும் பிற்காலத்தில்தான் பிறக்கும்.

சங்கீத நடனக் கலைகளில் வல்லவர். இலக்கிய ரசனையும், ஸ்திர புத்தியும் உள்ளவர். சோம்பேறித் தனமும் உண்டு. தித்திப்புச் சுவையில் பிரியம் உள்ளவர். அழகிய ஆடை அணிகலன்களை அணிபவர். சிற்றின்பப் பிரியர். தன் இன மக்களின் தலைவர். பணக்காரர். பெரும்புள்ளிகளின் சிநேகம் உள்ளவர். உழைத்துப் படிப்பதில் ஆர்வம் குறைவு. செடி, கொடி, பூஞ்சோலைகள் வைப்பதில் பிரியமுள்ளவர். நாய், பூனை போன்ற செல்லப் பிராணிகளை வளர்ப்பதில் பிரியமுண்டு, எதையும் ஒழுங்காகவும், அமைதியாகவும் செய்ய வல்லவர். பொறுமைசாலி எல்லாரிடமும் அன்பு செய்பவர். வாழ்வில் நல்ல சௌகரியங்களையும் சுகபோகங்களையும் தேடிச் சேகரித்து முழுவதும் திருப்தியாக அனுபவிப்பவர்.

பல் நோய், டான்சில் போன்ற நோய்கள் இவருக்கு ஏற்படலாம். களத்திர தோஷமுள்ளவர். 5, 13, 16, 19, 20, 27 ஆவது வயதுகளில், சுரம், கண்ட மாலை, க்ஷயம்,

சிரங்கு போன்ற நோய்களால் கஷ்டப்படலாம் லக்னாதிபதி, ஆயுள் காரகர், ஸ்தானாதிபதிகள் வலுப் பெற்றால், 77 வயது வரை இவர் வாழ்ந்திருப்பார்.

இவர், தை மாதம் முதல் பக்ஷத்தில், ரோஹிணியும், திங்கட் கிழமையும் சேர்ந்து வரும் நாளில் கடும் சுரத்தால் இறக்கலாம். (மாரகர் காரகர் முதலியவை பற்றி அட்டவணையில் காண்க.)

## 3. மிதுனம் லக்னமானால்

இந்த லக்னத்தில் பிறந்தவர் தன தான்யம் உள்ளவர். உதாரகுணமுள்ளவர். நல்ல சத்புத்திரர். சீலம், புத்தி சாலித்தனம் உள்ளவர். இவர் உத்தம நண்பர். சிவப்பு நிறமுள்ளவர். சாதுரியம் சாமர்த்தியம் உள்ளவர். இனிமை யாகப் பேசுபவர். தன் சந்ததியுடன் இவருக்குக் கருத்து வேற்றுமை உண்டு.

இவர், இரட்டைக் குணமுள்ளவர், மாறும் சுபாவ முள்ளவர். இடுப்புக்கு மேல் பாகம் உயரம், கைகள் நீளம், முகம் முன்னால் துருத்திக் கொண்டு தெரியும். வயிறு பெரிதாக இருக்கலாம். வேகமான நளின நடை அமைந் தவர். அறிவு பொலிந்து தோன்றும். வசீகரத் தோற்ற முள்ளவர். எப்பொழுதும் இளமைத் தோற்றம் பெற்றவர்.

வாய் சாலகர், விகடர், பொடிவைத்துப் பேசுவதில் நிபுணர். மிதுனத்துக்கு அதிபனான புதன் திருமாலைக் குறிப்பவன். திருமால் மோகினியாகிப் பிறரை மயக்கி அடிமை கொண்டது போல், சத்துருக்களை எதிர்த்துக் கொள்ளாமல், உறவாடியே தந்திரமாக இவர் அழித்து விடுவார். இவர் வித்வான். ஜோதிடப் பண்டிதர். புத்தியை பயன்படுத்தும் எல்லாத் தொழில்களும் இவருடையதே. காட்டூன், துணுக்கு எழுதுதல், ஸ்டெனோ கிராபர், ஆசிரியர், ஆடிட்டர், டெலிபோன், பத்திரிகைத் தொழில்,

அந்தரங்கக் காரியதரிசி, தபால் இலாக்காப் பணி, சங்கீத வித்வான். முதலிய பல தொழில்களும் செய்பவர்.

ஓயாத சளி, டி. பி. இன்புளூயன்சா மற்றும் சுவாச சம்பந்தமான நோய்கள் இவருக்கு ஏற்படலாம்.

இவர் எப்பொழுதும் தன் காரியமே கண்ணாக இருப்பவர். உதர ரோகமுண்டு. கபட நாடக சூத்ரதாரி இவரே. சிற்றின்பத்தில் அதிகப்பற்று வைப்பவர். மனைவி சொல்லைக் கேட்பவர். இரு களத்திரம் ஏற்படலாம். 2,3,4,5,8,9,10,18,25,28 ஆவது வயதுகளில், நெருப்பு, ஆயுதம், சுரம், கண்நோய் முதலியவற்றால் பீடை ஏற்படலாம், லக்னாதிபதி, ஆயுள் காரகன், ஸ்தானாதி பதிகள் வலுப் பெற்றால் 75 வயதுக்குமேல் ஜீவித்திருப்பார். இவர், ஆவணி மாதத்தில் முதல்பாதியில் வெள்ளிக்கிழமை சதுர்த்தசி சேர்ந்த நாளில் இரவில் திரியாணம் பெறலாம்.

(மாரகர் காரகர்; முதலியவற்றுக்கு அட்டவணையைக் காண்க.)

## 4. கடக லக்னம் ஆனால்

கடக லக்னத்திற் பிறந்தவர், வாக்கு வன்மையுடன் சாமர்த்தியமாகப் பேச வல்லவர். பிறர் துக்கம் துன்பம் ஆகியவற்றை இரக்கத்துடன் கூடிய மனதுடன் கண்டு, உதவி செய்பவர். எல்லாச் செயல்களையும் ஒழுங்காகச் செய்து முடிப்பார்.. நல்ல தரமான வாழ்க்கை வாழ்வார். தன் மனைவியை அன்புடன் நல்லபடியே பாதுகாப்பவர். இந்த லக்னப் பெண் தன் கணவனை நல்லபடிபாகக் கவனித்துக் கொள்வாள்.

இவர் தனவான், களத்திர சுகம் இவருக்குக் குறைவு. கபடமுள்ள, கௌரவபங்கம் ஏற்படுத்தும் மனைவியை உடையவர். கபடர். மிதமிஞ்சிய காமஇச்சை உடையவர்.

வாயாடியான மனைவியின் பேச்சைக் கேட்பவர். நோயுள்ள மனைவியை உடையவர். அற்ப சந்ததி யுள்ளவர், யுத்த ஆசையுள்ளவர், எப்பொழுதும் துக்கத் துடன் இருப்பவர். தகப்பனாருக்கு அடங்காதவர். வினயவான். புத்திசாலி. இனிப்புச் சுவையில் பற்று. சுகபோக ஆசையும், பித்த ஆதிக்கமும் உள்ளவர். கபட ராயினும் அந்தரங்கத்தில் தூய்மையானவர், நீச்சல் போன்ற தண்ணீர் சம்பந்தமான கேளிக்கைகளில் மிகப் பற்றுள்ளவர்.

நடுத்தர வடிவம், வட்ட முகம், வலப் பக்க உடலுறுப்புகளுள் சில பருமனாக இருக்கும். விரைந்த நடையுள்ளவர். பலகை போன்ற பற்களை உடையவர், சிவந்த நிறமும், பிறரைக் கவரும் அழகும் உடையவர், இதன் லக்னாதிபதி சந்திரன். அவனைப் போலவே சஞ்சல முள்ளவரும், ஸ்திரத்தன்மை அற்றவரும் ஆவார், எப்போதும் வீட்டோடு அடைந்து கிடப்பவர் [Home bird) எப்பொழுதும், தன் சக்திக்கு மீறிய குறிக்கோளில் பற்றுள்ளவர். இவர்களிற் சிலர் சமூகத்தில் உழன்ற பெரும் புகழ் பெறுவதும் உண்டு. நீர், கடல் சம்பந்தமான எல்லா உத்தியோகம், தொழில்களும் செய்பவர். ஹோட்டல், உணவு சம்பந்தமான தொழில்கள், இவை சம்பந்தப்பட்ட பொருள்களின் வியாபாரம் இவையும் இந்த லக்னத் தாருக்கு உண்டு. சந்திரன் போன்று, இவர்களும் உயர்வு தாழ்வு இவற்றை மாறி மாறி அடைவார்கள். மஹோதரம் போன்ற நீர் சம்பந்தமான நோய்களும் உண்டாகலாம். 5,8,14,16,20,25,40 இந்த வயதுகளில் சுரம், பேதி இந்த வகையின் நோய்களால் பீடையுண்டாகலாம். லக்ன அஷ்ட மாதிபதி முதலியவர்கள் வலுத்தால், சுபபார்வை பெற்றால், 90 வயது வரை வாழ்வார்கள். மாரகர், காரகர் முதலியவற்றிற்கு அட்டவணையைக் காணவும். இவன் மாசி மாதம் சுக்ல பக்ஷத்தில் பஞ்சமியும் மிருக

சீரிய நக்ஷத்திரமும் கூடிய நாளில், பகல் வேளையில் இயற்கை எய்தக்கூடும்.

## 5. சிம்மம் லக்னமானால்

இந்த லக்னத்தில் பிறந்தவர் ஒரே இடத்தில் நிலைத்து வாழ்பவர். செம்மையான நெறியுடன் வாழ்பவர். நிறைந்த கல்வி கற்பார். தனக்கென்று தனி வழி வகுத்து நடப்பவர். பழிபாவத்திற்கு அஞ்சுபவர். போர்க்கலையில் வல்லவர். கம்பீர வசனமுள்ளவர். நல்ல ஆகாரம் (உணவு) உடையவர். திட சரீரம் உள்ளவர், பசியுள்ளவர். அடக்குபவர். அடங்குபவர் அல்லர். கபடர், புத்திமான், கலைகளில் வல்லவர். கண் தலைவலிகளால் வருந்துபவர், உழைப்பாளி, சுயகர்வம் உள்ளவர்.

கடுகடுப்பும் சினமும் வெளிப்படும் தோற்றம். கம்பீரமான, எல்லா அங்கங்களும் நன்சமைந்த தோற்றமுள்ளவர். அரச யோகத்தைக் குறிக்கும் சாமுத்ரிகா லக்ஷணங்களை உடையவர்.

எதையும் வெளிப்படையாகப் பேசும் குணமுள்ளவர். மிகவும் தன்னம்பிக்கை உள்ளவர். தெளிவாகப் பேச வல்லவர். உயர்ந்த லட்சியங்களை நிறைவேற்றத் துடிப்பவர், ஸ்திரபுத்தியும், உதாரகுணமும் உள்ளவர். ஏதாவது குறிக்கோளுடன் இருப்பார். தன் கௌரவம் கெடாமல் பார்த்துக் கொள்வார். சுதந்தர உணர்வு அதிகம். சங்கீதம், நாடக, இசைக் கலைகளிலும் பற்றுண்டு, நிர்ணயத் திறனும் தெளிவும் உள்ளவர்: இவர் விவாகம் காதல் எல்லாம் புதுமையாக எதிர்பார்த்ததற்கு விரோதமாகவே முடியும். சங்கீத, நாடக சினிமாத் துறை, அரசுத் துறை உத்தியோகம் முதலியவை இவருக்கு அமையலாம்.

5, 10, 27, 30 இந்த வயதுகளில் சுரத்தால் பீடை, சுபக்கோள் லக்னத்தைப் பார்த்து ஆயுள் காரகன் ஸ்தானாதிபதிகள் வலுப்பெற்றால். 80 வயது வரை

வாழ்ந்திருப்பார், மாரகர் காரகர் முதலியவற்றிற்கு அட்டவணையைக் காணவும்.

இவர் பங்குனி மாதம் கிருஷ்ணபக்ஷத்துப் பிரதமையில், அஸ்த நக்ஷத்திரம் கூடிய தினத்தில், பகல் வேளையில் இயற்கை எய்தக்கூடும்.

## 6. கன்னி லக்னமானால்

கன்னி லக்னத்திற் பிறந்தவர் மிகவும் நல்லவர். தன் பெற்றோரைப் பாதுகாப்பவர். இளமையில் கஷ்டப் படுபவர். நடுவயதிற்குமேல் நிம்மதி உண்டு. வாழ்க்கையின் நெளிவு சுளிவுகளை நன்றாகப் புரிந்து கொண்டு வாழ்பவர். சாதுரியமாகவும் இனிமையாகவும் பேச வல்லவர். இவர் காலில் ஏதாவது மறு இருக்கும்.

இவர் தருமவான். இரக்கமுள்ளவர். ஆசார சீலர், நல்ல நடத்தை உள்ளவர். சுபகாரியப் புலி. மனத்தில் வஞ்சனையும் உண்டு. பிறரால் தொழில் வாய்ப்பும். அதில் முன்னேற்றமும் உண்டு. பொதுமக்களிடையே செல்வாக்கு உடையவர். தம் பின் வயதில் அதிகப்பணம் சம்பாதிப்பவர். இவர் ஞானசம்பன்னர். எப்பொழுதும் எதிலும் எச்சரிக்கையாக இருப்பவர். தம்மை அழகு படுத்திக் கொள்வதில் சமர்த்தர். இதனால், பெண்களால் சூழப்படுபவர். பணக்காரர். கெட்டிக்காரர். வாதம் பித்தம், சிலேத்துமம் மூன்றும் கலந்த நோய்கள் இவருக்கு ஏற்படக்கூடும்.

சஞ்சலர், இரட்டைக் குணம் உடையவர். நிர்ணயத் திறன் குறைவு. சில சமயம் வயிற்றுப் பிழைப்புக்காக நேர்மையற்ற தொழில்களையும் இவர் செய்யலாம்.

சதுரம் அல்லது நீள்வட்ட முகமுள்ளவர், இவர் நடை ஒரு பக்கம் சாய்ந்திருக்கும். நடுத்தரமான நல்ல தோற்ற

முண்டு. நளினமான, பெண்கள்போன்ற அசைவும், அழகும் உள்ளவர். எப்பொழுதும் ஏதாவது தொழிலில் ஈடுபட்டுக்கொண்டே இருப்பார். எப்பொழுதும் இளமைத் தோற்றத்துடனும் இருப்பார். தயக்கமும் வெட்கமும் உள்ள சுபாவம் பெற்றவர். கலை, இலக்கியம், எழுத்துத் தொழில், இசை போன்ற துறைகளில் வல்லவர். அந்த வகைத் தொழிலும் உண்டு. விளக்கம், விமர்சனம், செய்வதில் நிபுணர். புத்தி பலத்தால் அதிகம் பிழைப்பார். வழக்காடி வெற்றி பெறுவதில் நிபுணர். விஞ்ஞானம், கணிதம், ஜோதிடம் இவற்றில் வல்லவர். மருத்துவம், சமயச் சொற்பொழிவு இவற்றில் ஈடுபாடு உண்டு. சமய ஈடுபாடும் தலவழிபாட்டு ஈடுபாடும் உள்ளவர்.

பெட்டிக் கடைகள், குமாஸ்தா தொழில்கள், கணக்காளன் (Accountant) ஆடிட்டர் போன்ற தொழில்கள் உள்ளவர். புத்தக வெளியீடு, விற்பனையாளன், கெமிஸ்டு, ஆவணப் பதிவாளன், காரியதரிசி. பங்கு மார்க்கெட் தொழில் இவற்றின் நுணுக்கத்தை அறிந்தவர்.

விஷக் காய்ச்சல், வயிற்றுக் கோளாறுகள், காலரா, டிசண்ட்ரி என்னும் சீதபேதி, அல்சர் போன்ற நோய்கள் எளிதில் இவரைப் பற்றிக் கொள்ளும். 5,8,9,10,18.19 ஆம் வயதுகளில் நெருப்பு, பேதி, சுரங்கள், வைசூரி போன்ற நோய்களால் துன்பம் நேரலாம். லக்னத்திற்கு சுபபார்வையுடன், அஷ்டமாதிபதி, ஆயுள்காரகர் லக்னாதிபதி இவர்கள் வலுப்பெற்றும் நன்கு அமைந்தால், 77 வயது வரை ஜீவித்திருப்பார்.

பெரும்பாலும் 77ஆவது வயதில், வைகாசி மாதம் கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தசி சித்திரை நக்ஷத்திரம் கூடிய நாளில், மத்தியான வேளையில் குன்ம ரோகத்தால் பீடிக்கப்பட்டு நிர்யாணம் அடையக்கூடும்.

## 7. துலாம் லக்னமானால்

துலா லக்னக்காரர் மெத்தப் படித்தவர். இரக்க மற்றவர். ஆனால், கொடியவர் அல்லர். தம் காரியங்கள் எல்லாவற்றிலும் வெற்றியே பெறுவார். வெளிப்படையான பேச்சும், பல கலைகளில் தேர்ச்சியும் எல்லாம் உண்டு.

இவர் அரசர்களால் பூசிக்கப்படுவார். நல்ல குணம், புத்தி, பொறுமை, அறிவு வல்லமை, புகழ் இவற்றை எல்லாம் உடையவர். சம்பத்துடையவர். சுக புருஷன். சுகந்த பரிமளப் பிரியர். தனவான், இரக்கமுள்ளவர். சர்வஜனப் பிரியர். மனஉறுதி குறைவு, உண்மை விளம்பி, குரு ஜனங்களிடம் பிரியம் உள்ளவர். நல்ல காரியத்தில் கண்ணாய் இருப்பவர். எல்லாருக்கும் இனியவர். வியாபாரத்தில் சாமர்த்யம் அதிகம். வினோதமான குணங்கள் உள்ளவர். தூய்மையானவர். தம் குலம் மற்றும், சமூகத்திற்கு இவர் ஓர் ஒளிவிளக்கு. புகழுள்ளவர். சிலேத்தும, அதாவது சளி நோய் உள்ளவர்.

சதைப்பற்றுள்ள அளவான அங்க அமைப்புகள் உள்ள அழகர். பளபளக்கும் கண்கள், கன்னம், முகம் எல்லாம் பொலிவுடன் விளங்குபவர், வயிறு பெரிது. செம்மை நிற முள்ளவர். மீசை வைத்துக் கொள்வதில் பிரியமுள்ளவர். பெண்களை அடிமை கொள்ளும் அழகர். பெண்களோ ஆண்களைப் பரவசப்படுத்தும் அசைவும் ஒயிலும் அழகும் உடையவர். தர்மவான். புண்ணியசீலன். தெய்வ பக்தி யும் சத்காரிய சிந்தனையும் உள்ளவர். பல்கலைச் செல்வர். வித்வானும் இவரே. கலை, இசை, நாடக, நடனம் இவற் றில் அதிக தேர்ச்சி பெறுவார். கற்பனைத் திறன் அதிகம். மனித வர்க்கத்துக்குச் சேவகன். நீதிபதியாகவும் இருப்பவர். தத்துவஞானி இவர். மேற்கண்ட கலை முதலியவை தொழிலாகவும் அமைந்தவர்.

நடுத்தர வயதில் திருமணம் நடக்கும். இடுப்பு நோய், டயாபடீஸ் என்ற நீரிழிவு, குஷ்ட ரோகம் போன்ற நோய்

களால் பாதிக்கப்படுவர். 7,9,10;11,12,28 இந்த வயது களில் அக்கினி மந்தம் சத்துரு பீடை, பேதி, வைசூரி போன்ற நோய்களால் கஷ்டப்படலாம். மாரகர் காரகர் முதலியவற்றை அட்டவணையில் காண்க.

இவர், 85 ஆவது வயதில், வைகாசி மாதம் சுக்ல பக்ஷம் திரிதியை ஞாயிற்றுக்கிழமை கூடிய நாளில் சூலை நோய் ஏற்பட்டு நிர்யாணம் அடையக்கூடும்.

## 8. விருச்சிகம் லக்னமானால்

வலிமையான கால்கள், திரண்டுருண்ட தோள்கள், வேகமான நடை என்னும் இவற்றையுடையவர். கேட் போர்க்கு மறுக்காது கொடுப்பவர். எப்பொழுதும் உற்சாக மான சோர்வில்லாத மனத்தை உடையவர். நன்றாகப் பேச வல்லவர். இவர் பேச்சுக்குச் செல்லும் இடங்களி லெல்லாம் இவருக்கு மதிப்பு இருக்கும்.

இவர் புத்திமான். மரியாதைக்குரியவர். தம் உறவினர் களுடன் துவேஷம் உள்ளவர். இனிமையாகப் பேசுபவர் எடுத்த காரியத்தைத் தொடர்ந்து செய்து முடிப்பவர். காம இச்சை அதிகம் உள்ளவர். தம் மனைவியிடத்தில் அதிக ஆசை வைப்பவர். கலகம் பண்ணுபவர்; சூரர், வீரர், ஆசார ஒழுக்கம் உண்டு. பிறர் குணநலன்களைப் பாராட்டு பவர். சாஸ்திரப்படி நடப்பவர். சத்துருக்களை ஜெயிப்பவர்.

கட்டான வலிமையான உடலும், முரட்டுத் தனத்தை எடுத்துக் காட்டும் தோற்றமும் உள்ளவர். தைரியசாலி. எல்லாவற்றிற்கும் கட்சிகட்டி வாக்கு வாதம் பண்ணுபவர். இரகசியமானவன். குரூர சுபாவம் உள்ளவர். விரும்பாத பிறருடன் பகைமை பாராட்டுபவர். நிச்சய புத்தி, ஆனால் நடிப்புத் தன்மையும் உண்டு. ஏமாற்று வார்த்தைக்காரர். எதிலும் அளவுக்கு மீறிய ஆசையுள்ளவர். மறைமுகக் கும்பலுடன் தொடர்புள்ளவர். லேவாதேவி தொழில்

போன்ற எல்லாவற்றிலும் வல்லவர். இவர்களை நம்பி எதையும் செய்ய முடியாத அளவுக்குக் குணம் திரிந்தவர்.

இரசாயனத் துறைத்தொழில். சுரங்க வேலை, சித்த வைத்தியம், பந்தய, சூதாட்ட, காபரே நடனத் தொழில் நடத்தலாம். விவசாயத் தொழில், துறைமுகத் தொழில், ஸ்போர்ட்ஸ், மின்வாரியம் போன்ற தொழில்களும் அமையலாம்.

விரை வீக்கம், மாதவிடாய்க் கோளாறுகள், குடலிறக்கம், ஆண் பெண் குறிகள் சம்பந்தமான நோய்கள், பால் வினை நோய்கள் போன்றவை ஏற்படலாம்.

3, 5, 10, 18, 40, ஆகிய வயதுகளில் கண்ட தோஷம் சுரம், அக்கினி மந்தம், ஜன்னி முதலியவற்றால் பீடை ஏற்படலாம். லக்னாதிபதி, அஷ்டமாதிபதி, ஆயுள் காரகர் ஆகியோர் வலுவானால் 77 அல்லது 90வது வயது வரை இவர்களுக்கு ஆயுள் பலம் உண்டு. மாரகர், காரகர் முதலியவற்றை அட்டவணையில் பார்க்கவும்.

மேற்சொன்ன 77 அல்லது 90 ஆவது வயதில் மார்கழி மாதம் கிருஷ்ணபக்ஷ பஞ்சமி, ஞாயிற்றுக்கிழமை சுவாதி நக்ஷத்திரம் கூடிய நாளில், நள்ளிரவில், இவர் உயிர் பிரியலாம்.

## 9. தனுசு லக்னமானால்

இவர் எந்தக் காரியத்திலும் இலாப நஷ்டம் பார்க்கும் வணிக இயல்பினர், லக்ஷ்மிகரம் பொருந்தியவர். திருமாலின் பொலிவுள்ளவர். அழகர். பெண்கள் வசப்பட்டு நடப்பவர். பரிமள சுகந்த வாசனைப் பொருள்களில் எப்பொழுதும் விருப்பம் உண்டு. படிப்பாளி. தம் தாய் தந்தையைக் காப்பவர்.

சத்தியவான். குணவான். பேச்சாளி. சுகவான். தனவான். நண்பர்கள் உள்ளவர். சஞ்சாரி, உத்தியோக முள்ளவர். தனுர் வித்தையில் (போர்த் தொழில்) வல்லவர். தெய்வம், அந்தணர், உயர்ந்தோர்போல் மதிப்புள்ளவர். வாகன சுகம் உண்டு. ஆளடிமை உள்ளவர். தைரியசாலி.

நல்ல கட்டான உடல் வாகும், முக்கோண முகமும், சிவந்த் நிறமும் உள்ளவர். உதட்டில் குழிவிழுந்த அதிர்ஷ்ட அடையாளம் உண்டு. நிறைய ரோமம் உண்டு.

கபடமற்றவர். நாணயமுள்ளவர். குறிக்கோளே கண்ணாக இருப்பவர். தத்துவம், ஞானம், வேதாந்தம் முதலியவற்றில் ஈடுபாடுண்டு. தர்ம சாத்திரம், பொருளா தாரம் இவற்றில் வல்லவர். அரசாங்க உத்தியோகமும் இருக்கலாம். பரம்பரைப் பண்பாட்டில் பற்றுள்ளவர். அனைவர் நம்பிக்கைக்கும் பாத்திரமானவர். குலசிரேஷ்டர் வீரர், ஊக்கத்துடன் இருப்பவர். பணியும் அடக்கமும் உண்டு. பரோபகார சிந்தையும் உண்டு.

தலைமை ஆசிரியர், வழக்கறிஞர். ஆடிட்டர், பொரு ளாதாரத்துறை நிபுணர், நீதிபதி, புரோஹிதத் தொழில், வங்கித் தொழில், மடாதிபதி, மதத் தலைமை, கல்வித் துறை பதிப்புத் துறை, புத்தக வெளியீடு போன்ற தொழில் களே அமையலாம்.

3,4,5,12,15,18,32,40,47 ஆவது வயதுகளில் கண் நோயாலும் உஷ்ணரோகத்தாலும் பீடையுண்டாகலாம். லக்னம், அதிபதி, அஷ்டமாதிபதி, ஆயுள்காரகர் எல்லாம் வலுப்பெற்றால் 77ஆவது வயது வரை ஜீவித்திருப்பான். காரகர் மாரகர் விவரங்களை அட்டவணையில் காணவும்.

இவர் 77ஆவது வயது, மார்கழி மாதம் கிருஷ்ண பக்ஷ பஞ்சமி இரவில், விசாகம் நக்ஷத்திரம் கூடிய நாளில் இயற்கை எய்தக்கூடும்.

## 10. மகரம் லக்னமானால்

இவர் திரிலோக சஞ்சாரி. அலைந்து கொண்டே இருப்பார். சஞ்சல புத்தி. பலதுறைக் கல்வியும் காரியம் சாதிக்கும் வலிமையும் பெற்றவர். பல்வகைச் சிந்தனை, பெருஞ் சாதனை புரிந்து புகழ் பெறல் என்னும் இவற்றை உடையவர். துராசையும் உண்டு, திட புத்தியும் பல வழி களில் உழைத்துச் சம்பாதிப்பதும் உண்டு. சுய காரியப் புலி. சினம் கொள்பவர். கர்வி. வாய்சாலகர். தம் மனைவி யிடம் அதிகப் பற்றுள்ளவர். துஷ்டர், துர்த்தர் இவரே. கபட நாடகர். குடிலப் (கோணல்) புத்தியுள்ளவர். பிருகு முனிவர் கருத்துப்படி, இவர் படிப்பில் மந்தர். கஞ்சர். சுயாப பித்தர். தான் பிறரை நம்பார். சந்ததி விருத்தி யுண்டு. இளைத்த குச்சிபோல எலும்புக்கூடு பின்னிய சரீரம் உள்ளவர். செம்பட்டை மயிர். பலகைப் பல். தொங்கும் கன்னம். தொய்ந்து வளைந்த தோள்கள். உயர்ந்த ஒடிசலான உருவம் இவருடையது, வயதுக்கு அதிகமான கிழத் தோற்றமும் உண்டு. முகத்தில் மச்சம் உண்டு.

எல்லாம் கணக்காகவே இருப்பார், ஒரு பலன் கருதியே இவர் பிறருக்கு உதவுவார். அரசுத் தரப்பு வேலைகள் உண்டு, மிகவும் சந்தேகம் கொண்டவர். நபர்களுக்கும் துரோகம் பண்ணுவார். சிடுமுஞ்சி. ஆரோக்யக்குறை ஏதா வது இருந்து கொண்டே இருக்கும். சனி நன்கு அமைந்தால் தெளிவு தியாக புத்தி எல்லாம் உண்டு. தீர்க்கதரிசியாகவும் இருப்பார்.

அரசாங்க வேலை, தொழிற்சாலை, எண்ணெய் வள வாரியம், விவசாயம் தோட்ட வேலை, முதலிய தொழில் உண்டு. மூட்டு வலி, ரொமாட்டிசம், காலை இழுத்து நடத்தல் போன்ற நோய்கள் இந்த லக்னத்திற்கு உண்டாக லாம்.

3, 4, 5, 7, 8, 10, 12, 32, 37, ஆவது வயதுகளில் ஜலம் சுரம், விஷம் இவற்றால் தொல்லைகள் ஏற்படலாம். லக்ன, அஷ்டமாதிபதி ஆயுள் காரகன் இவர்கள் வலுத்தால் 75 வயது வரை உயிர் வாழ்ந்து இருப்பார். மாரகன் காரகன் முதலியவற்றை அட்டவணையில் காணவும்.

75 வயது வரை வாழ்ந்து ஆவணி மாத கிருஷ்ண பக்ஷத்தில் ஞாயிறு உத்திரட்டாதி நக்ஷத்திரம் கூடிய நாளில் உதய காலத்தில் ஆவி பிரிந்து இவர் மோக்ஷம் அடையலாம்.

## 11. கும்பம் லக்னமானால்

நேர்மை, ஒழுக்கம், உயர்கல்வி, நற்குணம், தீர்க்க ஆலோசனை, அறிவுத்திறன், வாக்குவன்மை இவை உள்ளவர். இவர் சிற்றின்ப இச்சையும் அதிகம் உள்ளவர்.

ஸ்திர புத்தி உள்ளவர், அழகிய உருவத் தோற்றம் உள்ளவர். புத்திர மித்திரர் மேல் விரும்பிப் பற்று வைப்பவர். சஞ்சலர், ஏமாற்று வித்தைக்காரரர், எல்லாரையும் பகைத்துக் கொள்வதால் இவருக்கு வேண்டாதவர்களே மிக அதிகம்.

கறுப்பு நிறமுடைய உயர்ந்த உடல்வாகு; முட்டை போன்ற நீள்வட்ட முகம், ஒட்டிய கன்னம், அழகிய தோள்கள்; பெருத்த வயிறு இவை எல்லாம் கலந்த அழகில்லாத தோற்றமே இவருடையதாகும். பெரும் பாலும் இவருக்கு நோய் எதுவும் வராது.

இவர் கலை, இலக்கியம், நாட்டிய நூல் பயிற்சி, சிற்பக் கலை முதலியவற்றில் தேர்ந்தவர். மனித இனத்திற்குச் சேவை செய்யும் மனப்பான்மையும் உண்டு. இரு தரப்பு வாதங்களையும் கேட்டு நியாயம் வழங்குவதில் சமர்த்தர். இதனால், நீதிபதி போன்ற பதவிகளையும் வகிப்பார். எழுத்துத் தொழில், வேதாந்தம், தத்துவம், ஞானம்

போன்றவற்றிலும் ஈடுபாடு உண்டு. விஞ்ஞானத் துறைகளிலும் ஈடுபாடு கொள்வார். எதை மேற்கொண்டாலும் அதைத் திறம்படச் செய்து முடிப்பார். தியானம், யோகம், ஆசனம், ஜபம், பூசை, பிராணயாம வாசிப் பழக்கங்கள் இவற்றில் பற்றும், ஆன்மிகத் துறையில் நாட்டமும் உண்டு. மறைமுகமாக யாருக்கும் தெரியாமல் பிறருக்கு உதவி செய்வார்.

இல்லறம் இவர்களுக்குப் பெரும்பாலும் வெற்றி அடைவதில்லை. விசித்திரமான ஜோடிப்பொருத்தமற்ற திருமணமே நேரலாம்.

சீதளப் பாதிப்பு, இதய நோய், வர்தநோய், வெண் குஷ்டம் போன்ற தோல் நோய்கள், கால் இழுத்துக் கொள்ளும் வாதம், வலிப்பு. இதனால் கால் முடமாதல், மூட்டு வலிகள் போன்றவை இவர்களுக்கு ஏற்படுவதுண்டு.

9, 10, 11, 20, 30, 32—ஆகிய வயதுகளில் சுரம் மிகுந்த ஜன்னி, வாத பித்த சுரங்கள் முதலியவற்றால் அவதிப்பட வேண்டி வரலாம். இந்த லக்னாதிபதி, அஷ்டமாதிபதி, ஆயுள் காரகன் ஆகியோர் வலுப்பெற்றால் 80 வயது வரை இவர் வாழ்ந்திருப்பார். இதற்குக் காரகர், மாரகர் முதலியவற்றை அட்டவணையைப் பார்த்துத் தெரிந்து கொள்ளவும்.

இவர், 80-ஆவது வயது சித்திரை மாதம் கிருஷ்ணபக்ஷ பஞ்சமி திருவாதிரை நக்ஷத்திரம் கூடிய வியாழக்கிழமையில் உதய காலத்தில் இயற்கை எய்தக்கூடும்.

## 12. மீனம் லக்னமானால்

அழகிய பெண்களுடன் பழகுபவர் கற்றவர்க்கும் மற்றவர்க்கும் நல்லவர். பயிர்த் தொழிலால் நல்ல செல்வம் உள்ளவர். நிறைய வயல்களை உடையவர், எல்லாக் காரியங்களிலும் வெற்றி அடைபவர்.

ஞானி, பெரியோர், அந்தணர் இவர்கள் பால் பக்தி விசுவாசம் உள்ளவர். சத்திய சந்தர், அழகர், வீரர், செல்வச் சீமான், வாசனைப் பொருட்களில் பிரியன், அதிக செலவாளி, இரக்கமுண்டு, எச்சரிக்கையுண்டு. கண் காது நோய்கள் ஏற்படுவதும் உண்டு.

பருத்த வாளிப்பான உடல் தோற்றம் உண்டு. கீர்த்திமான், சிடுசிடுப்பும் கவலையும் தயக்கமும் உள்ளவர். கெட்டிக்காரரர். அளவாக உண்பவர். ஆடை அணி அலங்காரப் பிரியர். கூர்மையான பார்வையும் உள்ளவர்.

நடுத்தர உயரம், ஒளி வீசும் உடல், அளவான அங்கங்கள், நீள்வட்டம் அல்லது முக்கோணம் போன்ற முகம், இவை உள்ள நடுத்தர சாதாரண அழகுத் தோற்றம் உள்ளவர். மாநிறம் அல்லது சிறிது தூக்கலான செம்மை நிறம் உள்ளவர். விரைந்து பேசுவார்; விரைந்து நடப்பார்.

சாந்த சுபாவம், சதா ஆகாயக் கோட்டை கட்டும் கற்பனை, உதாரகுணம் ஆகியவை உள்ளவர். இவர் சாது; பூசல் சண்டை இவற்றை விரும்பாதவர். அஹிம்சையில் பற்று உண்டு. சிக்கல்கள் வரும்போது சமாளிக்கத் தைரியமற்றவர். இதனால், எளிதில் சோர்வு அடைபவர். சாத்விக குணம் உள்ளவர், லக்னம் அசுப சம்பந்தம் பெற்றால் சிற்றின்பத்தில் இச்சை அதிகமுண்டு; சதா பெண்களைப் பார்த்து மகிழும் குணமும் உண்டு. எல்லாம் சுமுகமாகவே முடிப்பதில் விருப்பமுள்ளவர், பக்திமான், பக்தியில் தன்னை மறப்பவர்.

காவியம், நாடகம், சங்கீதம், நடனம்; இவற்றில் ஈடுபாடு உண்டு. சோக முடிவுள்ள கதை கற்பனைகளால் மனம் பதறுவான். தந்திர புத்தியற்றவர். அமானுஷ்யமான விஷயங்களை ஆராய்வதில் சமர்த்தர். மானசீகத் தொழில்களே இவருக்குப் பெரும்பாலும்

அமையும். யோகம், தியானம் போன்றவற்றில் சாதனையாளர்.

நீர்நிலை, கடல் சம்பந்தமான தொழில்கள் அமையும். திரைப்படக், கல்வித் துறைகள் இவையும் தொழிலாகலாம். ஏழையாயினும் முயன்று வசதிகளைப் பெறுபவர். இவர் நண்பர்கள் மத்தியிலேயே இவருக்கு மறைமுகமான எதிரிகள் உண்டு, சிலேத்தும வகை நோய்கள் ஏற்படலாம்.

3, 4, 7, 12—இந்த வயதுகளில் இருமல், சுரம், உஷ்ண ரோகம் இவற்றால் பீடைஉண்டாகலாம். காரகன் மாரகன் முதலியவற்றை அட்டவணை பார்த்துத் தெரிந்து கொள்ளவும். நூறு வயது வரை வாழ வழி உண்டு.

கவலை, தொல்லை முதலியவற்றால் 86 ஆம் வயதில் ஆடிமாதம் சனிக்கிழமை விசாக நாள் அமரபட்சத்தில் அஸ்தமிக்கும் சமயம் இயற்கை எய்தலாம். இது தாண்டினால் நூறு வயதிருப்பான்.

குறிப்பு: இதற்கு லக்ன நிர்யாண சமயம் நூலில் தரப்படவில்லை. மரணகண்டி சாத்திரத்தில் கூறிய காலசக்ர தசையில் நடுநவாம்சத்திற்குக் கூறியதை இங்கு கொடுத்துள்ளோம்.

## அத்தியாயம்—6

# துவாதச லக்ன சங்கிரகம்

**12 லக்னங்களைப் பற்றிய செய்திகள் :**

இதுவரை 12 லக்னங்களைப் பற்றிய விரிவான செய்திகளைப் பற்றி எழுதினோம். இனி, சில சாரமான விஷயங்களை இங்கே எழுதுகிறோம்.

1. மேஷத்தில் 0° முதல் 3°-20, வரை இலக்னம் உதய மாகி செவ்வாயும் வலுத்திருந்தால், மிகவும் நல்லது.

2. ரிஷபம்: இந்த லக்னக்காரர்களுக்கு நடுவயது, அந்திம வயது இவை சௌக்யமாக இருக்கும். இதில் 13°—20' முதல் முதல் 16°—40' வரை பிறந்திருந்தால் வாழ்க்கை உயர்வாக இருக்கும். சுக்கிரன் லக்னத்திலோ அல்லது 7 இலோ இருந்தாலும், நல்ல உயர்வுண்டு.

3. மிதுனம் : இதில் 26° —40' முதல் 30° பாகைவரை பிறந்திருந்தால் வாழ்க்கை சிறப்பாக இருக்கும். புதன் லக்னத்திலிருந்தால் வாழ்க்கை மேலும் உயர்வாக இருக்கும்.

4. கடகம் : இதன் அதிபதியாகிய சந்திரனைப் போலவே, இந்த லக்னத்தில் பிறந்தவர் வாழ்நாள் உயர்ந்தும் தாழ்ந்தும் மாறிமாறி வாழ்க்கை அமையும். மனைவிக்கு அடக்கமானவர். இதில் 0°—3°20' வரை ஜனனமானால் வாழ்க்கை உயர்வாக அமையும்.

5. சிம்மம்: தாய்க்கு வேண்டியவர் 13°—20' முதல் 16°—40' வரை பிறந்திருந்தால், வாழ்க்கை சிறப்பாக அமையும்.

கன்னி : இதில் 26°—40' முதல் 30° வரை பிறந் திருந்தால், வாழ்க்கை சிறப்பாக அமையும்.

7. துலாம் : வாழ்க்கையின் கடைப்பகுதியில் இவ னுக்கு மேன்மை உண்டு. இதில் 0° முதல் 3.20' வரை பிறந்தவர்கள் மிகவும் சிறப்படைவார்கள்.

8. விருச்சிகம் : இளமையில் நோயாளி. குரு வலு வாக அமைந்து, இந்த லக்கினத்தில் '13° – 20' முதல் '16° - 40' வரை பிறந்திருந்தால், உயர்ந்த வாழ்வு உண்டு.

9. தனுசு : இதில் '26° - 40' முதல் 30° வரை ஜனன மானால், தரமான நல்ல வாழ்க்கை உண்டு.

10. மகரம் : தன்னின் மூத்த பெண்ணின் சேர்க்கையால் அவப் பெயர், பழி உண்டாகலாம். இதில் 0° முதல் 3° — 20 வரை பிறந்திருந்தால் சிறந்த வாழ்க்கை உண்டு.

11. கும்பம் : 13° - 20 முதல் 16° - 40-க்குள் பிறந்திருந்தால் வாழ்க்கை உயர்வாக அமையும்.

12. மீனம் : அதிக உழைப்பில்லாதவன். வெளி நாட்டுத் தொடர்பால் உதவிகள் உண்டு. இந்த லக்னத்தில் 26° - 40 முதல் 30° பாகைக்குள் பிறந்தால் அதிக முன்னேற்றம் உண்டு. குரு லக்னத்தில் வலுப்பெற்றால் மேலும் உயர்வாக வாழ்க்கை அமையும்.

ஒவ்வொரு ராசிக்கும் கால புருஷன் அங்கங்கள் சொல்லப் பட்டுள்ளன. ஜாதகத்தில் பாபக் கோள் இருக்கும் ராசியின் அங்கத்தில் நோய் ஏற்படும். அந்த பாவ பலன் கெடும்.

சிம்மம் கால புருஷனின் புத்ர ஸ்தானமாகும். இதில் பாபக்கோள் இருந்தால் சந்ததிக்கு அரிஷ்டம். அதேபோல் கோசாரத்தில் இலகு அசுப பலன் தரும்படி அமைந்தால் புத்திர தோஷம் கருச்சிதைவு என்னும் இவை ஏற்படும்.

9 ஆம் ராசியாகிய தனுசு நன்கு அமைந்து ஜாதகத்தில் வலுப்பெற்று, குருவும் நன்கு அமைந்தால் நல்ல மத நம்பிக்கை, வெளி நாட்டுப் பயணம் முதலியவை ஏற்படும். அதேபோல் கோசாரத்தில் தனுசில் சுபக்கோள் அமைந்து, அது ஜென்ம ராசியிலிருந்து நல்வ பலன் தருவ தானால், வெளிநாட்டுப் பயணம் வெற்றியுடன் முடியும். நல்ல ஆதாயமும் கிட்டும்.

இதேபோல், மற்ற ராசிகள் குறிப்பிடும் அங்கங்கள் காரகங்கள் இவை ஜாதகத்திலும் கோசாரத்திலும் இதே போல் நல்லது அல்லது கெடுதி தரும் வகையில் பாதிக்கப் படும்.

இதேபோல், ஜாதகத்தின் லாபஸ்தானம், அதன் அதிபன் குறிக்கும் சாதி அல்லது வகுப்பினர் மூலம் ஆதாயம் கிட்டும்.

ஒரு ஜாதகத்தில் ஆண் ராசிகளில் அதிக கோள்கள் இருந்தால், ஆணின் முரட்டு சுபாவம், அது பெண் ஜாதகமாயினும் இருக்கும். அதாவது அவள் முரடாகவே இருப்பாள். இதே போல் ஜாதகத்தில் பெண் ராசிகளில் அதிகக் கோள்கள் இருந்தால் ஜாதகர் பெண்ணின் நளினம் பெற்று விளங்குவார். கோசாரத்திலும் அன்றாடம் ஏற்படும் இக் கோள்களின் மேற் குறிப்பிட்ட அமைப்புகளுக்கேற்ப ஒருவனின் சுபாவம் மாறி மாறி இருக்கும்.

குரு சுக்ரர்கள் ஒற்றை ராசிகளில் அதிக நன்மை தருவார்கள். செவ்வாய், சனி இரட்டை ராசிகளில் அதிகக் கெடுதியையே தருவார்கள். இது ஜாதகம் கோசாரம் இரண்டுக்கும் பொருந்தும்.

குருட்டு ராசிகள் பகல் குருடு இரவில் குருடு என இரு வகை. இவை ஒன்று ஜாதகத்தில் 2ஆம் இடமாக வந்து, அதிபர்கள் கெட்டால், பார்வைப் பாதிப்பு ஏற்படும். முடம், நொண்டி என்று வகைப்படுத்தப்பட்ட ராசிகளின் விஷயத்திலும் இவை பொருந்தும்.

இதே போல் சர ராசிகளில் உள்ள கோள்கள் ஆரம்பத்திலும், உபய ராசிகளில் உள்ள கோள்கள் நடுவிலும், ஸ்திர ராசியில் உள்ள கோள்கள் கடைசியிலும் பலன்தருவதாகும். இது கோசாரம், தசாபுத்தி இரண்டுக்கும் பொருந்தும். எல்லாவற்றையும் இப்படி ராசி கோசாரத்தின் விஷயங்களிலும், ஜாதக பலன்களின் விஷயத்திலும் பலனை மதிப்பீடு செய்ய வேண்டும்.

அத்தியாயம்—7

# பன்னிரு பாவ காரகங்கள்

இது வரை கோள்கள், 12 ராசிகள், அவை லக்னங்களாக அமைந்தால் அதன் தன்மைகள் பற்றி எல்லாம் விளக்கப்பட்டன. இந்த 12 ராசிகளில் எதுவானாலும் லக்னமாக அமையலாம், இப்படி அமையும் லக்னத்திலிருந்து எண்ணப்படும் 12 ராசிகளும் 1 ஆம் வீடு 2 ஆம் வீடு என்று எண்ணப்படும். இப்படி வரும் 12 வீடுகளும், பாவங்கள் என்றும் சொல்லப்படும். உதாரணமாக, மிதுனம் லக்னமாக வந்தால், அது 1ஆம் பாவம் அல்லது லக்ன பாவம் என்று சொல்லப்படும். கடகம் 2ஆம் பாவம் என்று எண்ணப்படும். இப்படியே எண்ணிக் கொண்டு வந்தால், ரிஷபம் இந்த மிதுன லக்னத்திற்கு 12ஆம் பாவம் ஆகும், இப்படி அமையும் ஒவ்வொரு பாவமும் வாழ்க்கையின் பல்வேறு துறைகளையும், அங்கங்களையும் குறிப்பனவாகும், இவை பாவகார்கங்கள் எனப்படும். கோசார பலனிலும், இவை ஜென்ம ராசி அல்லது சந்திர ராசியை முதலாகக் கொண்டு 12 பாவங்களாக எண்ணி. இதே போன்று காரகங்களும் அவற்றிற்குப் பலன்களும் கொள்ளப்படும். ஆகையால், கோசார பலன்களைத் தெளிவாக அறிந்து கொள்வதற்கு இவற்றைப் பற்றி அறிந்து கொள்வதும் முக்கியமாகும்,

உதாரணமாக, ஒருவரின் ஜென்ம ராசி கன்னி என்று வைத்துக் கொண்டு 5இல் மகரத்தில் கோசாரத்தில் சனி வந்தால் குழந்தைகளுக்கு அதிர்ஷ்டமும், இவருக்கு மனக் கலக்கமும் சங்கடம் கவலை போன்றவையும் உண்டாகும். இப்படியே குரு அமைந்தால் புத்திர விருத்தியும் மகிழ்ச்சியும் ஏற்படும். எனவே, பாவகாரகங்கள் அறியப்

பட வேண்டியவையே. இந்த 12 பாவகாரகர்களும் ஒவ்வொரு பாவ இறுதியிலும் குறிக்கப்பட்டுள்ளனர்.

**1. முதல்பாவம். இது சரீர பாவம் என்றும் சொல்லப்படும்.**

சரீரம், சரீர ஒளி, வடிவம், பெரும் தனம், வயிறு, சிரசு, ஆபரணம், நினைப்பு, மனக்கவலை, அழகு, புகழ் அடையாளம், மகிழ்ச்சி. ஆயுசு, ஜாதி, ஆசாரம், இரட்சித்தல், ஜீவனம் சரீர புஷ்டி. நித்திரை, கனவு, தலைமயிர், அங்க அடையாளம், ஐம்புலன்,

போன்ற விஷயங்களை அறிய வேண்டும். கோசார்த்தில் ஜென்ம ராசியில் சனி இருப்பதாக வைத்துக் கொண்டால், மேலே சொன்ன எல்லா விஷயங்களும் பாதிக்கப்படும் என்று சொல்லலாம். இந்த பாவத்திற்குக் காரகர் சூரியன்.

**2ஆம் பாவம்—இது முக்கியமாக தனம் குடும்பம் எனப்படும்.**

அதிர்ஷ்டம், தனவிருத்தி, குடும்பம், வலக்கண். கல்வி, பெருஞ்செல்வம், வாக்கு, சாஸ்திர ஆராய்ச்சி, வேகமான நடை, மனம். மறுத்துரைத்தல். தங்கம், பொன் நவரத்தினம், தானியம், கிரய விக்கிரயம். தன சம்பாத்ய முயற்சி, சிநேகிதரால் வருமானம், அந்நியரால் ஜீவனம், ஆடை, குதிரை (வாகன வகை), முகம், நாக்கு, நகம், போஜனம். சாத்தியம் அல்லது, அசாத்யம் (முடிதல் அல்லது முடியாமற் போதல்), கோபம். ஸ்திரபுத்தி, கபடம், ஆஸ்தி - சொத்து.

இந்த பாவத்திற்குக் காரகர் - குரு - தனகாரகனும் இவரே.

**3 ஆம் பாவம் — இது முக்கியமாகச் சகோதர ஸ்தானம் எனப்படும்.**

வெற்றி, எண்வகைப் போகம் (அவையாவன: பெண், ஆடையாபரணம், பரிமளம், போஜனம்,

தாம்பூலம், சங்கீதம், மஞ்சம் என்பன) ஆளடிமை, வேலைக்காரர்கள் - சங்கீதம், தேகபலம், கனிஷ்ட (இளைய) சகோதரம், காது, காது சம்பந்தமான நோய்கள் காதணி (கர்ண பூஷணம்) போஜன பாத்திரம் (சாப்பிடப் பயன்படும் வெள்ளித் தட்டு, கிண்ணம் போன்றவை), வீரம் – பராக்கிரமம் தொழில் விருத்தி, தைரியம், எஜமானன், பூமிவிருத்தி, பூமியால் இலாபம், நல்ல காரியம், சௌகரியம், பாதம், கழுத்து, சாரீரம், தூய்மை, கஷ்ட போஜனம், சாமர்த்தியம், யுத்தம், தாய்க்கு ஏற்படும் மனக் கிலேசம் இவற்றை இது குறிக்கும்.

தவிரவும், 8-க்கு 8-ஆம் இடமான இது, மற்றோர் ஆயுள் ஸ்தானம் என்றும் கொள்ளப்படுவதால், மூன்றா மிடத்தினால் ஆயுளைப் பற்றியும், அறிய வேண்டுவது அவசியமாகும். கோசாரத்தில், சந்திரனுக்கு 3இல் சுபக் கோள் இருந்தால் ஆயுளுக்கு அரிஷ்டம். அதிலும், குரு தான் ஆயுள் பங்கத்தை இந்த இடத்தில் ஏற்படுத்தும். இப்படிப்பட்ட செய்திகளை அறிந்து கொள்ளவே இந்த பாவ பலன்கள் இங்கு எழுதப்படுகின்றன. 3-ஆம் பாவத்திற்குக் காரகர் - செவ்வாய். சகோதர காரகரும் இவரே.

**4–ஆம் பாவம்.** இது முக்கியமாக மாத்ரு சுக பாவம் எனப்படும்.

வித்தை, வாகனம், சுபகாரியம், வியாபாரம், வீடு, வெற்றி, கீர்த்தி, சுகசௌக்யம், மாத்ரு (தாய்), சுற்றத்தார், புதையல், லாட்டரி, தாயின் குணக் கெடுதி, சுகந்தம், பால்வளம் (பசு முதலியவை) கோயிற் பணிகள், நண்பர்கள், மருந்து, போக்குவரத்து அதாவது ஓர் இடத்திற்குச் சென்று வருதல், ஸ்தான பேதம் அல்லது மனை விற்றல் வாங்கல் என்னும் Real Estate இதன்

மூலம் லாபம், இராச கிருஹப் பிரவேசம் அல்லது முக்கிய மானவர்கள் நட்பு, வாகன சுகம் (கார், ஸ்கூட்டர் பயணம் செய்யும் ரெயில் விமான சௌகரியம், முதலியன) நாட்டை ஆளும் உரிமை-எம். எல் ஏ., எம்.பி., போன்றவை வித்தை, கல்வி, பராக்கிரமம், வெற்றி, விநோதம், ஆலோசனை, கனவு, தந்தையை அல்லது அந்த வர்க்கத்தைப் பற்றிய கவலை, விரதம், உபவாசம், அண்மைத் தூரத்தில் உள்ள இடங்களுக்குப் பயணம் (Short travel) இந்த பாவ காரகர்கள் சந்திரன், புதன் ஆவர். இதில் மாத்ரு காரகன் சந்திரன், வித்யா காரகர் புதன்.

5-ஆம் பாவம். இது புத்திர ஸ்தானம், மந்திர ஸ்தானம் எனப்படும்.

புத்திரர், புத்திரிகள், அவர்கள் ஒற்றுமை, தந்தையின் தந்தையாகிய தகப்பன் வழிப் பாட்டன், தன் சந்ததி, பூர்வ நல்வினை பிரபந்த உணர்ச்சி—(சிறு காவியங்களை அனுபவிக்கும் திறமை) கர்ப்ப உற்பத்தி, மந்திர உபதேசம், அதர்வண வேதப் பயிற்சி. புத்தி, புத்தியின் கூர்மை, இரசவாத வித்தை என்னும் பொன்செய்யும் வித்தை, மனக்கூர்மை, தெளிவு. நீதி சாஸ்திரம், புராண இலக்கிய உணர்வு, மந்திர ஆலோசனை, பத்திரிகைத் தொழில். நல்ல வார்த்தை, சுப வாக்கு, தூர தேசத்தி லிருந்து வரும் விசனம், சங்கடமான செய்தி, பலவித கல்வி கேள்வியால் சொற்பொழிவாற்றும் திறமை. இவை எல்லாம் 5-ஆம் பாவத்தைக் கொண்டு அறிந்து கொள்ள வேண்டும்,

இதற்குக் காரகர் குரு. புத்ரகாரகரும் இவரே.

6-ஆம் பாவம். இது சத்துரு ரோக ருண பாவம் எனப்படும்.

அம்மான், நோய், பகைவர், ஆயுதங்களால் ஏற்படும் காயம், இரணம், தாயாதிகள், பங்காளிகள், உடலுக்குப்

பலவகையாலும் ஏற்படும் வருத்தம், பண நஷ்டம், (பிக் பாக்கெட் முதலியவற்றால்) திருடர் பயம், ஜலகண்டம் சிற்றின்பத்தில் மூழ்கியதால் ஏற்படும் மேக நோய்கள், பாம்பால் ஏற்படும் கண்டம், சிறை வாசம். நாற்கால் ஜீவன்களால் ஏற்படும் கண்டம், யானை, மாடு, குதிரை, முட்டி மிதித்து ஏற்படும் வருத்தம் முதலியன. தன் அடிமையாட்கள், காரியத் தடங்கல் ஏற்படல், சந்தேகம் மந்தகுணம் தனக்கு ஏற்படும்.பழி, தூஷணம், முதலியன. குரூரச் செயல்கள், அம்மை வைசூரி நோய் முதலியன.

இங்கு எல்லாம் தீயவையே கூறப்பட்டன. இங்கு கோசாரத்தில் சனி செவ்வாய் போன்ற அசுபக் கோள்கள் வந்தால் இவை எதுவும் இல்லாமல் இவற்றிற்கு எதிரான நன்மைகளே ஏற்படும் என்பது தெளிவு. அதாவது Double negative make a positive என்பதுபோல். அதே போல் நல்ல காரகங்கள் இருந்து சுபக்கோள்கள் இருந்தால் — வந்தால் அதில் சொன்ன நல்ல பலன்களும் பொருள்களும் விருத்தியாகும் என்று கொள்ள வேண்டும்.

இதற்குக் காரகர்கள் செவ்வாய் மற்றும் சனி ஆவர்.

7–ஆம் பாவம். இது முக்கியமாகக் களத்திர பாவம் எனப்படும்.

விவாகம், மனைவி, சிற்றின்பம், வழக்கு, சுற்றத்தினர் சேர்க்கை, சன்மானம், வியாபாரம் முக்கியமாக கூட்டு வியாபாரம், விவாகமாகும் காலம், மனைவியின் ஆயுள் வஸ்திர வியாபாரம் போக சக்தி (வீரிய விருத்தி) களத்திர சுக துக்கம் முதலியவையாம்.

7–ஆம் இடம் விவாகத்தால் ஏற்படும் மனைவியால் ஏற்படும், சுகம் என்றும் 4–ஆம் இடம் யோக பத்தினி அதாவது தன்னிச்சையால் ஏற்படும் உறவு போன்ற வேறு பெண்போகம் என்றும் கொள்ளப்படுகிறது.

இதற்குக் காரகர் — சுக்கிரன் களத்திர காரகரும் இவரே.

8-ஆம் பாவம். இது முக்கியமாக ஆயுள் பாவம் எனப்படும்.

வாள் (துப்பாக்கி) முதலியவற்றால் ஏற்படும் காயம், போர், சண்டை, மலை, பல மாடிக் கட்டடம், போன்ற உயர்ந்த இடங்களிலிருந்து விழுந்து அல்லது குதித்து உயிர் துறத்தல், தீராத வியாதிகள், காரியம் இனி நிறைவேறா வண்ணம் தடங்கல் ஏற்படல், நீங்காத மனவியாகூலம். வருத்தம், நீங்காத பலவகைக் கஷ்டங்கள், துன்பங்கள், மான பங்கம், ஒருவனின் ஆயுள் அளவு நீங்காத தீராத பகை வீணான தேவையற்ற அலைச்சல், பாவம், அஞ் ஞானம், களத்திர விரோதம், பயம், முதலியவற்றை எட்டாம் பாவம் குறிக்கும். வழக்காடல், கோர்ட் விவ காரத்தையும் இந்த எட்டாமிடம் குறிக்கும்.

கோசாரத்தில் 8-இல் (சந்திர ராசிக்கு) பெரும்பாலும் சுப மற்றும் அசுபகோள் இரண்டும் தீய பலனையே தரு கின்றன.

6ஆம் இடம் தீரும் வியாதியையும் 8ஆம் இடம் தீராத உடலோடு இறப்புவரை நீடிக்கின்ற இறப்புக்கே காரண மாகின்ற கருமவியாதிகளையும் குறிக்கும்.

இதற்குக் காரகர் சனி. ஆயுள் காரகரும் இவரே.

9ஆம் பாவம். முக்கியமாக இது பிதுர் (தகப்பன்) மற்றும் பூர்வ புண்ய பாவம் என்றும் சொல்லப்படும்.

தகப்பனார்— மற்றும் அவரைப் பற்றிய செய்திகள் குலவிருத்தி, தருமம், தகப்பனார் வழி சொத்தாகிய பிதுரார் ஜிதம், மடம், சர்ச் போன்றவற்றின் மேல் ஆதிக்கம் பெறல், உயர் தருமம், தண்ணீர்ப் பந்தல் வைத்தல். தருமக் கிணறு வெட்டல், தான் விரும்பிய செல்வம் பெறல்,

வேதம், உபநிடதம். இதிகாசம், புராணம் போன்றவற்றில் பயிற்சி, ஞானப் பெருக்கம், உபதேசம், குருகாரியம் பார்த்தல், தீர்த்த யாத்திரை போதல்; உள் வெளிநாட்டு நீண்ட தூரப் பயணங்கள். தெய்வசிந்தனை, பக்தி, பெரியோர், ஞானிகள் தரிசனம், நீர் கடல்வழி வெளி நாட்டுப் பயணம்; அங்கு வாசம். பட்டாபிஷேகம், தற்கால மந்திரி பதவி, பிரதமர் போன்ற பதவி ஏற்பு வைபவங்கள், சகோதர சுகதுக்கம், குளம் வெட்டல், ஆலயத் திருப்பணி செய்தல், குருவால் உபதேசம் பெறல், சேவை, விசுவாசம்' தீட்சை, அதாவது சைவ வைணவ மரபுகளின் முக்கியமான தீட்சை முறைகளை ஏற்றுக் கொள்ளல், விதரணம் அதாவது சாமர்த்தியம் அல்லது பலருக்கும் பகிர்ந்து அளித்தல் ஆகியவற்றை இதனால் அறிந்து கொள்ள வேண்டும்.

இதற்குக் காரகர் குரு.

## 10ஆம் பாவம். கரும பாவம் அல்லது ஜீவன பாவம்

ஒருவன் செய்யும் அல்லது ஒருவனுக்கு வாய்க்கும் தொழில் அல்லது உத்தியோகம், அரசாட்சி எம்.எல்.ஏ; எம்.பி.மந்திரி போன்ற அரசபதவிகள் ஏற்படல், நாடுநகரம் அமைத்தல், காரியம் (கருமம்), அருள் (கிருபை), பூஜை அறை, சிரார்த்தம் தெய்வ வழிபாடு, படை பலம், (இந்தக் காலத்தில் ஒரு நாட்டின் Defence அல்லது பாதுகாப்புத் துறையின் வலிமை), புகழ் (பிரபலம்), தன்மானம் மரியாதை, காயகற்பம். தான் உடுக்கும் ஆடை வகை, மழை, தூரதேச சமாசாரம், தன் முக்கிய ஜீவனம், தன் ஆட்சி அதிகாரம் (ஆளுமை Ruling Power) முதலியவற்றை இந்த பத்தாம் பாவம் குறிப்பதாகும்.

இதற்குக் காரகர்கள்—சூரியன், புதன், குரு, சனி, ஆகிய நால்வரும் ஆவர். இவர்கள் ஜீவனகாரகர் எனப் படுவர். இதில் புதன் கர்மகாரகன் எனப்படுவான்.

**11ஆம் பாவம்.** இது முக்கியமாக லாபஸ்தானமாகும்.

மூத்த சகோதரம், சேவை செய்பவர்கள், இளைய மனைவி (மூத்தவள் இருக்கும் போதே) பொன் வித்தைகளால் (இரச வாதத்தால்) ஆதாயம் கிடைத்தல், பல்லக்கு முதலிய உயர்தர வாகனங்கள், பயிர்த்தொழிலால் ஆதாயம், குதிரை யானை போன்ற உயர்தர வாகனம், தெளிந்த சாஸ்திர அறிவு, மனக்கவலை, கிலேசம் நிவர்த்தி பொன்னாடை சால்வை முதலியவை போர்த்தப்படல், காரியம் நிறைவேறல், தெளிந்த அறிவு, இலாபம் உண்டாகும் முயற்சிகள், (காரியங்கள்), செய்தொழிலில் ஏற்படும் லாபம் அல்லது நஷ்டம், நஷ்டதனப் பிராபதி (அதாவது இனி வராது என்று எண்ணிய தனக்கு வர வேண்டிய தனம் வரல்) சத்தியம் அசத்தியம் (அதாவது ஒருவன் எவ்வளவு தூரம் உண்மையானவன் என்று அறிதல்) (ப்ரீதி) அன்பு, தாய்மேல் பாசம், ஆகியவை லாபஸ்தானம் என்ற 11ஆம் இடத்தினால் அறியப்படும். கோசாரப்படி ஒருவன் சந்திரன் உள்ள ராசியிலிருந்து சுபன் அசுபன் இருவருமே 11இல் நல்ல பலனே தருவர். அவை ஏற்படுத்தும் முகாந்திரம் அந்தக் கேள்விகளின் தன்மைக்கு ஏற்ப அமையும். இந்த ஓர் இடத்தில் தான் கோசாரப்படி எல்லாக் கோள்களுமே நல்ல பலன்களைத் தருபவையாகும்.

இதற்குக் காரகர் குரு. தனகாரகரும் இவரே.

**12ஆம் பாவம்.** முக்கியமாக இது விரயஸ்தானம் எனப்படும்.

பாபகாரியங்களால் ஏற்படும் செலவு, வெளிநாட்டில் தொழில் அமைதல், பணம் செலவு செய்து அதனால் ஏற்படும் சுகம், தன் மனைவியுடன் அனுபவிக்கும் சயன சுகம், கோர்ட் வழக்கு, மறுமைப் பேறு, மோட்சம், மறுமையில் பிறவி அல்லது சுவர்க்கம், நரகம் ஆகிய இவை. தன வரவு (செலவுக்குத் தேவைப்

படும் வரவு), புண்ணியம், தியாகம், துறவு, யாகாதி சுப புண்ய காரியங்கள், தகப்பனாருக்கு ஏற்படும் விசனம் கஷ்டம், குலத்தின் மேன்மை, போக சுகம், அம்மானால் ஏற்படும் சுகம் துக்கம், (பந்தனம்) சிறைப்படல், விடுதலை,

இதற்குக் காரகர்கள் சனியும் கேதுவும் ஆவர். இதில் செலவுக்குச் சனியும், மோக்ஷத்திற்குக் கேதுவும் காரகர் ஆவார்கள்.

ஒருவர் ஜென்ம ரகசிக்கு 12இல் கோசாரத்தில் சுபக்கிர கங்களில் சுக்கிரன் இருந்தால், போக சுகமும், அதனால் ஏற்படும் செலவும்; குரு இருந்தால் சுபச் செலவையும்; அசுபக் கிரஹங்கள் இருந்தால் அவற்றின் தன்மைக்கேற்ப அவ்வகையில் கஷ்டமும் செலவும் ஏற்படும் என்று, 12ஆம் பாவத்தைப் பற்றி அறிய வேண்டும்,

### அத்தியாயம்—8

## நல்லவர்கள் கெட்டவர்கள்

கிரகங்களின் சுபத்துவம் அல்லது அபத்துவம் பற்றி நல்லவர் யார்? கெட்டவர் யார் என்று, கிரகசீல நவக்கிரஹ அத்யாயத்தில் (3ஆம் அத்யாயம்) விளக்கியுள்ளோம். அது சம்பந்தமான சில முக்கிய விஷயங்களையும் ஒவ்வொரு லக்னத்திற்கும் யார் சுபர், அசுபர், யோக காரகர், மாரகர் போன்ற விஷயங்களையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டி உள்ளது. இதையே இங்குள்ள தலைப்பில் அறிந்து கொள்கின்றோம்.

**வளர்பிறையில் பிறந்தவர்களுக்கு—**

குரு, வளர்பிறை சந்திரன் - பூரண சுபக் கோள்கள்
சுக்கிரன்—முக்கால் சுபக்கோள்

புதன்—அரைப்பங்கு சுபக்கோள்

சூரியன், செவ்வாய்—கால்பங்கு சுபக்கோள்

சனி, இராகு, கேது—இவர்களுடன் சம்பந்தப்பட்ட குரு—இவர்கள் முழுப் பாவிகள்.

புதன் —அரைப்பாவி.

சுக்கிரன்—கால்பங்கு பாவி.

தேய்பிறையில் பிறந்தவர்களுக்கு

சனி, இராகு, கேது—பூரண சுபர்

சூரியன், செவ்வாய் — $\frac{3}{4}$ சுபர்

புதன்—$\frac{1}{2}$ பங்கு சுபர்

சுக்கிரன்—கால்பங்கு சுபர்

குரு, சந்திரன்—முழுப்பாவிகள்

சுக்கிரன்—முக்கால் பாவி

புதன்—அரைப்பாவி

சூரியன், செவ்வாய்—கால் பங்கு பாவி.

குறிப்பு : மேலே சொல்லப்பட்டவை சில சிறப்பான விஷயங்களுக்குத் தான் பொருந்தும். பொதுவாக கிரகங் களுக்கு வகுத்துள்ள சுபர் பாவி என்ற தன்மை கிரக சில சங்கிரக அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது. அதையே பெரும் பகுதியும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

மாரகஸ்தானம்—மாரகர்கள்

12 லக்னத்திற்கும் சுபர் யார் பாபர் யார் என்ற தன்மைகள், நூல்களில் முக்கிய கோணங்களில் ஆய்ந்து கூறப்பட்டுள்ளன. அவற்றை இதை அடுத்துவரும் அட்ட வணையில் வகைப்படுத்திக் கூறியுள்ளோம். அதற்கு முன்னோடியாக, சம்பந்தபபட்ட சில கருத்துகளை இங்கே கூறுகின்றோம்.

1. சராராசி லக்னமானால் 2, 7க்கு உடையவர் மாரகர்.
   ஸ்திர லக்மைானால்—3, 8க்கு உடையவர் மாரகர்.

   உபய லக்னமானால்—7,11க்கு உடையவர்கள் மாரகர்.

2. தீர்க்காயுள் ஜாதகனுக்கு 7,9ஆம் தசைகள் மாரகம் செய்யும்.

   மத்திம ஆயுள் ஜாதகனுக்கு 3, 5, 6ஆம் தசை மாரகம் செய்யும்.

   அற்பாயுள் ஜாதகனுக்கு 1, 3ஆம் தசைகள் மாரகம் செய்யும்.

3. 1. லக்ன, அஷ்டம, தசமாதிபதிகள் மூவரும் பலம் பெற்றால், தீர்க்காயுள்—120
   2) இருவர் பலம் பெற்றால் மத்திம வயது—60.
   3) ஒருவர் பலம்பெற்றால் அதில் பாதி அற்பாயுள்—32
   4) மூவரும் பலவீனமானால் அது மிகவும் அதர்மம் 12 வயது வரை தான்.

12 லக்னங்களுக்கும் பாதகஸ்தானம்—பாதகாதிபர்கள்

| லக்னம் | பாதகஸ்தானம் | பாதகாதிபதி | இடம் |
|---|---|---|---|
| மேஷம் | கும்பம் | சனி | 11 |
| ரிஷபம் | மகரம் | சனி | 9 |
| மிதுனம் | தனுசு | குரு | 7 |
| கடகம் | ரிஷபம் | சுக்கிரன் | 11 |
| சிம்மம் | மேஷம் | செவ்வாய் | 9 |
| கன்னி | மீனம் | குரு | 7 |
| துலாம் | சிம்மம் | சூரியன் | 11 |
| விருச்சிகம் | கடகம் | சந்திரன் | 9 |

| | | | |
|---|---|---|---|
| தனுசு | மிதுனம் | புதன் | 7 |
| மகரம் | விருச்சிகம் | செவ்வாய் | 11 |
| கும்பம் | துலாம் | சுக்கிரன் | 9 |
| மீனம் | கன்னி | புதன் | 7 |

## கோள்கள் சுபம் அல்லது அசுப பலன் தரும் விதம்

1 சுபர் கேந்திராதிபதியானால் அசுபர். இவரே ஒரு கோணத்திற்கும் அதிபரானால் சுபபலன் ஏற்படும்.

2 அசுபக் கோள் கேந்திராதிபதியானால் சுபபலன் இவர்கள் இதே சமயம் 6, 8, 12 க்கு ஆதிபத்தியம் பெறாமல் இருக்கவேண்டும், திரிகோணாதிபதி யாராயினும் சுபன், அதே சமம் 6 ஆம் ஆதிபத்யமும் பெற்றால் அசுபன்; எனவே, கேந்திரம் சுபம் அசுபம் இரண்டும் இல்லை.

3 லக்னாதிபதி கேந்திராதிபதியுமானால் சுபன். அவர்களே 6, 8, 12 க்கு அதிபதியாயின் அசுபர்; தனிப்பட்ட 6, 8, 12 ஆம் அதிபதிகளைவிட, லக்னாதிபத்தியம் பெற்ற 6, 8, 12 க்கு உடையவர்களுக்கு அசுபத்துவம் குறைவு.

4 4, 10 க்கு உடையவர் சுபராயினும், அசுபராயினும், லக்னாதிபத்தியமும் பெற்றால் சுபம் அசுபம் இரண்டும் அற்ற பலன், சந்திரன் 4, 10 க்கு உடையவரானால், சுபன் அல்லன், லக்னாதிபதியானால் சுபன், சூரியன் 4, 7 க்கு உடையவனானால் அசுபம் செய்யான்.

5 சிம்ம, துலா, கும்ப லக்ன ஜாதகங்களில் செவ்வாய் சுக்ரன் முறையே மறு ஆதிபத்யம் திரிகோணம் பெற்றதால் சுபர் ஆவர்,

5, 7 ஆம் அதிபர் மாரகன், இவன் சுபன் அல்லது அசுப கோளாயினும் அசுபனே. சனி நீங்கலாக மற்றவர்கள் 7 ஆம் அதிபதியாயின் அசுபருமில்லை, சுபருமில்லை, மாரகன் என்ற வகையில் சுபனும் தீயபலனே தருவான்.

6 திரிகோணங்களில் லக்னத்தைவிட, 5 ஆம் இடத்தைவிட, 9 ஆம் இடம் பிரபல சுபபலன் தருவதாகும்.

7 அசுப ஸ்தானங்களில் 3, 6, 11 இல் ஒன்றைவிட மற்றது வலியதாகும்.

8 இதேபோல் 1. 4, 7, 10 கேந்திரங்களில் ஒன்றைவிட மற்றது பலமுள்ளதாகும்.

9 ஒருவருக்கே 4, 5, ஆம் ஆதிபத்யமும், 9, 10 ஆம் ஆதிபத்யமும் வந்தால், பின்னவன் அதிக சுபன், இது சனியாகி துலாம் ரிஷப லக்னங்கள் விஷயத்தில் தான் சாத்தியமாகும்.

10 பாபர் கேந்திராபத்தியத்தைவிட கோணாதிபத்தியம் பெறும்போது அசுபத்துவம் மிகக்குறைவு,

11. 2, 12 க்கு உடையவர்கள் 3, 6. 8 க்கு உடையவர் ஆகாமல் இருந்து ஏதாவது திரிகோணாதிபத்திய சம்பந்தம் பெற்றால் தான் சுபபலன் தருவார்கள்.

12. 2 ஆம் அதிபதி யார் சம்பந்தம் பெற்றாலும்பெறாவிட்டாலும் மாரகன். மாரகன் என்ற வகையில் அசுபமும் மற்றப்படி மத்திய பலனுமே தருவான்.

13 ஆட்சி பெற்ற அஷ்டம லக்சேனர், அதிக அசுபர் அல்லர், மற்ற நிலைகளில் அஷ்டமேசன் (லக்னாதிபத்யம் பெறாத போது, அசுபனே.

14 3, 6, 8 க்கு உடையவர்கள் கேந்திராதிபதிகளாகி திரிகோணாதிபதிகள் சம்பந்தம் பெற்றால் மட்டும் சுபபலன் தரும் காரகர் ஆவர்.

15 யோககாரகர் 8 ஆம் அதிபதி சம்பந்தம் பெற்றால், சுபத்துவம் குறையும்.

16 அசுபர்களுக்கு 7 ஆம் ஆதிபத்தியம் மாரகம் இல்லை.

17 மாரகர் என்ற வகையில் 7 ஆம் ஆதிபத்தியம் பெற்ற சுபக்கோள் வலியவராவார். இந்த வகையில் சந்திரனைவிட சுக்கிரனும், அடுத்து புதன், குரு, இவர்களும் வலுவானவர்கள். இவர்களே லக்னாதிபத்யமும் பெற்றால் பாபத்துவம் குறையும்.

18 சுபர் திரிகோணாதிபத்யம் பெற்று பாபரான கேந்திராதிபதியுடன் சேர, வலுத்த ராஜயோக முண்டு, ஆனால், சப்தமாதிபதி புத்தி அந்தரங்களில் ஆரம்பத்தில் ராஜயோகமும் பின்னால் அசுபமும் (மாரகமும்) ஏற்படும்.

19 கன்னி மிதுனத்துக்குப் புதனும். தனுசு, மீனத்துக்கு குருவும் சுபர், முன்னதுக்குக் குருவும், பின்னதிற்கு புதனும் 7 ஆம் அதிபதி என்ற வகையில் பாபர்; மாரகர்,

20 சூரிய சந்திரர்களுக்கு 8 ஆம் ஆதிபத்ய தோஷம் கிடையாது. மற்ற அஷ்டமாதிபதிகளும் ஆட்சி பெற்றால் தோஷம் இல்லை.

21 ராகு, கேதுக்கள் தாங்கள் இருக்கும் பாவபலனைத் தருவர். யாருடனும் சேராது தனித்திருந்தால் தாங்கள் இருக்கும் பாவாதிபதியின் பலனைத்தருவார். திரிகோணத்தில் சுபபலனையும், 8 இல் தனித்திருந்தாலும் சுபபலனையும், 2, 7, இல் மாரக பலனையும், 12 இல் சமபலனையும் தருவர். 3, 6, 11 இல் இவர்கள் பாபர், திரிகோணாதிபதியுடன் கூடில் இவர்களும் யோககாரகர் ஆவர்.

22 சுபர்களான குரு, சுக்கிர, புத, சந்திரர்கள் 7 ஆம் ஆதிபத்யம் பெற்றால் மாரகர் ஆவர், அசுபர்கள் மாரகம் பெற்றால் அவர்கள் மாரகத்துவம் பெரும்பாலும் பாதிக்காது.

23 ராகு கேதுக்கள் எப்பொழுதும் தாங்கள் இருக்கும் ராசிகளில் ஆட்சி பெற்றவர்களாகக் கருதப்படுவர். திரிகோணத்தில் அதன் அதிபதியாகவும், மற்ற 3, 8, 6, 11 இல் அதன் அதிபர்களாகவும் கேந்திரத்தில் இருந்தால் சுப கேந்திராதிபதியாகவும், சுப அசுப பலன்களை மற்றக் கோள்களுக்குச் சொல்லப்பட்ட வகையில் நிர்ணயிக்க வேண்டும். அட்டமத்தில் ராகு கேதுக்கள் தனித்திருந்தால் சுபபலனே தருவர். இந்த நிலையில் இவர்கள் 8 இல் ஆட்சி பெற்றதாகக் கருதப்படுவர்.

·4 2.7 க்கு உடையவர்களான குரு, சுக்ர, புத, சந்திரர்கள் மாரகர்களே. இவர்களுடன் சம்பந்தப்பட்டவர் புத்தி அந்தரங்களில் முதலில் யோககாரக பலனும், பின்னால் மாரக பலனும் தருவர். குருவைவிட சுக்கிரனுக்கு மாரகத்துவக் கெடுதி குறைவு.

25 3, 6, 11 க்கு உடையவர்கள் வேறு கேந்திர கோணாதிபத்தியம் பெறாது, மற்ற யோக காரர் சம்பந்தம் பெற்றால் கலப்பான பலனையே தருவார்கள்.

26 ராகு, கேதுக்கள் கேந்திர கோணங்களில் இருந்து வேறு கேந்திர கோணாதிபதிகளுடன் கூடில், யோககாரர் ஆவர்.

27. 2, 7 ஆம் இடங்கள் மாரக ஸ்தானங்கள். இதில் 2 ஆம் இடம் வலு உள்ளது. ஆனால் வெறும் மாரகன் தனித்திருந்து மாரகன் பலன் தரமாட்டான். வேறு ஒருபாவியுடன் சேர்ந்தால் தான் மாரகம் செய்யத் தகுதி உடையவன் ஆகிறான். குரு முதலான சுபர்கள் 2, 7 ஆம் ஆதிபத்தியம் பெற்று பரிவர்த்தனமும் பெற்றால் நிச்சயம் மாரகர் ஆவர்.

28 பாபிகள் 2, 7க்கு உடையவர்கள் ஆனால், மாரகர் ஆவதில்லை. புதன், சந்திரன் இவ்வகையில் சாதாரண

மாரகர். 7 இல் 7 க்கு உடைய குரு அல்லது சுக்கிரன் பாப சம்பந்தம் பெற்றால், நிச்சயம் மாரகர் ஆவார்கள்.

29 சனி மேற்கண்ட மாரகர்களுடன் சேர்ந்தால் மாரகர் வலுவைப் பெற்றுத் தானே மாரகத்தைச் செய்கிறான்,

30 கேந்திர கோணாதிபதிகள் சேரும்போது அவர்களில் ஒருவர் மாரகராகவும் திரிகோணாதிபதியும் ஆனால் இவர்கள் தசா காலங்களில் சம பலனே தரும். மாரகன் கேந்திராதிபதியானால் நிச்சயம் கெட்ட பலனே கிட்டும்.

31 ராகு, கேதுக்கள் 3, 6, 11 இல் தனித்திருந்தால் சுபர் புத்தி அந்தரங்களில் அதிபாப பலன் ஏற்படும். இவர்கள் கேந்திரத்தில் இருந்தால், பாபர்கள் காலத்தில் பாப பலனும், சுபர்கள் காலத்தில் சுப பலனும் தருவார்கள். இவர்கள் தனித்து 2, 7 இல் இருந்தால் அதி மாரகர் ஆவர். ஆனால், கேந்திராதிபத்திய தோஷம் இல்லாததால் இதில் வலுக் குறைவு. ஆனால் 2, 8, 12. இல் மற்றும் 3, 6, 11 இல் இருந்து மாரகர்களுடன் சம்பந்தப்பட்டால் தாங்களே மாரகர்கள் ஆகிறார்கள்.

32 மாரகர்கள் தன் தசையில் தன் சம்பந்த கிரஹபுத்தி காலங்களில் கொல்வதில்லை. ஆனால், சப்பந்தப்படாத பாபர் புத்திக் காலங்களில் மாரகம் செய்வார்கள்.

33 மீனம், தனுசு, துலாம் லக்னங்களில் 2 ஆம் அதிபர் பாபக் கோள் ஆகையால், மாரகர் ஆவதில்லை.

34 வலுத்த கேந்திர கோணாதிபர்கள் 10, 9 க்கு உடையவர்கள். துர் ஸ்தானத்திற்கு அதிபதியாயினும் சேர்ந்தால் ராஜயோகம் தருவார்கள். இந்த வகையில் 9, 10 க்கு உடையவர்களில் ஒருவருக்குத்தான் துர்ஸ்தானாதிபத்யம் ஏற்படுவது வழக்கம்.

35 ராகு கேதுக்கள் 3, 6, 8, 11 இல் இருந்து அதே சமயம் சந்திரனிலிருந்து 2, 8 இல் இருந்தால் மாரகன். அதே

சமயம் பாபர் மற்றும் குரு சுக்ரன் சம்பந்தம் பெற்றால் மாரகன் ஆகிறான் ரிஷப ராகுவுக்கு இது விதிவிலக்கு.

36 மீன ராகு மேற்கண்ட நிலையில் சந்திரனுக்கு 2, 8 இல் மாரகன். ஆனால் வெறும் 8, அல்லது 10 இல் இருந்தால் அரிஷ்ட பலனோடு சரியாகிவிடும்.

இப்படிப் பல வழிகளிலும் கிரஹங்கள் தரும் சுபம் அல்லது அசுப பலன்களை நன்கு ஆராய்ந்து மதிப்பீடு செய்து பலன் சொன்னால், ஜோதிஷம் பொய்க்காது. இனி சாரமான இது சம்பந்தப்பட்ட விஷயங்களை 12 லக்னங்களுக்கும் தனித்தனியாக அடுத்து வரும் அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

## நல்லவர்கள் கெட்டவர்கள்

### (12 ராசிகளும் லக்னமாக வரும் போது)

### பதகம் எண் - 3

ஒவ்வொரு லக்னத்திற்கும் யார் பாபி யார் சுபன் யார் மாரகன் என்றெல்லாம் தனித்தனியே விளக்கியுள்ளோம். இருப்பினும், அவற்றை அட்டவணையாக்கி ஒரே இடத்தில் காட்டினால் கோசாரத்தில் சுபர்கள் சுப ஸ்தானங்களில் வரும் போது கொடுக்கும் நற்பலன்களையும் அசுபர் மாரகர்கள் சந்திர லக்னத்திலிருந்து கெட்ட இடங்களில் வரும் போது தரும் மாரக நிச்சயம் அல்லது அசுப பலனையும் அறுதியிட்டு அறிந்து கொள்ள எளிதாக இருக்கும், ஆகையால் மேலே தொடர்வதற்கு முன் அவை இங்கே தாப்படுகின்றன.

## 12 லக்னங்களுக்கும் நல்லவர்கள் கெட்டவர்கள்

| லக்னம் | பாபர் | சுபர் | கிரஹ சேர்க்கை பலன் யோககாரகர் | பாதகர் | மாரகர் | விளக்கம் |
|---|---|---|---|---|---|---|
| மேஷம் | சனி சுக்ரன் புதன் | குரு சூரியன் செவ்வாய் | சனி குரு கூட்டு அசுபம் சூரிய சந்திரன் யோக காரகர்கள் | சனி | சுக்ரன் கொல்ல மாட்டான் புதன் சனி கொல் வார்கள் | தேய்பிறை சந்திரன், பாபி. வளர்பிறை சுபன். தேய் பிறை யானால் சாதாரண சுப பலன் தருவான். வளர் பிறையா னால் அதிக சுப பலன் தருவான். சூரியன் யோக காரகன். சந்திர னும் யோக காரகன். |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ரிஷபம் | குரு சந்திரன் | சூரியன் சுக்ரன் புதன் சனி | சனி யோக காரகன் | சனி | குரு சுக்ரன் செவ்வாய் | சுக்ரன் லக்னாதிபதி என்ற வகையில் சுபன். 6ஆம் அதிபதி என்ற வகையில் அசுபன், சனி யோக காரகன் யோகத்தைச் செய்வான். ஆனால் பாதகாதிபதி என்ற வகையில் கெடுதியும் செய்வான். |
| மிதுனம் | குரு செவ்வாய் சூரியன் | சுக்ரன் புதன் | சனி யோக காரகன் ஆகான் சுக் புதன் சேர்க்கை யோககாரகம் செய்யும் | குரு | செவ்வாய் குரு | 3-ஆம் அதிபதி என்ற வகையில் குரு பாபி அசுபன் மாரகன் 2-ஆம் அதிபதி என்ற வகையில் சந்திரன் மாரகன். |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| கடகம் | சுக்ரன் புதன் சனி | செவ்வாய் குரு சந்திரன் | செவ்வாய் யோக காரகன் | சுக்ரன் | புதன் சுக்ரன் சனி | சனி கொல்வான் சுக்ரன் 11-க்கு உடைய வகையில் பாபி, புதன் 3, 12-க்குடைய வகையில் பாபி. சனி மாரகன் முழுப் பாபி. |
| சிம்மம் | சுக்ரன் சனி | செவ்வாய் குரு | குரு புதன் சேர்க்கை அசுபம் செவ்வாய் யோக காரகன் | செவ்வாய் | புதன் குரு | குரு 5ஆம் அதிபதியாயினு 2-க்குடைய புதன் தீதே குரு 8-க்குடையவன் என்ற வகையில் மாரகன் புதன் 2-க்குடைய வகையில் மாரகன். இதில் புதன் வலு |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | வானவன். செவ்வாய் 9-க்குடையவனாயினும் ஸ்திர ராசி பாதகனாகிய கெடுதியையும் சேர்த்துத் தருவான். |
| கன்னி | செவ்வாய் குரு சந்திரன் | சுக்ரன் | சுக்ரன் + புதன் இருவரும் யோக காரகர்கள் | குரு | குரு செவ்வாய் | 7-க்குடைய வகையில் குரு மாரகன் பாதகன். 8க்குடைய வகையில் செவ்வாய் பாபி 11க்குடைய வகையில் சந்திரன் பாபி |
| துலாம் | குரு செவ்வாய் | சுக்ரன் புத, சனி | சந்திரன் + புதன் | சூரியன் | சுக்ரன் செவ்வாய் | 11க்குடைய வகையில் சூரி |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | யோகம் இருவரும் யோக காரகர் | | | யன் பாதகன். 8க்குடைய வகையில்சுக்ரன் மாரகன். ஆனால், 2, 7–க் குடைய செவ் வாயே பிரபல மாரகன். வலு வானவன். |
| விருச்சிகம் | புதன் சுக்ரன் செவ்வாய் | குரு சந்திரன் | சூரியன் + சந்திரன் யோகம் இருவரும் யோக காரகர்கள் | சந்திரன் | சுக்ரன் குரு | 8 க்குடையவன் 11க்குடையவன் என்ற வகையில் புதன் பாபி. ஸ்திர ராசிக்கு 9 க்குடையவன் என்ற வகையில் சந்திரன் பாத கன் 2க்குடைய வகையில் குரு வும் 7க்குடைய வகையில் சுக்ர னும் மாரகர். |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தனுசு | சுக்ரன் | சூரியன் | சூரியன் + புதன் ராஜயோகம் இருவரும் யோக கார கர்கள் | புதன் | புதன் சனி | 7ஆம் அதிபதி என்ற வகையில் புதன் மாரகன் பாதகன். 6,11க்குடைய வகையில் சுக்ரன் பாபி. 2ஆம் அதிபதி என்ற வகையில் சனி மாரகன். |
| மகரம் | செவ்வாய் சந்திரன் குரு | புதன் சுக்ரன் | சுக்ரன் புதன் சுக்ரன் யோக காரகன் | செவ்வாய் | சந்திரன் சூரியன் | 7, 8க்குடைய வகையில் சந்திர சூரியர் மாரகர்கள். 11-ஆம் அதிபன் என்ற வகையில் செவ்வாய் பாதகாதிபன். 9-க்குடைய வகையில் புதன்சுபன். |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | இவனே முழு யோக காரகன். |
| கும்பம் | குரு<br>சந்திரன் | சுக்ரன் | செவ்வாய் + சுக்ரன் சுக்ரன் ஒருவனே யோககாரகன் ஆவான் | சுக்ரன் | குரு<br>புதன் | 2, 11-க்குடைய வகையில் குரு பாபன் 6-க்குடைய வகையில் சந்திரன்பாபன். ஸ்திர ராசிக்கு 9-க்குடைய வகையில் சுக்ரன் பாதகன் |
| மீனம் | சனி<br>சுக்ரன்<br>சூரியன் | குரு<br>சந்திரன்<br>செவ்வாய் | குரு + செவ்வாய் யோகம் செவ்வாய் யோக காரகன் | புதன் | புதன்<br>சனி | 7-க்குடைய வகையில் புதன் பாதகன். மற்றும் மாரகன். ஆனால் 4-க்குடைய வகையில் சுபன். 11-க்குடைய வகையில் சனி மாரகன். |

**பாதகாதிபர்கள்**

சரலக்னத்திற்கு 11 க்குடையவனும் ஸ்திரலக்னத்திற்கு 9 க்குடையவனும் உபய லக்னத்திற்கு 7 க்குடையவனும் மாரகர். பாதகாதிபர்கள். பாதகாதிபத்தியம் என்ற வார்த்தையைத் தவறாகப் பலரும் புரிந்துகொள்கிறார்கள். பாதகம் என்றால் பாதிப்பு, தடங்கல் என்று பொருள். எனவே சுபபலன் ஏற்படுவதில் தடங்கல் ஏற்படும் என்று தான் பொருள். பாதகாதிபத்யம் வேறு, மாரகம் வேறு.

**மாரகன்**

ஒருவன் ஜாதகத்தை அல்பாயுசு, மத்தியம ஆயுசு, பூர்ணாயுசு என்று மூன்று வகையாகப் பிரித்து ஊர்ஜிதம் செய்து கொண்டு, அந்த ஆயுசு கெடு நடக்கும்போது தசா புத்தி நாதர்கள் யார் யார் இறப்பைக் கொடுக்கும் தகுதி உள்ளவர்களோ அவர்கள்தான் மாரகர். இதை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். பாதகம் வேறு. அது பாதிப்பை ஏற்படுத்துவடன் சரி. மாரகம் ஆயுளையும் முடிக்கும் வலிமை பெற்ற கிரகமாகும். கோசாரத்தில் இவர்கள் கெட்ட இடத்தை அடைந்து அந்த சமயம் மாரக தசாபுத்தி நாதராக வந்து அந்தக் காலம் நடப்பில் இருந்து மேற் கொள்ள 3 வகை ஆயுள் வகையில் ஜாதகத்திற்கு ஏற்பட்ட எல்லையும் ஒன்று சேர்ந்தால்தான் மாரகம் ஏற்படும். அதுவரை மாரகம் அல்லது இறப்பைச் சொல்லக் கூடாது.

அத்தியாயம் — 9

## ஆயுள் நிர்ணயமும் கோசாரமும் சுலப வழி

ஒருவர் வாழ்க்கை அவர் பிறப்பு ஜாதகப்படி அமை கிறது. தொழில், பொருளாதாரம், மனைவி, ஆரோக்யம்,

ஆயுள் போன்றவை என்பவையே வாழ்க்கை அமைப்பாகும். இவை ஒருவருக்கு எந்த முகாந்தரத்தால் எந்தெந்தக்கால கட்டங்களில் எப்படி அமைகின்றன என்பதை, கோசாரக் கோள்களும், தசாபுத்திகளின் பாதிப்பும் ஒருசேர ஏற்படுத்தித் தருகின்றன. இந்த வகையில் ஒருவருக்கு ஆயுள் மிகவும் முக்கியம். ஆயுள் தீர்க்கமாக இருந்தால் தான் மேற்கண்டவற்றை ஒருவர் அனுபவிக்க முடியும்.

ஆனால் சோதிடத்தில் ஆயுள் நிர்ணயம் மிகவும் சிக்கலான முடிச்சாகும். அம்சாயுர்த்தாயம், லக்னாயுர்த் தாயம், நைசர்க்கித ஆயுள் தாயம், அஷ்ட வர்க்க ஆயுக்த் தாயம் போன்ற பலவழிகளில் கணித்து வரும் ஆயுளைச் சராசரி செய்து அளவை நிர்ணயம் செய்வது நியாயமான சுலப வழியாகும். ஆனால் இவ்வளவு கணிதமும் செய்ய இக்காலத்தின் வேகம் இடம் தருவதில்லை.

தமிழ்ச் சுவடிகளில், இதற்கு குத்துமதிப்பாக ஆயுளை சுலபமாக நிர்ணயம் செய்யும் முறை ஒன்று கூறப்பட்டுள்ளது. அதை இங்கே சிறிது சொல்லிவிட்டு மேலே செல்வோம்.

பிறப்பிலிருந்து தொடங்கும் ஆயுள். அந்த ஆயுட்கால எல்லைக்குள் ஏற்படும் திருமணம், வீடு, வாகனம், தொழில் போன்ற பலவும் ஏற்படும் வகை, தொகையை பிறந்த அன்றிலிருந்தே தொடங்கும் தசாபுத்தி பலன் சொல்லுவதாகும். ஆனால், அன்றாட வாழ்வில் இவை நல்லதாகவோ, கெட்டதாகவோ மாறி மாறி ஏற்படுவதை கோசார பலனே காட்டுகிறது. தசாபுத்தி பலனைக் கூட்டியோ குறைத்தோ நிகரத்தை இந்தக் கோசாரம் தான் அறுதி இடுகின்றது.

எனவே தசாபுத்தி நல்லதாக அமைந்து கோசாரம் கெட்டாலும். தசாபுத்தி கெட்டுக் கோசாரம் நல்லதாக அமைந்தாலும் காலம் மத்திமமாகவும், இரண்டும் நன்கு அமைந்தால் காலம் மிகவும் நன்றாகவும், இரண்டும்

கெட்டால் காலம் மிகவும் மோசமாகவும் ஆகும். இந்த சமயத்தில் தான் மாரகம் முதலியவை நடக்கவும் செய்யும்.

இனி, ஆயுள் நிர்ணயம் பற்றி கவனிப்போம். தற்போது பெரும்பாலும் நாம் கடைப்பிடித்துவரும் விம்சோத்தரி முறைப்படி. மொத்தத் தசைகள் வருஷம் 120. அதாவது மனிதனின் பூர்ணாயுள் 120 வருஷம் என்று கொண்டாலும், நூற்றாண்டு உயிர் வாழ்க்கையே எல்லையாக உள்ளது. இதிலும், மனிதனின் இயற்கைக்கு மாறான வாழ்க்கை, இந்திரிய சுகபோக ஈடுபாடு, உணவுப் பழக்கம், அதிக உழைப்பு, தான்தோன்றித்தனமான வாழ்க்கை இவற்றால் மனிதனின் வயது சராசரி ஏறக்குறைய 75 ஆகக் குறைந்து விடுகின்றது. இதன் அடிப்படையில் ஒருவரின் ஜாதகப்படி அமையும் ஆயுளைப் பூர்ணாயுள் (நெடிய வாழ்வு) மத்தியம ஆயுள் (நடுத்தர வயது), அற்பாயுள் (குறைந்த வயது) என்று மூவகையாக ஜாதகப்படி நிர்ணயம் அல்லது மதிப்பீடு செய்து கொள்ள வேண்டும். இதன்படி 32 வயது வரை அற்பாயுள் என்றும், 32 முதல் 60 வயது வரை மத்தியம ஆயுள் என்றும், 60 க்கு மேல் 75 அல்லது இதற்கு மேலும் தொடர்வது தீர்க்காயுள் என்றும் கொள்ளப்படும். இதற்கான விதிகளை தமிழ்ச் சுவடி வாக்கியம் பின்வருமாறு கூறும்.

அட்டமம் ஈராறு ஒன்பான் அணிதிரி ஏகம் நூறு
எட்டுடன் பன்னொன் றைந்தில் இருந்திடில் எழுபத்
தைந்து
விட்ட ஆறா மிடத்தில் மேவிடில் நூறில்பாதி
மட்டறா நாலுபத் தேழில் வயதுமே அற்பமாகும்.

இப்பாடல், ஜாதகத்தில் அட்டமாதிபன் அமைந்த நிலையைக் கொண்டு ஒருவரின் ஆயுளைக் கூறுகிறது. இதன்படி —

1. அட்டமாதிபன் 12 அல்லது 9 ஆம் இடத்தில் அல்லது 2 மற்றும் 3 இல் இருந்தால் அவன் வயது 100.

2. அட்டமாதிபன் 6 இல் இருந்தால் வயது நூறில் பாதியான 50.

3. அட்டமாதிபன் 8, 11, 5 ஆம் இடங்களில் இருந் தால் வயது 75.

4. அட்டமாதிபன் 4, 7, 10 ஆம் இடங்களில் இருந் தால் அவன் அற்பாயுளாவான் என்பதாம்.

5. இதுவன்றி பஞ்ச மஹாபுருஷயோகங்களில் ஒன்றேனும் அமையப் பெற்றவர் தீர்க்காயுளாய் வாழ்வார் என்பது கொள்கை. (ராகு, கேது, சூரியன், சந்திரன் நீங்கலாக மற்றவற்றில் ஒன்றோ அதற்கு மேலோ கோள்கள் லக்னத்திலிருந்து கேந்திரங்களில் ஆட்சி உச்சமானால் மஹா புருஷ யோகம் எனப்படும்).

இப்படி வகுத்துக் கொண்ட ஆயுள் அளவையினை முழுவதும் அடைய வேண்டுமானால், மற்றக் கோள்கள் எப்படி அமைய வேண்டும் என்பதைப் பின்வரும் பாட்டு தெளிவாக்குகிறது.

''உதித்தவன் சோமன் வீட்டான் ஒரெட்டோன் நீலனாரும்
கதித்தவன் இருந்த வீட்டோன் கனகனோடாறு பேரும்
விதிப்படி தம்முன்னே தாம் மேவிய உறவி தாகில்
விதித்தது வயது நூறு விண்ணுளோர் அறியத்தானே''

இந்தப் பாடலின்படி லக்னாதிபதி, சந்திர லக்னாதிபதி அட்டமாதிபதி, ஆயுள் காரகனான சனி, சனி இருந்த வீட்டுக் குடையவன், கனகனான பூரணசுபன், குரு இந்த ஆறு பேரும் ஜாதகத்தில் மித்திரராகி, நன்கு சுபஸ்தானம்

முதலியவை பெற்றுவிட்டால், இந்த ஜாதகன் நூறு வயது வரை இருப்பான் என்று பொருளாகிறது.

இந்த 6 பேருக்கும் ஏற்படும் குறைகளின்படி மேற்படி தீர்க்காயுள் பரிமாணம் குறையும். அதாவது $\frac{5}{6}$, $\frac{4}{6}$, $\frac{3}{6}$, $\frac{2}{6}$, $\frac{1}{6}$ என்ற அளவின்படி எண்ணலாம். முன் பாடலில் சொன்ன வகையில் வரும் வயதின்படி, இரண்டாவது பாடலில் சொன்ன வகையில் பின்னத்தால் பெருக்கினால் சராசரி முதற்பாட்டுப் பிரமாணப்படி வயது 75 என்று கொண்டு, பின் வந்த பாட்டில் சொன்ன 6 கோள்களில் 4 கோள்கள் தான் வலுப்பெற்றால், $75 \times \frac{4}{6} = 75 \times \frac{2}{3} = 50$ வயது ஆகிறது.

இந்த 50 வயதளவில் முன் 'ஒன்று' சேர்த்துக் கோசா ரத்தில் $7\frac{1}{2}$ ஜன்ம சனி, ஜன்ம 3ஆம் இட குரு இவையும் கூடும்போது நிரியாணம் நேரும் என்று ஊகிக்கலாம்.

எனவே, கோசாரப்படி ஆயுள் முடிவை அறிய, ஆயுள் நிர்ணயம் தேவையே என்பது உறுதியாகிறது. இந்த ஆயுள் கால எல்லைக்குள்ளும் மற்றச் சுபாசுப காரியங்கள் —திருமணம், வீடுவாங்கல் தொழில் அமைப்பு, போன்றவை எப்பொழுது ஏற்படும் என்று கோடிட்டுப் பார்ப்பதற்கும் கோசார பலன் ஆராய்ச்சியில், ஆயுள் நிர்ணயம் முக்கிய மாகும் என்பது தெளிவு. எனவே தான், இவ்வளவு விளக்கமாக எழுதப்பட்டது, இனி அடுத்த விஷயத்திற்குச் செல்வோம்.

அத்தியாயம்—10

## கோசார பலனும் தசாபுத்தி பல நிர்ணயமும்

உலக வாழ்க்கை, பிறப்பிலிருந்து தொடங்குகிறது. அப்படித் தொடங்கியதிலிருந்து, அது எந்த எந்த விதத்தில்

நல்லதும் கெட்டதுமான வகையில் வளர்கிறது என்பதைப் பிறந்த நக்ஷத்திர அடிப்படையில் ஏற்பட்ட தசையும், தசைகளின் புத்தி அந்தரங்களும் காட்டுகின்றன. ஆனால், இந்த தசாபுத்தி அந்தரங்கள் தரும் பலனை, அவை நடக்கும் போதும் அவ்வப்பொழுது ஏற்படும் ஜன்மராசி முதற் கொண்டு உண்டாகிய கோசாரக் கோள் நிலைகளும் ஊட்டுவிக்கின்றன. தசாபுத்தி பலனைக் கூடுதலாகவோ குறைத்தோ, அல்லது தீமையாகவோ, நன்மையாகவோ இந்த அன்றைய கோள்நிலையான கோசார பலன் தருகிறது என்று கூடச் சொல்லலாம்.

1. எனவே, ஒருவன் வாழ்க்கையில் அந்தக் காலத்தில் தசாபுத்தி அந்தர பலன் நல்லதாகி, கோசார பலனும் நல்லதாக அமைந்தால், அவன் தசாபுத்தி பலன் முழுவதையும் அனுபவித்துக்கொண்டு மேல் நிலையில் இருப்பான்.

2. தசாபுத்தி பலன் கெட்டு, கோசார பலன் நல்ல கால பலனைக் காட்டினால். வாழ்க்கை மத்திமமான சுகத்துடன் நடக்கும்.

3. இரண்டும் கெட்டால், எல்லாமே கஷ்டமாக அமையும்.

எனவே இப்படிப் பட்ட தசாபுத்தி அந்தரம் மற்றும் கோசார சுப பலனின் கூட்டுப் பலனை அறிந்து, நிகர பலனைத் தெரிந்து கொள்ளத் தசாபுத்தி அந்தரங்களின் தன்மையை அறிந்து கொள்ள வேண்டியதும் மிகவும் முக்கியமாகும். ஒவ்வொரு கோளின் தசையும் எத்தகைய பலன்களைத் தரும் என்பதையும் விளக்க இந்த நூல் இடம் தராது. இதற்கென ஏற்பட்ட எல்லாத் தசைகளின் பலனையும் தெளிவாகவும் விளக்கமாகவும் சொல்லுகின்ற மணிமேகலைப் பிரசுரத்தார் வெளியிட்டுள்ள தசாபுத்தி. பலன்கள் என்ற புத்தகத்தின் மூலம், வாசகர்கள் அதைத் தெளிவாகவும் விவரமாகவும் அறிந்து கொள்ளலாம்.

அதனால் பல வகையில், பல்வேறு தசாபுத்திகள் ஜாதகத்தின் கோள் நிலைக் கேற்ப, எப்படி எப்படி எல்லாம் பல வழியில் பலன் தருகின்றன என்பதை மட்டும் இங்கு எழுத முற்படுகிறேன்.

ஒருவன் பிறந்த ஜென்மநக்ஷத்திரத்தின் அடிப்படையில் தசை கணிக்கப்படுகின்றது என்பதையே முன்னேயே சொல்லியுள்ளேன். எனவே, ஒருவர் ஜாதகத்தின் முதல் தசை, ஜென்ம நக்ஷத்திர தசை அல்ல, ஜென்மாதிபன் தசையாகும். ஜென்ம நக்ஷத்திரத்திலிருந்து அடுத்து வரும் நக்ஷத்திரங்கள் கீழ்க்கண்டபடி பெயர் பெறுகின்றன.

ஜென்ம நக்ஷத்திரம் அல்லது ஜன்ம தாரை, விபத்து, சம்பத்து, க்ஷேமம், பிரத்தியக்கு, தெய்வானுகூலம், வதை, மைத்ரம், பரமமைத்ரம் என்பனவாம்.

1. ஜென்ம நக்ஷத்திர தசை மந்திர பலன் தருகிறது.
2. சம்பத்து தாரை தசை சுப பலன் தருகிறது. இதில் முக்கியமாகத் தனவிருத்தி ஏற்படும்.
3. விபத்துத் தாரை தசை, சங்கடம், விபத்துகள் தொல்லை இவற்றைத் தரும்.
4. க்ஷேமதாரை தசை சௌக்கியம், சுகம் தரும்.
4. பிரத்தியக்கு தாரை தசை தடங்கல், தாமதம் இவற்றை ஏற்படுத்தும்.
6. தெய்வானுகூல தசை கெட்ட தசையாயினும், (அதாவது அசுபன் தசை) சுப பலனைத் திருவருளால் கூட்டி வைக்கும்.
7. வதைத் தாரை தசை 7-வது தசை எல்லாவற்றிலும் கெட்ட பலனைத் தரும். கோசாரம் கெட்டு $7\frac{1}{2}$ சனி ஜென்மகுரு போன்றவை நடந்து, மாரக தசாபுத்தி நாதர்களாகவும் அமைந்தால், மாரகம்

கண்டம் ஏற்படலாம். ஆயுள் நிர்ணயத்திற்கேற்ப இறப்பும் கூறலாம்.

8, 9. 8, 9 நக்ஷத்திர தசைகள் மைத்ரம், பரம மைத்ரம் என்று சொல்லப்படும். இவை மத்திமமான நல்ல பலனாகத் தரும். எனதே 3, 5, /.—1ஆவது தசைகள் அசுபம் என்றும் அப்போது கோசார பலன் கெட்டிருந்தால் மிகவும் மோசமான பலன்களே நடக்கும் என்றும் அறிந்து கொள்ள வேண்டும்.

இனி தசை பற்றிப் பரவலாக உள்ளகருத்தும் அதற்குச் சமாதானமும் பற்றிச் சில செய்திகள் கூறலாம்.

சாதகாலங்காரம் 975ஆம் செய்யுளின்படியும், இன்னும் சில வட நூல்களின் கருத்துப்படியும்- பின்வருமாறு சொல்லப்படுகிறது.

''மாரகத்தின் தசையறிய வருநான்காம் தசைசனியே
வந்துற்றாலும்
பார்தனக்குச் சுதன்செவ்வாய் ஐந்தாகும் தசைதானே
பரிந்துற்றாலும்
பேருதித்த வாறாகும் தசையரச ரானாலும் பின்பு ராகு
சீருதித்த ஏழாகும் தசையானாலும் மரணம்
திண்ணம் தானே

இதன்படி,

1. சனி 4ஆவது தசையாக வந்தாலும், செவ்வாய் ஐந்தாவது தசையாய் வந்தாலும், குருதசை 6ஆவதாக வந்தாலும், ராகு ஏழாம் தசையாக வந்தாலும் மரணம் கட்டாயம் நேரும் என்று ஏற்படுகிறது. இதில் சுக்கிரன், சூரியன். சந்திரன், கேது தசைகள் பற்றிக் கூறப்பட வில்லை. மற்றக் கோள்களுக்கு மாரகம் செய்யும் சக்தி இல்லையா? எனவே, மேலே சொன்னது ஒரு சாதாரணப் பொதுக் கருத்தே அன்றி எல்லா இடத்திற்கும் பொருந்தாது.

2. நாம்புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால், சனி 4ஆவது தசையாக வரும்போது. ஜாதகத்திற்கு ஆயுர்த் தாயப்படி கணித்த ஆயுள் முடியும் தருவாயில் இருந்து, கோசாரத்தில் ஜென்ம குரு, 7½ சனி (ஜன்ம சனி) போன்ற அசுப நிலையும் இணையும் போதுதான், ஜாதகனுக்கு மரணம் ஏற்படும். இதில் இந்த நிலையில் சனிக்கு லக்னப் படி மாரகத் தகுதியும், அல்லது இதில் வரும் புத்தி நாதர் களுக்கு மாரகம் செய்யும் தகுதியும் இருந்தால்தான் மரணம் சாத்தியமாகும். இல்லையென்றால் மாரகம் ஏற் படாது.

மற்ற தசைகளுக்கும் இப்படியே கொள்க. பாட்டில் சொல்லப்படாத தசைகள் எத்தனையாவது தசையாக வந்தாலும், மேற்கண்ட எல்லாம் அமைந்து மாரகந் தகுதியும் அவற்றுக்கு இருந்தால்தான் மாரகம் நேரிடும் என்று தெரிந்து கொள்ள வேண்டும். மாரகத் தகுதி இல்லாத நிலையில் இவர்கள் யோக காரகர்களாக அமைந்து விட்டால், உத்தமமான நல்ல பலன்களையே தருவார்கள்

3. 8ஆம் அதிபதி, 8இல் இருப்பவன், 8ஐப் பார்த்தவன் 8ஆம் அதிபனுடன் சேர்ந்தவன், லக்ன திரேக்காணத் திலிருந்து 22ஆவது திரேக்காணாதிபன், 4ஆவது நவாம் சாதிபன், 8ஆம் அதிபனின் கடும் பகைக் கிரகம் இந்தக் கோள்களின் தசைகள், ''சித்ர'' தசைகள் எனப்படும். இவர்கள் தசாபுத்திக் காலத்தில் மிகவும் அசுபமான பலன்களே ஏற்படும். இவர்கள் மாரகத் தகுதி பெற்றால், மேலே சொன்ன கோசாரக் கெடுதி, ஆயுள் பிரமாண முடிவு எல்லாம் ஏற்பட்டால்தான் மரணம் நேரலாம் என்றும் கொள்ள வேண்டும்,

4. 4.7,10ஆம் இடங்கள் 'கேந்திரம்' எனப்படும். இதன் அதிபர்கள் தசை அசுப பலன் தரும். ஆனால், அசுபக் கோள் கேந்திராதிபத்தியம் பெற்றுத் தசை

நடந்தால் சுபபலன்களே உண்டாகும். 1,5,9 ஆகியவை கோணம் (திரிகோணம்) எனப்படும். இவற்றின் அதிபர்கள் தசை, சுபர், அசுபராயினும் சுப பலனே தரும். 3,6,11க்கு உடையவர் சுபக் கோளாயிலும் கெட்ட பலனே தருவர். இதில், 6க்குடையவர் கெட்ட பலனும், 11க்குடையவர் சுபபலன் தரும் தகுதியுடன். மாரகத் தகுதியும், 3க்குடையவனுக்குள் ஸ்திர லக்னத்திற்கு மாரகத் தகுதியுடனும் தசை நடக்கும். 8க்குடையவன் லக்னாதிபதியினால் அசுபபலன் இராது, சூரிய சந்திரருக்கு அட்டமாதிபத்திய அசுபம் கிடையாது.

5. லக்னாதிபன் தசை பலன், பணம் இரண்டும் தரும்.

2 ஆம் அதிபன் தசை — மாரகம் அல்லது அதற்குச் சமமான கண்டத்தையும் தரும்,

3 ஆம் அதிபன் தசை — கெட்ட பலனே தரும் (ஸ்திர லக்னத்திற்கு மற்றவர்க்கு சுபம். அசுபம் இரண்டும் தரும்)

4 ஆம் அதிபன் தசை — வீடு மனை ஏற்படுத்தும்

5 ஆம் அதிபன் தசை — வித்தை கல்வித் தேர்ச்சியைத் தரும்.

6 ஆம் அதிபன் தசை — பகைவரால் கஷ்டம் தரும்.

7 ஆம் அதிபன் தசை — சோகத்தையும் உபய லக்னத்துக்கு எல்லாம் கூடிவந்தால் மாரகத்தையும் தரும்.

8 ஆம் அதிபன் தசை — எல்லாம் கூடி வந்தால் மரணத்தைத் தரும்.

9 ஆம் அதிபன் தசை — சுபபலனையும், ஸ்திர லக்னமானால் அசுபபலக் கலப்பும், எல்லாம் கூடினால் மாரகமும் ஏற்படும். மற்றப்படி எல்லா லக்னத்திற்கும் தர்ம சிந்தனை, உயர்வு பாக்கிய தனவிருத்தி இவற்றை ஏற்படுத்தும்.

10க் குடையவன் தசை — பதவியைத் தரும்.

11க் குடையவன் தசை — லாபத்தையும் சர லக்னத்திற்கு எல்லா விதிகளும் கூடி வந்தால் மாரகமும் தரும்.

12 ஆம் அதிபன் தசை — நோய் பொருட் சேதம் இவற்றைத் தரும்.

6. கேந்திரத்தில்உள்ள கோளின்தசை முழுப்பலனையும் பண பரத்தில் உள்ளவன் தசை பாதிப்பலனையும், ஆபோக்கிலிமத்தில் உள்ளவன் தசை கால் பலனையும் தத்தமது தசாபுத்திக் காலங்களில் தருவார்கள். 1,4,7.10 கேந்திரம், 2.5.8,11 இவை பணபரம். 3,6.9,12 இவை ஆபோக் கிலிமம் எனப்படும்.

7. தலையால் உதிக்கும் கோள் தன் தசையின் ஆரம்பத்திலும், காலால் தலைகீழாய் உதிக்கும் கோள் தன் தசையின் கடைசியிலும், உபயோதயக்கோள் தன் தசையின் மத்தியிலும் பலன் தருவர்.

8. உச்சம் மூலத் திரிகோணம். ஆட்சி, நட்பு, பகை, நீசம் ஆகிய இடங்களில் உள்ள கோள்கள் முறையே 1, $\frac{3}{4}$ $\frac{1}{2}$, $\frac{1}{4}$, $\frac{1}{8}$, 1/16என்ற அளவில் தங்கள் தசா காலங்களில் பலன் தருவர்.

ராகு கேதுக்கள் தனித்திருந்தால் அவர்கள் இருக்கும் வீடுகளிலேயே ஆட்சி பெற்றதாகக் கருதி, அப்பலனே அவர்கள் தசைகளில் சொல்ல வேண்டும்.

10. ராகு கேதுக்கள் யாருடன் சேர்ந்தாலும் அவர்கள் பலனைத் தம் தசா காலங்களில் தருவார்கள்.

11. ஒரு தசை ஆரம்பிக்கும் போது கோசாரத்தில் லக்னத்திலிருந்து எந்த பாவத்தில் தசாநாதன் இருக்கிறானோ, அந்தப் பாவ பலனை முதலிலும், அடுத்தடுத்து மற்ற பாவங்களின் பலனையும் வரிசையாகத் தருவர், இப்படி 12 பாவ பலனும் தரும் தசா காலத்தை 12ல் வகுத்து

அந்தக் காலத்தில் ஒவ்வொரு பாவ பலனையும் தருவர். எடுத்துக் காட்டாக, கோசாரத்தில் ஜென்ம லக்னத்தி லிருந்து தசை ஆரம்பிக்தும் போது, செவ்வாய் 7இல் இருந்தால். முதலில் 8ஆம் பாவப் பலனையும், 8 முதல் மீண்டும் 6 வரை உள்ள பாவ பலன்களையும் 7 மாதங்கள் கொண்ட ஒவ்வொரு காலத்தில் மொத்த பாவ பலன் களையும் வரிசையாகத் தருவார் எனலாம்.

12. வக்கிர மடைந்த கிர்ஹத்தின் தசையில் சாதாரண மாக தனம், சுகம் நாசமடைகிறது. நிர்ப்பந்தமான வேண்டாத இடமாற்றம், வெளி நாட்டு வாசம் போன்றவை ஏற்படுகிறது. வக்கிரக் கோளின் பின்னோக்கிய சஞ்சாரத்தில் புகழ், மதிப்பு, தலைமையான பதவி இவை கிட்டும். நிவர்த்தியாகி இருந்து முறையான சஞ்சாரத்தில் இருந்தால் 6, 12, 8லும் இருந்தால், அசுப பலனே தசைகளில் நடக்கும்.

13. ஒவ்வொரு தசைக்கும், அந்தத் தசையின் பலனைக் கூட்டியோ குறைத்தோ தரும் நான்கு வகை யான தாரதம்மியக் கோள்கள் உண்டு. அவர்கள் முறையே போதகன், வேதகன், பாசகன், காரகன் எனப்படுவர். இவர்கள் தன்மை வருமாறு:

1. **போதகன்:** தசாநாதனைத் தன் பலன் முழு வதையும் கொடுக்க வைப்பவன். எனவே, இவன், தசையில் புத்தி அந்தர நாதனாக வந்தால் முழுச் சுபபலனும் ஏற்படும்.

2. **வேதகன்:** தசாநாதன் பலனைத் தரவொண்ணா மல் முழுவதும் தருபவன், இவன் புத்தி அந்தர நாதனாக வந்தால் தானும் நற்பலனும் தராமல், தசாநாதனின் ஆதிபத்ய சுபபலனையும் தரமாட்டான்.

3) **பாசகன்:** ஒரு தசாநாதனின் பலனை மேலும் கூட்டித் தருபவன். இவன் புத்தி, அந்தர நாதனாக வந்

த்தால் சுபபலன் இரட்டிப்பாகவும். தன் ஆதிபத்ய பல னுடன் தசாநாதனின் பலனையும் சேர்த்துக் கொடுப்பான்.

4) காரகன்: அவர் அவர்கள் தரும் பலனைக் கொடுக்கச் செய்து நழுவாது அளிப்பவன், தசாநாதனின் பலனையும் சேர்த்துக் கொடுப்பவன். அதாவது பலன்களை நழுவாமல் பாதுகாப்பவன் என்பதாம்.

இப்படி ஒவ்வொருவரும் புத்தி அந்தர நாதர்களாக ஒவ்வொரு தசையிலும் சுபம் அல்லது அசுப பலனை மேற் சொன்ன வகையில் தரும்போது, அதனுடன் அவ்வப் போதைய கோசார பலனையும் சேர்த்து, நிகர பலனைச் சொல்ல வேண்டும். இந்த நால்வகையாகப் பாதிக்கும் அதிகாரம் ராகு கேதுக்களுக்குக் கிடையாது. இனி, ஒவ் வொரு தசைக்கும் இந்த 4 பேர் யார் யார் என்பதைத் கீழ்க்கண்ட பதகத்தின் மூலம் அறிக.

போதகன், வேதகன், பாசகன், காரகன், விவரப் பதகம்

| பெயர் | சூரிய தசை | சந்திர தசை | செவ்வாய் தசை | புதன் தசை | குரு தசை | சுக்கிர தசை | சனி தசை |
|---|---|---|---|---|---|---|---|
| போத | செவ் | செவ் | சந்திரன் | குரு | செவ் | குரு | சந் |
| வேத | சுக் | சூரி | புதன் | செவ் | சனி | புதன் | சுக் |
| பாச | சனி | சுக் | சூரி | சந் | சனி | புதன் | சுக் |
| கார | குரு | சனி | சனி | சுக் | சந் | சூரி | குரு |

14) அஸ்தங்கதம், யுத்தத்தில் தோல்வி அடைந்த கிரஹங்களின் சுபபலன் வக்கிர தசைகளுக்குச் சொன்னது போலக் குறையும்.

15) நீசம், பகை பெற்ற கோள்களின் தசைகளில் கட்டாய வெளிநாட்டு யாத்திரை பந்து ஜனங்கள் பிரிவு, பகைவரால் துன்பம், வீண் மனஸ்தாபம், நோய் உபாதை, வீண் விவாதத்தால் பலருடன் பகை, பல வகையான ஆபத்து, விபத்துகள் போன்றவை ஏற்படுகின்றன. ஆனால், இவற்றிற்கு சுபக்கோள் பார்வை இருந்தால், அசுபபலன்கள் பெரும்பாலும் குறையும்.

16) சூரியர், சந்திரர்கள் மாரகராவதில்லை. இவர்களால் மாரக தசாபுத்திகளில் மரணம் சம்பவிக்காது. ஆனால், இந்தக் காலத்தில் கோசாரமும் கெட்டு, 7½ சனி ஜன்மகுரு போன்றவை கூடிவரும் போது, ஒருவனுக்கு மரணம் நேரலாம். இதுவும் ஆயுட்பிரமாணத்தைப் பொறுத்ததுதான்.

அத்தியாயம்—11

# சில சில்லறை விஷயங்கள்

## 1) கிரஹங்களுக்கு 12 ராசிகளிலும் ''மிருத்யு'' பாகைகள்

ஒன்பது கோள்களும் 12 ராசிகளில் சஞ்சரிக்கும் போது, ஒவ்வொரு ராசியிலும் ஒவ்வொரு கோளுக்கும் ''ம்ருத்யு பாகம்'' அதாவது மாரகம் அல்லது மரணம் ஏற்படுத்தக் கூடிய பாகைகளை இனங்கண்டுள்ளனர் நம் முன்னோர்கள்.

கோசாரத்தில், ஓர் அசுபக் கிரகம் ஓர் அசுப பலன் தரும் ராசியில் இருந்து, அந்த ராசியில் உள்ள அந்த கிரஹத்திற்குக் குறிப்பிடப்பட்ட 'ம்ருத்யு' பாகையைக் கடக்கும்போது, தசையும் கெட்டிருந்து, மாரகமும் ஒத்து வந்தால், மேற்படி நபர் மரணமடைய வாய்ப்புண்டு.

ஒருவருக்கு 7½ சனியின் ஜன்மச் சனி நடந்து (இதுவே 7½சனியில் மிகத் தீயதாகும்) மாரக தசையும் நடந்து, ஆயுட் பிரமாணமும் தீர்ந்து விட்டிருந்தால், அவர் மரண மடைவது திண்ணம் என்று சொல்லலாம். இந்தப் பாகை களை இதற்குரிய அடுத்துவரும் பட்டியலில் காணவும்.

பதகத்தில் 'மாந்தி' மற்றும் லக்னத்திற்கு எல்லா ராசிகளுக்கும் நேராக ம்ருத்யு பாகைகள் கொடுக்கப்பட் டுள்ளன. அந்த ராசிகளில் குறிப்பிட்ட பாகைகள் லக்ன மாக வந்தால், பாலாரிஷ்டம் மாரக பயம், மற்ற தொல்லைகள் எல்லாம் ஏற்படும் என்று நம்பலாம். மாந்தி யின் ''ம்ருத்யு'' பாகையில் சனி மற்றும் பிற பாபக் கோள்கள் கோசாரத்தில் வரும்போது, கெடுதியும், துன்ப மும் மாரக பயமும் உண்டாகும்.

## 12 ராசிகளிலும் கோள்களின் 'ம்ருத்யு' பாகைகள்

### பதகம் எண் — 5

| கோள் | மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |
|---|---|---|---|---|---|---|
| சூரியன் | 20 | 9 | 12 | 6 | 8 | 24 |
| சந்திரன் | 26 | 12 | 13 | 25 | 24 | 11 |
| செவ்வாய் | 19 | 18 | 25 | 23 | 29 | 28 |
| புதன் | 15 | 14 | 13 | 12 | 8 | 18 |
| குரு | 19 | 29 | 12 | 27 | 6 | 4 |
| சுக்ரன் | 28 | 15 | 11 | 17 | 10 | 13 |
| சனி | 10 | 4 | 7 | 9 | 12 | 16 |
| ராகு | 14 | 13 | 12 | 11 | 24 | 23 |
| கேது | 8 | 18 | 20 | 10 | 21 | 22 |
| மாந்தி | 23 | 24 | 11 | 12 | 13 | 14 |
| லக்னம் | 1 | 9 | 22 | 22 | 25 | 2 |

| கோள் | துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |
|---|---|---|---|---|---|---|
| சூரியன் | 16 | 17 | 22 | 2 | 3 | 22 |
| சந்திரன் | 26 | 14 | 13 | 25 | 5 | 12 |
| செவ்வாய் | 14 | 21 | 2 | 15 | 11 | 6 |
| புதன் | 20 | 10 | 21 | 22 | 7 | 5 |
| குரு | 13 | 10 | 17 | 11 | 15 | 28 |
| சுக்ரன் | 4 | 6 | 27 | 12 | 29 | 19 |
| சனி | 3 | 18 | 28 | 14 | 13 | 15 |
| ராகு | 22 | 21 | 10 | 20 | 18 | 8 |
| கேது | 23 | 24 | 11 | 12 | 13 | 14 |
| மாந்தி | 8 | 18 | 20 | 10 | 21 | 2 |
| லக்னம் | 4 | 23 | 18 | 20 | 24 | 10 |

## 12 ராசிகளிலும் லக்னம் சந்திரன் இவற்றின் சுப பலன்தரும் பாகைகள்

| | மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |
|---|---|---|---|---|---|---|
| லக்னம் | 0°-3°20 | 13°-20 16 40 | 26°-40 30° | 26°-40 30° | 0°-3°20 | 26°40 30° |
| சந்திரன் | 21 | 14 | 18 | 8 | 19 | 9 |

| | துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |
|---|---|---|---|---|---|---|
| லக்னம் | 0°3°-20 | 13°20 16° 40 | 26°40 30 | 0°3°-20 | 13°20 16°-40 | 26°40 30° |
| சந்திரன் | 24 | 11 | 23 | 14 | 19 | 9 |

இரண்டாவது பதகத்தில் லக்னத்துக்கு நேராக ஒவ்வொரு லக்னத்திற்கும் சுபபலன் தரும் பாகைகள் தரப்பட்டுள்ளன. இந்தப் பாகைகள் லக்னமாக அமைந்தால், வாழ்க்கை சிறப்பாக அமையும் என்று நம்பலாம்.

அடுத்து, சந்திரனுக்கு நேராக உள்ள பாகைகள் 12 ராசிகளுக்கும் சந்திரன் சுபபலன் தருபவையாகும். இதில் சந்திரன் உட்படச் சுபபலன் தரவேண்டிய சந்தர்ப்பங்களில் கோள்கள் அதைக் கூட்டியும், அசுபபலன் தரவேண்டிய சந்தர்ப்பங்களில், அதைக் குறைத்தும் தருவார்கள் என்று நம்பலாம்.

## கிரஹங்களின் அவஸ்தைப் பாதிப்பால் கோசாரத்தில் ஏற்படும் விளைவுகள்

1) ஆண் மற்றும் ஒற்றைப்படை ராசிகளான மேஷம், மிதுனம், சிம்மம், துலாம், தனுசு, கும்பம் ஆகிய 6 ராசிகளில் இருக்கும் கோள்கள், அந்தந்த ராசிகளில்—

முதல் 6 பாகைகளில் பாலகனாகவும், அடுத்த 6 பாகைகளில் (7—12) குமரனாகவும், அதற்கு அடுத்த 6 பாகைகளில் (13—18) தருணனாகவும், அதற்கு அடுத்த 6 பாகைகளில் (19—24) விருத்தனாகவும், கடைசி 6 பாகைகளில் (25—30) இறந்தவனாகவும் சொல்லப்படும் பருவநிலைகளில் இருக்கின்றன.

பெண் ராசிகளான ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம் மகரம், மீனம் ஆகிய 6 ராசிகளில் இந்தக் கணக்கு தலை கீழாக மாறி, முதல் 6 பாகைகளில் இறந்தவனாகவும். அடுத்த 6 பாகைகளில் (7—12) விருத்தனாகவும், அதற்கு அடுத்த 6 பாகைகளில் (13—18) தருணனாகவும், அதற்கு அடுத்த 6 பாகைகளில் (19—24) குமரனாகவும், அதற்கு அடுத்த கடைசி 6 பாகைகளில் (25—30) பாலகனாகவும் கோள்கள் பருவ நிலைகளை அடைகின்றன.

பாலகன் நிலையில் உள்ள கோள் $\frac{1}{4}$ பலனையும், குமரன் நிலையில் உள்ள கோள் $\frac{1}{2}$ பலனையும், தருணன் நிலையில் உள்ள கோள் முழுப்பலனையும் விருத்தன் என்ற கிழவன் நிலையில் உள்ள கோள் கெட்ட பலனையும், இறந்தவன் (ம்ருதன்) நிலையில் உள்ள கோள் மாரகம் இருந்தால் இறப்பையும் மற்றப்படி மாரகத்திற்கு ஒப்பான கண்டத்தையும் தருவார்கள் எனலாம்.

கோசாரத்தில் இந்த அவஸ்தைகளில் சொல்லப்பட்ட கோள்கள் சுபபலன் தரும் சந்தர்ப்பங்களில் சொல்லப்பட்ட அவஸ்தைகளில் சஞ்சாரம் செய்யும்போது $\frac{1}{4}$, $\frac{1}{2}$ முழுவதும் என்ற சுபபலனையும், கெட்ட பலன் தரவேண்டிய விருத்த அவஸ்தையில் சுபபலன் இல்லாமல் நிஷ்பலன் ஆவதும், கெட்ட பலன் தரவேண்டிய அவஸ்தையிலும் (இறப்பு) இதுவே நிஷ்பலன் ஆவதையும் குறைத்தோ கூட்டியோ தருவார்கள்.

கோசாரத்தில் இந்த அவஸ்தைகளில் சொல்லப்பட்ட கோள்கள் அசுபலன் தரும் சந்தர்ப்பங்களில் அசுபலனையும் $\frac{1}{4}$, $\frac{1}{2}$, முழுவதும் என்ற பருவத்திற்கேற்ப அசுபத்தைக் குறைப்பார்கள், கெட்ட பலன்களைத் தர வேண்டிய விருத்த அவஸ்தைக்குரிய பாகையில் அதற்குரிய சக்தி இன்மையால் கெட்டதும் இராது, நல்லதும் இராது, இறந்தவன் (ம்ருதன்) நிலையில் உள்ள கிரகம், தன்

அசுபத்தைக் கொடுக்கும் சக்தியை இழந்துவிட்டதால், கோசாரக் கெடுதிகள் இல்லாமல் போகும். இப்படி அவஸ்தைக்கேற்பப் பலனைக் கூட்டியும் குறைத்தும் மதிப்பிட வேண்டும்.

## அவஸ்தை பலன் வேறுவிதம்

இந்த அவஸ்தை பலன் வேறு ௨ விதமாகவும் நூல்களில் சொல்லப்பட்டுள்ளன. அவை சாக்ருதம் (விழிப்பு நிலை) ஸ்வப்னம்(கனாநிலை), ஸுஷுப்தி (முழுதூக்கநிலை) என்பனவாம். இவை ஒற்றை ஆண்பால் ராசிகளில்—முதல் 10 பாகை சாக்ருத அவஸ்தை, இரண்டாவது—11 முதல் 20 பாகை வரை—ஸ்வப்ன நிலை மூன்றாவது—21 முதல் முதல் 30 பாகை வரை—ஸுஷுப்தி நிலை, என்னும் இந்த மூன்று நிலைகளில் கோள்கள் இருக்கும். இரட்டை, பெண் ராசிகளில், இந்த முறை தலை கீழாக மாறும், அதாவது,

முதல் 10 பாகை வரை—ஸுஷுப்தி நிலை. இரண்டாவது 11 முதல் 20 பாகை வரை— ஸ்வப்ன நிலை. மூன்றாவது 21 முதல் 30 பாகை வரை—சாக்ருத நிலைகளில் கோள்கள் இருக்கும்.

இதில் சாக்ருதம் என்ற விழிப்புநிலையில் இருக்கும் கோள்கள் முழுப்பலனையும் தரும் வலிமைபெறும். ஸ்வப்னம் என்ற கனாநிலையில் இரண்டும் கெட்ட மத்திம பலன்களைத்தரும். ஸுஷுப்தி என்ற உறக்க நிலையில்நிஷ்பலன், அதாவது பலன் கொடுக்க சக்தியற்றவையாகி விடுகின்றன.

முன்சொன்ன பருவ அவஸ்தைப் பலன்கள் போலவே கோள்கள் அளிக்கும் சுப அல்லது அசுபபலன்களைக் கூட்டியோ, சுப அல்லது அசுப பலன்களைக் குறைத்தோ தீர்மானம் செய்து கொள்ளவும்.

## பாட்டு ராசி முதலியவை

பொதுவாக ஒருவருக்கு ஜென்ம ராசியிலிருந்து 8 இல் சந்திரன் வரும்போது சந்திராஷ்டமம் என்றும் அந்த 8 இல் உள்ள 2¼ நாளும் குறிப்பிட்ட ராசிக்காரர்களுக்குக் கஷ்டம், நோய். துன்பம், இழப்பு முதலியவை ஏற்படும் என்றும் கொள்வது அனுபவ சித்தம், ஆனால் எல்லா ராசிக்காரரையும் சந்திராஷ்டமம் வருத்துவதில்லை. அதற்கு மாறாக வேறு சில ராசிகளில் அதற்கு சமமான கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இந்த ராசிகளே 'படுத்தும் ராசி' அல்லது 'பாட்டு ராசி' என்று வழங்கப்படுகிறது. இதன் கீழ்க் கொடுத்துள்ள பதகத்தில் 12 ராசிகளுக்கும் அத்தகைய பாட்டு ராசிகளைக் கொடுத்துள்ளோம். அதனுடன் ஒவ்வொரு ராசிக்கும் ஆகாத மாதம் திதி, யோகம், கரணம், நக்ஷத்திரம், வாரம், தினம்தோறும் ஆகாத ஜாமம் முதலிய வற்றையும் சேர்த்து பதகமாகக் கீழே கொடுத்துள்ளோம். இது வடமொழி நூல்களில் ''காதக் வார திதி நக்ஷத்திராதி'' என்று வழங்கப் படுகிறது. அன்றைய கோசார பலனை அறியும்போது மொத்த நிகர பலனை மதிப்பீடு செய்ய இது உதவும் என்பது கூறாமலேயே விளங்கும், இனி பதகம் வருமாறு:

# 'பாட்டு' ராசி முதலியவை காட்டும் அட்டவணை

உங்கள் ஜன்ம ராசிகள் பதகம் எண் — 6

| ஆகாத ராசி மாதம் முதலியவை | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
|---|---|---|---|
| ராசி | விருச்சிகம் | சிம்மம் | மகரம் |
| மாதம் | கார்த்திகை | மார்கழி | ஆடி |
| வாரம் | ஞாயிறு | சனி | திங்கள் |
| யோகம் | விஷ்கம்பம் | சுக்லம் | பரிகம் |
| நக்ஷத்திரம் | மகம் | ஹஸ்தம் | சுவாதி |
| கரணம் | பவ | சகுனி | கௌலவம் |
| ஜாமம் | 1 | 4 | 3 |
| திதிகள் | பிரதமை<br>சஷ்டி<br>ஏகாதசி | பஞ்சமி<br>தசமி<br>பௌர்ணமி<br>அமாவாசை | பிரதமை<br>சப்தமி<br>துவாதசி |

| ஆகாத ராசி மாதம் முதலிவை | கடகம் | சிம்மம் | கன்னி |
|---|---|---|---|
| ராசி | சிம்மம் | மீனம் | சிம்மம் |
| மாதம் | மாசி | ஆடி | புரட்டாசி |
| வாரம் | புதன் | சனி | சனி |

| | | | |
|---|---|---|---|
| யோகம் | வியாகாதம் | திருதி | சுக்லம் |
| நக்ஷத்திரம் | அனுஷம் | மூலம் | திருவோணம் |
| கரணம் | நாகவம் | பவம் | கௌலவம் |
| ஜாமம் | 1 | 1 | 1 |
| திதிகள் | துவிதியை<br>சப்தமி<br>துவாதசி | திரிதியை<br>அஷ்டமி<br>திரயோதசி | பஞ்சமி, தசமி,<br>பௌர்ணமி,<br>அமாவாசை |

| | | | |
|---|---|---|---|
| ஆகாத ராசி<br>மாதம்<br>முதலியவை | துலாம் | விருச்சிகம் | தனுசு |

| | | | |
|---|---|---|---|
| ராசி | கன்னி | மிதுனம் | மீனம் |
| மாதம் | தை | ஐப்பசி | ஆடி |
| வாரம் | வியாழன் | வெள்ளி | வெள்ளி |
| யோகம் | சுக்லம் | வியதீபாதம் | வஜ்ரம் |
| நக்ஷத்திரம் | சதயம் | ரேவதி | பரணி |
| கரணம் | தைதுலம் | கரசை | தைதுலம் |
| ஜாமம் | 4 | : | 1 |
| திதிகள் | சதுர்த்தி<br>நவமி<br>சதுர்தசி | பிரதமை<br>சஷ்டி<br>ஏகாதசி | திரிதியை<br>அஷ்டமி<br>திரயோதசி |

| | | | |
|---|---|---|---|
| ஆகாத ராசி<br>மாதம்<br>முதலியவை | மகரம் | கும்பம் | மீனம் |

| | | | |
|---|---|---|---|
| ராசி | சிம்மம் | மகரம் | கும்பம் |
| மாதம் | ஆவணி | வைகாசி | பங்குனி |

| | | | |
|---|---|---|---|
| வாரம் | செவ்வாய் | வியாழன் | வெள்ளி |
| யோகம் | வைதிருதி | கண்டம் | வஜ்ரம் |
| நக்ஷத்திரம் | ரோஹிணி | திருவாதிரை | ஆயில்யம் |
| கரணம் | சகுனி | கிமஸ் துக்னம் | சதுஷ்பதம் |
| ஜாமம் | 4 | 3 | 4 |
| திதிகள் | சதுர்த்தி நவமி சதுர்த்தசி | திரிதியை அஷ்டமி திரயோதசி | பஞ்சமி, தசமி, அமாவாசை பௌர்ணமி |

குறிப்பு $7\frac{1}{2}$ நாழிகை கொண்டது ஒரு ஜாமம். இங்கு கடைசி வரிக்கு (திதிக்கு) முந்தைய ஜாமம் என்றதற்குப் பகலில் அந்தந்த ஜாமத்திலும், இரவில் மீண்டும் மாலை 6 மணி முதல் முதல் ஜாமம் என்ற கணக்குப்படி அந்தந்த ஜாமத்திலும் கெடுதி என்று கொள்ள வேண்டும்.

ப. திதி சூன்யமும் கோசாரமும்

பிரதமை முதல் சதுர்த்தசி வரையில் உள்ள ஒவ்வொரு திதியிலும். இரு ராசிகள் சூன்யம் அடைகின்றன. அந்தத் திதியின் நாளன்று, இந்த ராசிக்கதிபதிகளாகிய கோள்களும் சூன்யமாகி விடுகின்றன. எனவே, அந்தத் தினத்தன்று மட்டும் அந்தக் கோள்கள் அந்த ராசியிலிருந்து சுபபலன் தரவேண்டிய ராசியிலிருந்தாலும், அசுப பலன் தரவேண்டிய ராசியிலிருந்தாலும் அன்றைய தினத்தில் அந்தப் பலன் இல்லாமல் போகும். இப்படி, இந்தவிதத்தில் கோசாரப் பலனை இது பாதிப்பதால், தெளிவு கருதி இங்கு எழுதப் படுகிறது.

ஜென்ம ஜாதகத்தில் இப்படி சூன்யமடைந்த கோள்கள் சுபபலன் அசுப பலன் இரண்டும் இல்லாமல் போம்விடும். இனி சூன்ய திதிகள் வருமாறு:

| திதிகள் | ராசி சூன்யம் | அதன் கோள்கள் |
|---|---|---|
| பிரதமை | மகரம், துலாம் | சனி, சுக்ரன் |
| துவிதியை | தனுசு, மீனம் | குரு |
| திரிதியை | மகரம், சிம்மம் | சனி, சூரியன் |
| சதுர்த்தி | கும்பம், ரிஷபம் | சனி, சுக்ரன் |
| பஞ்சமி | மிதுனம், கன்னி | புதன் |
| சஷ்டி | மேஷம், சிம்மம் | செவ்வாய், சூரியன் |
| சப்தமி | தனுசு, கடகம் | குரு, சந்திரன் |
| அஷ்டமி | மிதுனம், கன்னி | புதன் |
| நவமி | சிம்மம், விருச்சிகம் | சூரியன், செவ்வாய் |
| தசமி | சிம்மம், விருச்சிகம் | சூரியன், செவ்வாய் |
| ஏகாதசி | தனுசு, மீனம் | குரு |
| துவாதசி | மகரம், துலாம் | சனி, சுக்ரன் |
| திரயோதசி | ரிஷபம், சிம்மம் | சுக்ரன், சூரியன் |
| சதுர்த்தி | மீனம், மிதுனம் தனுசு, கன்னி | குரு, புதன் |

பௌர்ணமி அமாவசைகட்குத் திதி சூன்யம் எதுவும் இல்லை.

சூன்ய ராசிகளின் அதிபராகிய கிரகங்கள் பாபர் வீட்டிலும், அசுப பலன் தரவேண்டிய வீட்டிலும், பாபக் கோள்களுடன் கூடினால் நல்ல பலனையே தருவார்கள்.

இவர்கள் சுபலன் தரவேண்டிய இடத்தில், தனியாகவும், சுபகோள்களுடன் இணையும் போதும், கெட்ட பலன்களையே தருவார்கள்.

அத்தியாயம் — 12

# கோசார பலன் விளக்கப் பீடிகை

ஒருவரின் ராசி பலனை அவர் பிறந்த சந்திரன் இருக்கும் ஜென்ம ராசியைக் கொண்டே நாம் பார்க்கிறோம். இதுவே பெரும் வழக்கில் உள்ளது. இதற்கான காரணங்களை, நாம் முன்னமேயே பொதுச் செய்திகள் என்ற முதல் அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். கோசார பலனைத் துல்லியமாக அறிந்து கொள்வதற்குத் தேவையான மற்ற அடிப்படை விஷயங்களை முதல் பாகத்தில் 11 அத்தியாயங்கள் வரை விளக்கியுள்ளோம். இப்பொழுது கோசார பலன் அல்லது ராசி பலன் என்ற வகையை நவ கோள்களும் ஜென்ம ராசியிலிருந்து 12 வீடுகளிலும் வரும் போது தரும் பலன்களையெல்லாம் தொகுத்து விளக்குவோம். இதற்குமுன் இந்த கோசார பலனையும் நாம் பலவித கோணங்களிலும் அறிய முடிகிறது.

நாம் ஒரு குறிப்பிட்ட நாளில் நம் ராசிபலன் எப்படி உள்ளது என்று அறிந்துகொள்ள விரும்புவதாக வைத்துக் கொள்வோம். அன்றைய தினம் பஞ்சாங்கத்தில் அதாவது குறிப்பிட்ட தேதியில் 9 கோள்களும் எந்த எந்த ராசியில் உள்ளன என்றும், அவை ஒவ்வொன்றும் நம் ஜன்ம ராசிக்கு எத்தனையாவது ராசியில் உள்ளன என்பதையும் குறித்து வைத்துக்கொள்ள வேண்டும். அவை இருக்கும் வீட்டின் கணக்கிற்கேற்ப, ஒவ்வொரு கோளும் சாஸ்திரத்தில் சொல்லியபடி நல்ல பலனையோ கெட்ட பலனையோ தரும். இப்படி அன்றைய தினம் 9 கோளும் தரும் சுபம் அசுபம் என்னும் இருவகையான பலனையும் சீர் தூக்கிப் பார்த்து சுபத்துவம் அதிகம் உள்ளதா, அசுபத்துவம் அதிகம் உள்ளதா என்று புரிந்துகொண்டு,

அன்றைய தினம் நமக்கு ஏற்படும் நிகரசுபம் அல்லது அசுப பலனை நாம் தெரிந்து கொள்ளலாம்.

இப்படி வந்துள்ள பலனை, நாம் முன் விளக்கியுள்ள தசாபுத்தி பலனுடன் சீர்தூக்கிப் பார்த்து, கீழ்க்காணும்படி அன்றைக்கு நமக்குள்ள பலனை முடிவு செய்து கொள்ள வேண்டும்.

1. தசாபுத்தி பலன் சுபமாகி, கோசார பலனும் சுபமாகி இருந்தால், அன்று நமக்கு மிக நல்ல பலன் கிடைக்கும் என்று கொள்ள வேண்டும்.

2. இரண்டில் ஒன்று கெட்டு மற்றது நல்லதானால், அன்று நல்லது கெட்டது இரண்டும் கெட்ட மத்திம பலன் நடக்கும் என்று கொள்ள வேண்டும்.

3. இரண்டும் கெட்டிருந்தால், அன்றைக்கு நமக்கு மிகவும் கெட்ட நேரம் என்று அறிந்து கொள்ள வேண்டும்.

இப்படிப் பலன் பார்ப்பது பொது விதியாகும், இனி இந்த ராசிபலன் வேறு சிறப்பு விதிகள் முறைப்படியும் பார்க்கப்படுகிறது. எல்லா முறைகளையும் ஒத்துப் பார்த்து மதிப்பீடு செய்வதுதான் உண்மையான ராசி பலனாகும். அவை முறையே வருமாறு:

மேற்சொன்ன பொது விதி ஒரு கோள் ஒருவர் ஜென்ம ராசிக்கு எத்தனையாவது வீட்டில் குறிப்பிட்ட நாளில் இருக்கிறதோ அதன் தன்மைக்கேற்ப சுபம் அல்லது அசுப பலனை அறிவது.

**மூர்த்தி நிர்ணயம்:** ஒரு கோள் ஒரு ராசியிலிருந்து ஒரு குறிப்பிட்ட ராசிக்குப் (புதிதாக) பெயரும்போது, அன்று சந்திரன் உள்ள ராசி உங்கள் ஜென்ம ராசியிலிருந்து எத்தனையாவது ராசியில் உள்ளதோ, அந்தக் கணக்குப் படி அந்தக் கோள் சுவர்ண மூர்த்தி, ரஜத மூர்த்தி. தாமிர மூர்த்தி, உலோஹமூர்த்தி (தங்கம், வெள்ளி, செம்பு, இரும்பு)

என்ற மூர்த்திகளாவார்கள். சொல்லிய முறையில் இந்த மூர்த்திகளுக்கு சுபபலன் குறைந்து கொண்டே வரும். அசுப பலனானால் அதிகமாகிக் கொண்டே வரும். இதை உரிய இடத்தில் தனியாக விளக்குவோம்.

**கோசார வேதை விபரீத வேதை:** மேற்சொன்ன பொதுவிதிப்படி சுபம் அல்லது அசுபப் பலன்கள் தரும் போது, ஒரு ஜன்ம ராசியிலிருந்து, ஒரு குறிப்பிட்ட ராசியில் வேறு கோள் அல்லது கோள்கள் அதே சமயத்தில் இருந்தால், அந்தக் கோளின் கோசார சுபம் அல்லது அசுப பலன் இல்லாமல் போகும். சுபபலன் இல்லாத நிலைக்குக் 'கோசார வேதை' எனவும், அசுப பலன் இல்லாத நிலைக்கு 'விபரீத வேதை' எனவும் சொல்லப்படும். இதுவும் தனியாக விளக்கப்படும்.

**நக்ஷத்திராதிபத்தியப் பலன்:** ஒருவர் ஜன்ம நக்ஷத்திரத்திலிருந்து நாம் பலனறிய விரும்பும் கோள் எத்தனையாவது நக்ஷத்திரத்தில் அன்றையத் தினம் உள்ளதோ, அந்தக் கணக்குப்படி ஒன்பது வகையாக பலன் அறியப் படும். இதுவும் தனி அத்தியாயத்தில் விளக்கப்படும்.

**நக்ஷத்திர அங்க கோசார பலன்:** ஒருவர் ஜென்ம நக்ஷத்திரம் முதற்கொண்டு கோசாரத்தில் ஒவ்வொரு கிரகமும் இருக்கும் நக்ஷத்திரத்தை, 27 நக்ஷத்திரங்களில் மனிதன் தலைமுதல் கால் வரையில், சில பல நக்ஷத்திரங்களில் ஒவ்வோர் அங்கத்திலும் சஞ்சரிப்பதாகக் கொண்டு இப்பலன்கள் சொல்லப்படும். இதுவே நக்ஷத்திர அங்க பலனாகும். இதுவும் உரிய இடத்தில் தனியாக விளக்கியுள்ளோம்.

**அஷ்ட வர்க்கக் கோசார பலன்:** ஜாதக கணிதத்தில் அஷ்டவர்க்கம் என்று ஒன்று உண்டு. அதன் அடிப்படையில் சர்வாஷ்ட வர்க்கம், பின்னாஷ்ட வர்க்கம் என்று இரண்டு முக்கியப் பிரிவுகள் உண்டு. இது ஒவ்வொரு கிரஹமும்

ஒவ்வொரு வீட்டிலும் தரும் சுபம் அல்லது அசுபபலனைக் கணித்து அளவு செய்யும் முறையாகும். இதற்கேற்ப கோள்களின் கோசார பலன் வேறுபடும். இதுவும் தனியாக விளக்கியுள்ளோம்,

**சமாகமம் திருஷ்டி :** ஒரு கோள், ஒருவர் ஜன்ம ஜாதகத்தில் தான் இருந்த இடத்திற்கே (Radical Position) வந்து இணைவது சமாகமம் எனப்படும். இதற்குத் தனிப் பலன் உண்டு. இதுவுமன்றி ஒரு கிரஹம் கோசாரத்தில் வரும்போது தான் பிறப்பு ஜாதகத்தில் உள்ள இடத்தில் (Radical Position) பொதுப் பார்வை சிறப்புப் பார்வை என்னும் முறைகளில் பார்ப்பதுண்டு. இதற்கும் தனிப் பலன் உண்டு. இதுவே திருஷ்டி பலன் எனப்படும். இது விசேஷ திருஷ்டிப் பலன் எனவும் சொல்லப்படும்.

பொதுவாக கோசாரக் கோள்கள், தாங்கள் இருந்த இடத்தைப் பாராமல், தங்கள் பார்வை கணக்குப்படி வரும் அமையும் இடங்களை இயல்பாகப் பார்ப்பதுண்டு. இது சுவாபாவீக திருஷ்டி எனப்படும். இது எல்லாம் தனியாக விளக்கப்படும்.

**தசம சமாகமம்:** ஜாதகத்தில் 10ஆம் இடம் உச்சி தானம் ஆகும். எனவே, இதிலிருந்து கோசாரக் கோள்களின் பலன் அறியப்படுவதும் உண்டு. இதுவே தசம சமாகமம் ஆகும். இதுவும் தனியாக விளக்கியுள்ளோம்.

**கிரகண கோசார பலன் :** ஒவ்வொரு வருஷமும் சூரிய சந்திர கிரஹணங்கள் ஏற்படுகின்றன. இவை தனிநபர் அளவிலும், உலக அளவிலும் பலவகைப் பாதிப்புகளை ஏற்படுத்துகின்றன. தனிநபர் அளவில் லக்னத்திலிருந்தும் சந்திர ராசியிலிருந்தும் எந்தெந்த ராசிகளில் கிரஹணம் நிகழுமோ அதற்கேற்பத் தனி நபருக்கு சுபம் அல்லது அசுப பலன் ஏற்படுகிறது. இதுவும் விளக்கப்பட்டுள்ளது.

இதர கிரஹ கோசார சமாகமம்: ஒரு கிரஹம் ஜாதகத்தில் பிற கோள்களின் நிலையைக் Crossing Radical Position of other planets) கடக்கும்போது, பாதிப்பை ஏற்படுத்துகின்றன. இதுவும் தனியாக விளக்கப்பட்டுள்ளது.

வருஷ கிரக கோசார பலன்: குரு, சனி, ராகு, கேது என்னும் நான்கு கோள்களும் நீண்ட காலம் ஒரு ராசியில் சஞ்சரிப்பதால் அவை வருஷக் கோள்கள் எனப்படும். எனவே கோசாரத்தில் இவர்கள் தரும் பலன் நல்லதோ கெட்டதோ நீண்ட காலம் நீடிக்கும். இந்த வகையில் குருவும், சனியும் தனிப்பட்ட பலன்களைத் தருகின்றனர்.

குரு

1. பரியாயபலன்: 12 வருஷத்திற்கு ஒருமுறை இவர் ராசி மண்டலத்தைச் சுற்றுகிறார். இந்தச் சுற்றுக்குப் பரியாயம் என்று பெயர். இப்படி அதிக பக்ஷமாக ஒருவர் வாழ்க்கையில் இவர் 6 சுற்றுகள் அல்லது பரியாயங்கள் வலம் வருவார். ஒவ்வொரு பரியாயத்திலும் ஜென்ம ராசியிலிருந்து குறிப்பிட்ட ராசிகளில் சிறப்பான சுபம் அல்லது அசுப பலனைத் தருகிறார். இது தனியாக விளக்கப்படும்.

2. குரு ஜன்ம ராசியிலிருந்து 1, 3, 4, 6, 8, 10, 12, ஆகிய இடங்களில் அசுப பலன்களைத் தருகிறார். ஆக இந்தக் கெட்ட பலன்களிலும் வெவ்வேறு தாரதம்மியம் உண்டு, குருவின் அசுப தாரதம்ய பலன் என்ற தலைப்பில் இது தனியாக விளக்கப்படும்.

சனி

குருவைவிட இவர் பலிஷ்டர், 30 வருஷத்திற்கு ஒரு முறை 12 ராசிகளையும் நிதானமாகக் கடக்கிறார். இதில் 3,6,11ஆம் ராசிகளில் தான் இவர் சுபபலன் தருவார்.

மற்ற 9 ராசிகளிலும் தீய பலனே தருகிறார். அதி முக்கிய மாக 7½ சனி, கண்டச் சனி என்றும் 4இல் வரும் அர்த் தாஷ்டமச் சனி, 7இல் கண்டச் சனி, 8இல் அஷ்டமச் சனி இவையே கடுமையாகும். இதில் 12,1,2ம் ராசிகளில் (ஜன்ம ராசியிலிருந்து) சனி வருவது7½ சனியாகும். சனி 7½ சனியை ஆரம்பிக்கும் போது. குறிப்பிட்ட வாகனங்களில் வருவதாக சொல்லப் படுகிறது. இந்த 7½ சனி. வாகன சனி, கண்ட சனி, அஷ்டமசனி, அர்த்தாஷ்டம சனி ஆகியவை எப்படி பலனளிக்கின்றன என்பதும் தனியாக விளக்கப்பட்டுள்ளது.

இப்படி இரண்டு வகையான கோசார பலனை அறிய முடியும். ஒரு சராசரி மனிதன் இவ்வளவையும் பொறுமை யாகக் காண்பது என்பது கடினம். பெரும்பாலும், முதலில் சொல்லப்படும் பொது விதிப்பலன்களை எல்லாரும் சுலப மாகத் தெரிந்து கொள்ளலாம். அதன்பின் மூர்த்தி வகையில் அவை கூடிக் குறைவதையும் நக்ஷத்திரக் கணக் குப்படி அசுபக் கோளும் சுபபலன் தரும் நிலைகள் 7½ சனி முதலியவை, இந்த அளவில் யாரும் சிரமமின்றி விளங்கிக் கொள்ளலாம். இது ஓரளவுக்குப் போதுமானது. இன்னும் மிகுதியாக முயற்சி செய்யும் மனப் பக்குவம் பெற்றவர், மேலும் சிறப்புப் பலன்களை அறிய முயலலாம். எனவே. மலைக்கவோ மயங்கவோ வேண்டிய அவசியமில்லை.

இனி வரும் ஒவ்வோர் அத்தியாயத்திலும், 9 அத்தியா யங்களில் 9 கோள்களும் தரும்கோசார பொது விதிப்பலனை விளக்குவோம்.

பல நூல்களிலிருந்து மேற்கோள் பாடல்கள், சுலோகம் முதலியவற்றுடன் விளக்கலாமாயினும், மிக விரியுமாத லால், இது விஷயமாகக் கிடைக்கும். பெரும்பாலான நூல் களில் சொன்ன சாரமான விஷயங்களை மட்டும் இங்கே ஒவ்வொரு கோளுக்கும் தொகுத்து 12 பாவங்களிலும் அவர்கள் தரும் பலனையும் விளக்கியுள்ளோம்.

சோதிடக் களஞ்சியம், பெரிய வருஷாதி நூல், புலிப்பாணி முனிவர் 300, புலிப்பாணி தாய்மகள் ஏசல், சூடாமணி உள்ளமுடையான், எம்மிடமுள்ள தனி ஏட்டு வாக்கியங்கள் ஆகிய தமிழ் நூல்களிலும், பல தீபிகை, பிருகு சூத்திரம், வராஹமிஹிரர் பிருஹத் சம்ஹிதை, யவனேஸ்வரர் வாக்யம், போன்ற வடமொழி நூல்கள் இவை அனைத்திலும் சொல்லப்பட்ட விஷயங்களை இனி 12 ராசிகளுக்கும் தொகுத்து எழுதிகிறோம். எல்லா விஷயங்களும் பண்டைய நூல்களை ஆதாரமாகக் கொண்டவையே. நம் சொந்தக் கருத்து எதுவும் இல்லை.

## கோசார பலன் — சுருக்கமான பலன்

அடுத்து, விளக்கமாகக் கோசார பலன்களைச் சொல்லுவதற்கு முன், ராசி கோசார பலன் சுருக்கமாக ஒரே பார்வையில் தெரிந்துகொள்ள இங்கு தரப்படுகிறது. ஜென்ம ராசியிலிருந்து அவற்றைக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும்.

## கோசார பலன் — ஒரு பார்வை — பதகம் — 7

| கிரஹம் | ஜென்ம ராசி முதல் - அவை உள்ள ராசிகள் | பலன் |
|---|---|---|
| சூரியன் | 1, 2, 4, 5, 8, 9, 12 | இந்த இடங்களில் எடுத்த எம் முயற்சியும் ஈடேறாது. கண்வலி வயிற்று வலி, தலைவலி, சிரங்கு உஷ்ண நோய்கள், காய்ச்சல் முதலியவை தோன்றும். இது அசுப பலன். |

| | | |
|---|---|---|
| | 5 | இந்த ஓர் இடத்தில் சூரியன் மிகக் கெட்ட பலன் தருகிறான். சிறை காவல் வழக்குத் தோல்வி, மாரக பயம், பலவகையான நோய்கள், பொருள் விரயம் எல்லாம் ஏற்படும். |
| | 3, 6, 10, 11 | இவற்றில் சுப பலன் தருகிறான். சுக சௌக்யம், ஆரோக்யம், ஆதாயம், பணவரவு, பல சொத்துச் சேர்க்கை உத்யோக லாபம் முதலியவை ஏற்படும். |
| சந்திரன் | 2, 4, 5, 12 | இந்த இடங்களில் அசுபபலன் தருகின்றான். துன்பம், பல்வகை நோய் எண்ணிய காரியம் தடங்கல் ஆதல், வீண் செலவு, கெட்ட பெயர் இவை உண்டாகும். |
| | 8 | இந்த ஓர் இடத்தில் தான் சந்திரன் மிகக் கெட்ட பலன் தருகின்றான். தாங்க முடியாத துன்பம், மாரக பயம், மனக் கலக்கம். தாய்க்கு அரிஷ்டம், நோய்கள், வழக்கு, சண்டை, சிறைபயம் முதலியன. |
| | 1, 3, 6, 7 10, 11 | உடல் நலம், சுக சௌக்யம், போஜன சுகம், வாகன, தன தான்ய விருத்தி பணவரவு ஆகிய பலவகையான நல்ல பலன்கள் உண்டாகும். |

| | | |
|---|---|---|
| சுக்ரன் | 7. 10 | துன்பம், வீண்பகை, மனைவிக்கு நலிவு, பதவி நாசம், நோய், அலைச்சல், அகாலபோஜனம் ஸ்த்ரீசுகம் இன்மை முதலியன. |
| | 6 | சுக்கிரன் இந்த ஓர் இடத்தில் மிகக் கெட்ட பலனைத் தரு கிறார். பலவகை நோய், பால் வினை நோய், கடன், சண்டை, சிறை, காவல், மானபங்கம், மாரக பயம் முதலியன. |
| | 1, 2, 3, 4, 5, 8, 9, 11, 12 | தேகசுகம், நிம்மதி, பூரண ஸ்த்ரீ சுகம், போஜன சுகம் தன தானிய விருத்தி, உத்யோக தொழில் லாபம், பெண்களால் முன்னேற்றம் முதலியன. |
| சனி | 2. 4, 5, 12, 7, 8 | இதில் சாதாரண தீய பலன். இதில் 2-இல் 7½ சனி கடைசி பகுதி 12-இல் 7½ சனி ஆரம்பம். இரண்டும் பாப பலன் கடன், வீண்விரயம், கஷ்டம், நோய் முதலியன ஏற்படும். |
| | | 4-இல் அர்த்தாஷ்டம சனி—இட மாற்றம் வீண் செலவு, மனைவி, பகை, சொத்தழிவு முதலியன 7-இல் கண்ட சனி இதுவும் மேற் கண்ட கெட்ட பலனே. 8-இல் அஷ்டம சனி. இதற்கும் 4-இல் சொன்ன பலன்தான். 7½ சனியை அடுத்து, இது மிகவும் தீமை தருவதாகும். |

| | | |
|---|---|---|
| | 1 | இது 7½ சனியில் ஜென்ம சனி எனப்படும். இந்த இடத்தில் சனி மிகவும் கொடிய பலன் களைத் தருகிறார். பலநோய், மான கௌரவ பங்கம் மாரக பயம், பெற்றோர் இழப்பு, பெருந்தொகை இழப்பு, வெகு ரோகம் சிறை காவல் முதலியன. |
| | 3, 6, 9. 11 | எல்லா விதத்திலும் நன்மை. தமிழ் நூலில் மட்டும்தான் 9இல் சனிக்கு சுப பலன் கொடுக்கப் பட்டுள்ளது. சர்வ சௌக்யம், தன லாபம், ஸ்த்ரீ போக விருத்தி, உத்யோக தொழில் விருத்தி, எல்லா வகையிலும் நன்மை முதலியன. |
| செவ் வாய் | 1, 2, 4, 5, 8, 9, 10, 12 | பலவகையிலும் துன்பம் துயரம் பணவிரயம், நஷ்டம், உஷ்ண சம்பந்தமான நோய்கள், ஆபத்து விபத்துகள் முதலி யவை. |
| | 7 | இந்த ஓர் இடத்தில் செவ்வாய் எல்லா இடங்களை விட அதிகக் கெடுதியைச் செய் கிறான். கலகம், சிறை பயம், கொடிய அசுப பலன்கள், மாரக பயம், வழக்கு, சண்டை, பல வகை நோய்கள் முதலியன. |
| | 3, 6, 11 | மகிழ்ச்சி, பல வகை லாபம், சுகம், தனலாபம், சௌக்யம் எல்லா வகையிலும் நன்மை. |

| | | |
|---|---|---|
| புதன் | 1, 4, 3, 5, 7, 9, 12 | தனவிரயம், கஷ்டம், சண்டை, வியாஜ்யம், நரம்பு சம்பந்தமான நோய், அசௌக்யம். |
| | 2 | இந்த ஓர் இடத்தில்தான் புதன் மிகக் கெடுதி செய்கிறார். சில்லறைச் சண்டை, கொடிய பலன், பலவகை நோய், சிறை காவல், மாரக பயம், நஷ்டம், கஷ்டம். |
| | 6, 8, 10, 11 | உடல் நலம், மன மகிழ்ச்சி, கல்வி, வெற்றி, நிம்மதி, தன தான்ய விருத்தி, சுக சௌக்யம், உத்யோக தொழில் விருத்தி, வழக்கு, வெற்றி. |
| குரு | 1, 4, 10 | மனப்பயம், கண்டம், இடமாற்றம், பதவி நாசம், சுகம், தூக்கம் குறைவு, வீண் விரயம், ஆரோக்யப் பாதிப்பு, கோழை சளி நோய் முதலியன. |
| | 3 | குரு இந்த ஓர் இடத்தில்தான் அதிகக் கெடுதி செய்கிறார். பல வகையான நோய், மாரக பயம், சிறை காவல், கௌரவ, மான பங்கம், சண்டை, பகை முதலியன. |
| | 2, 5, 7, 9, 11 | தேக சுகம், மகிழ்ச்சி, போஜன சுகம், வாகன, ஆடை அலங்கார சுவர்ண லாபம், தொழில் உத்யோக விருத்தி, உள்நாட்டு, |

| | | |
|---|---|---|
| | | வெளிநாட்டுப் பயண வாய்ப்பு எல்லா வகையிலும் நன்மை. |
| இராகு கேது | 1, 2, 4, 5, 7, 8, 10, 12 | துன்பம், திகில், சூழ்ச்சிக்குப் பலியாதல், பகை, பலவகை இனம் காண முடியாத நோய்கள், வேண்டாத இடமாற்றம், வீண் விரயம், உத்தியோக தொழில் நாசம் முதலியவை. |
| | | இந்த ஓர் இடத்தில்தான் ராகு கேதுக்கள் மிகக் கொடிய பலன் தருகின்றனர். துர்ப்பாக்யம், தோல்வி, வழக்கு, சிறை காவல், மாரக பயம் எல்லா வகையான துன்பம், பலவகை நோய்கள் முதலியன. |
| | 3, 6, 11 | உடல் சுகம், போஜன சுகம், ஸ்த்ரீ போகம், லாபம், சத்ரு ஜெயம், தன தான்ய விருத்தி, உத்யோக தொழில் உயர்வு, எல்லா வகையிலும் நன்மை முதலியனவாம். |

அத்தியாயம் 13

# சூரியனின் ராசி பலன்கள்

சூரியன் ஜென்ம ராசிக்கு 3,6,10,11ஆம் இடங்களில் சுபப்பலனும் மற்ற இடங்களில் அசுபபலனும் தருகிறான்.

1. சூரியன் ஜென்ம ராசிக்கு வந்தால்-

துர்சொப்பனம் கண்நோய், தலைநோய் போன்றவை ஏற்படும். வீட்டைவிட்டு வெளியேற வேண்டியது வரும். வெப்ப நோய்கள், வயிற்று நோய்கள் உண்டாகும். மனைவியுடன் பூசலோ பிரிவோ உண்டாகும். சொறி சிரங்கு உண்டாகும். அதிக கோபத்தால் எல்லாரையும் பகைத்துக்கொள்ள நேரும். மூகரோகம் உண்டாகும். பித்தநோய் தோன்றும். நல்லவை காதில் ஏறாது. வறுமை அதிகமாகும். வீண் களைப்பு ஆயாசம் போன்றவை ஏற்படும். இதய நோய். சோகம் உண்டாகலாம். ஒரு திருமணத்தால் கெட்ட பெயர் உண்டாகும். கௌரவ பங்கம், பயம், ஆகியவை ஏற்படும். அகால போஜனத்தால் துன்பம் பயனற்ற பயணம் இவை ஜென்மத்தில் சூரியன், எவ்வகையிலும் அசுபபலனே தருவான்.

2. சூரியன் ஜென்ம ராசிக்கு இரண்டில் வரும்போது—

கண் நோய், தலை நோய், மனைவியிடம் மனஸ்தாபம் மனைவியின் பிரிவு போன்றவை ஏற்படும். பெருஞ் சினத்தால் எல்லாருடனும் பகைமை உண்டாகும். பசு, எருமை போன்ற கால் நடைச் செல்வம் அதிக இறப்பால் அழியலாம். இவர் சிடு மூஞ்சியாகவும் கடுஞ்சொல்ல ராகவும் மாறுகிறார். அரசாங்க தண்டனை முதலிய வற்றால் பணம் (அபராதம்) விரயமாகிறது. பல நோய்கள் பற்றிக் கொள்ளுகின்றன மகிழ்ச்சி குறைகிறது. பிறரால் பல வகையிலும் ஏமாற்றம் ஏற்படலாம். பேராசைக்காரராகி விடுவார். வீண் உழைப்பு ஏற்பட்டு, அதனால் எந்த லாபமும் ஏற்படாமல் போகலாம். கெட்ட சினேகம், கெட்ட சுபாவம் போன்றவை ஏற்படுகின்றன. பயிர்த்தொழிலில் நஷ்டம் ஏற்படும். வியாபாரமும் நஷ்டத்தில் முடியும். வீட்டில்,

பொருள் களவு போகலாம். பிடிவாத குணத்தால், தீமையே இது சமயம் ஏற்படுகிறது.

3. சூரியன் ஜென்ம ராசிக்கு மூன்றில் வரும்போது—

பணம் காசு சேரும். தான தர்மம் செய்வார். சத்ரு ஜெயம் உண்டாகும். குழந்தையற்றவர் கருத்தரிப்பர். மிக்க சுக சௌக்கியம் ஏற்படும். நெடு நாளைய கஷ்டங்கள் நீங்கும். தனக்கு மிகவும் விருப்பமான மனைவி அல்லது பெண்ணின் உறவு ஏற்படும். தீராத நோய் தீரும். பலவிதத்திலும் புகழ் உண்டாகும். தாம் பிறருக்காக வாதாடி வெற்றி பெறுவார். மக்களுடன் பகையும் சகோதர பீடையும் உண்டாகலாம். இந்தக் காலத்தில் ஜாதகர் புத்தி சாலியாகிறார். வீர சூரராகிறார். பதவி உயர்வுகள்பலவும் ஏற்படும். கௌரவம் ஏற்படும். நீதிபதியுமானவர். தமக்குப் பிடித்தமான இடத்துக்கு வேலை மாற்றம் ஏற்படும். எல்லாரும் இவரிடம் நட்புக் கொள்வார்கள். பிள்ளைகள் மூலம் கஷ்டம் சுகம் என்றும் இரண்டும் உண்டாகும். சுயசம்பாத்தியத்தால் பணம் பெருகும்.

4. சூரியன் ஜென்ம ராசிக்கு நான்கில் வந்தால்—

வீட்டில் நிம்மதி இராது. வீட்டைவீட்டு தன்னிச்சையாகவோ கட்டாயமாகவோ வெளியேற வேண்டியது வரும். மனைவி அல்லது கணவனுடன் கருத்து வேற்றுமை உண்டாகும். சிந்தனா சக்தி, நிர்ணயத் திறன் போன்றவை குறையும். சரியான முடிவுக்கு வரமுடியாமல் எல்லா விஷயங்களிலும் மனத் தடுமாற்றம் உண்டாகும். பலபேருடனும் மற்றும் உறவினர்களுடனும். பகை ஏற்படும். யாரும் விரும்பமாட்டார்கள். இவர் வீட்டில் உள்ள பெண் உறுப்பினர்களுக்கு நோய்நொடி உண்டாகும். விபத்து முதலியவற்றால் ஏதாவது உடல் ஊனமும் ஏற்படலாம். தன தான்யம் நஷ்டமாகும். பயிர் விளைச்சல் சாவியாகும்.

மனை வீடு முதலியவை கையைவிட்டுப் போகும். சிற்றின்ப சுகத்தில் தடை; குறை முதலியவை ஏற்படும், இரத்தக் காய்ச்சல் போன்ற நோய்கள் ஏற்படும். சரீரக் கஷ்டம், மனக் கஷ்டம் இரண்டுமே நேரும். வீட்டில் பூசலும் சில்லறைச் சண்டைகளும் ஏற்பட்டு, சுகமும் நிம்மதியும் கெடும். சுவையற்ற உணவாலும். வேளை தவறும் உணவாலும் போஜன சுகம் கெடும். அசௌரிக யங்கள் அதிகமாகும்.

**5. ஜென்ம ராசிக்கு ஐந்தில் சூரியன் வந்தால்—**

கெட்ட கனவுகள் தோன்றும். மனத் தெளிவு இராது. சஞ்சலப்புத்தி அதிகமாகும். 'ஹிஸ்டீரியா' போன்ற மன நோய்கள் ஏற்படும். மக்களுடன் பகை உண்டாகும். காம இச்சை அதிகமாகும். ஆனால். நிறைவேறாமல் போகும். மனைவியின் உடல் நலம் கெடல் போன்ற நிலைகள் உண்டாகும். தகப்பனாருக்குத் தொல்லைகள் உண்டாகும். மனக் கொந்தளிப்பு, பகை போன்றவை ஏற்படும். அரசாங்க வகையில் கஷ்டம் ஏற்படும். உறவினர்கள் சரியான, நெருக்கடியான சந்தர்ப்பத்தில் விட்டுப் பிரிந்து செல்வர் மிகுந்த பல விதத்திலும் கவலை அதிகமாகும். நிறைவேறாத ஆசைகளும், அதனால் துன்பமும் ஏற்படும், பலவகை நோய்கள் ஏற்படும், நண்பர்களுடனும் பகை உண்டாகும். அவர்களால் இடைஞ்சல்களும் உண்டாகும். பணக்கஷ்டம், கௌரவ பங்கம், நிலையற்ற புத்தி, ஆரோக்கியக் கெடுதி போன்றவை ஏற்படும். அப்படிப் பார்த்தாலும், இது அசுபபலன் தருவதே ஆகும். இந்த ஓர் இடத்தில்தான் சூரியனுக்கு மிகக் கொடிய கோசார பலன் கூறப்பட்டுள்ளது. மாரகம், நோய், சண்டை, சிறைகாவல் போன்ற பலவகைக் கஷ்டம் ஏற்படும்.

6. ஜென்மராசிக்கு 6இல் சூரியன் வரும்போது—

பகைகளில் வெற்றி ஏற்படும். தனவிருத்தியும் ஏற்படும். வங்கியில் தன் கணக்கில் ரொக்க இருப்புக் கூடும். வசூலாக வேண்டிய கடன் பாக்கிகள் வசூலாகும், தீராத நோய்கள் தீரும். இருக்கும் தொல்லைகள் எல்லாம் நீங்கும், காம சுகத்தில் பூரணமான மன நிறைவு ஏற்படும். மக்கட்பேறு உண்டாகும். ஞானம் மேலிடும். கல்வியில் வெற்றி ஏற்படும். அரசுத் துறையால் இலாபம் அல்லது உத்தியோக வாய்ப்பு ஏற்படும். பயிர் விளைச்சல்கள் கூடும். வீட்டில் அத்தியாவசியப் பண்டங்கள் நிரம்பி வழியும். நெடுந்தூரப் பயணங்களால் இலாபம் ஏற்படும். மனக் கவலையும் கஷ்டங்களும் விலகும். முடியாது என்று கை விட்ட கடினமான முயற்சிகளும் எளிதில் கை கூடும். மனத்தில் குதூகலமும் தெம்பும் அதிகமாகும். மரியாதையும் அந்தஸ்தும் ஓங்கும் ஆறில் சூரியன் இப்படி எல்லா வகை யிலும் நற்பலனே தருவான்.

7. ஜென்ம ராசிக்கு 7ல் சூரியன் வரும்போது

மனைவியுடன் சண்டை, மனைவிக்கு நலக்கேடு போன்றவை ஏற்படும். எல்லாக் காரியங்களும் தடைப்படும். வயிற்று நோய் சொறி சிரங்கு போன்றவை ஏற்படும். விவாகம் தடைப்படும். பரதார இச்சையில் பெயர் கெடும். விபரீதமான புத்தியும், பலவந்தமாக வீட்டைவிட்டு வெளியே போக வேண்டிய நிலையும் வரும். சீரணக் கோளாறுகள், ஆசன வாயில் நோய் ஆகியவை ஏற்படும். ரத்தப் போக்கும் உண்டாகலாம். உடல் சோர்வு உளைச்சல், சாப்பாட்டில் கெடுதி. (Food Poisoning) ஆகியவை உண்டாகும், கௌரவபங்கமும் உண்டாகும். குறிக்கோளற்ற வீண் பயணங்களும், அதனால் வீண் பணச் செலவும் உண்டாகும். உத்தியோக பங்கம் வியாபார நஷ்டம் தொழில் நஷ்டம் எல்லாம் உண்

டாகும். ஏழில் வரும் சூரியன் மொத்தத்தில் அசுபபலனை தருவான்.

8. ஜென்ம ராசிக்கு 8இல் சூரியன் வரும்போது—

காரியத்தடை, வீண் வழக்கு, வியாச்சியங்கள் ஆகியவை ஏற்படும். தலைநோய், தன் வீடு விட்டு வெளி யேறல் போன்றவையும் நேரும். கண்டம், மாரகபயம் ஆகியவை உண்டு. இவர் குணக்கேடன் ஆகிறார். உஷ்ண நோய் கண்ணோய் உண்டாகும். தலையில் அடிபட்டுக் காயம் புத்திர தோஷம் ஆகியவையும் ஏற்படும். பண வரத்துக் குறையும், வறுமை தோன்றி வாட்டும், பசு, எருமை முதலிய கால்நடைச் செல்வமும் பாழாகும். அதனால் நஷ்டமும் ஏற்படும். வீண்பயமும், பலருடன் கலகமும் ஏற்படும். அரசாங்க விரோதமும், அதனால் தண்டனையும் சிலருக்கு ஏற்படும். மனக்கஷ்டம், மனைவி கணவன் பூசல் ஆகியவை ஏற்படும். வீட்டில் உறவினர் ஒருவர் மறைவால் சூதகம் தீட்டு ஏற்படும். அந்த வகை அசுபச் சடங்குகளில் ஈடுபட வேண்டியதும் வரும். முன்னர் தான் செய்த கெட்ட காரியங்களுக்காக இப்போது பலனை அனுபவிக்க வேண்டியதும் வரும். காச நோய் முதலிய பல வகை நோய்கள் உண்டாகும். அதிக வெப்பம் தாளா மல் தொல்லைகள் போன்றவை ஏற்படும், எவ்வகை யிலும் 8இல் சூரியன் தீயவனே!

9. ஜென்ம ராசிக்கு 9இல் சூரியன் வரும்போது—

தகப்பனாருடன் விரோதமும், அவருக்கு அரிஷ்டமும் நோய் போன்றவையும் ஏற்படும் காரியத் தடைகள் ஏற் படும். பெரியோர்களையும் குருமார்களையும் பகைத்துக் கொள்ள நேரலாம். வீண் அகங்காரமும் கர்வமும் உண்டாகும். எதிர்பாராத விபத்துகள் ஏற்படுகின்றன. செல்வம் குறையும், வறுமை மேலிடும். சொத்துகளை அடைவதில் தடைகள் ஏற்படும். பதவி அந்தஸ்து

ஆகியவை பறிபோகும். மானபங்கங்கள் ஏற்படும். உயர் நிலையில் உள்ளவர்களுடன் விரோதம் உண்டாகும். பல நோய்கள் ஏற்பட்டு உடலின் பொலிவும் ஒளியும் குறையும். மன அமைதி இராது. நம்பிக்கை இன்மையால் பந்து ஜன விரோதமும் உண்டாகும், இப்படிப் பல வகையிலும் கஷ்டமான பலன்கள் தான் தோன்றும்.

## 10. ஜென்ம ராசிக்குப் 10இல் சூரியன் வரும்போது—

மிகவும் சுகம் உண்டாகும். பணம் காசுகள் சேரும். பல விதத்திலும் கல்வியில் தேர்ச்சி உண்டாகும். தெய்வபக்தியும் தரும சிந்தனையும் உண்டாகும், கார், ஸ்கூட்டர் போன்ற உயர்ரக வாகனங்கள் கிடைக்கும். இவர் பிரசித்தி அடைவார், இவரின் பணம் சம்பாதிக்கும் திறமை (Earning Capicaty) அதிகமாகும். கோயில் குளம் போன்ற பல திருப்பணிகளும் செய்வார். இவரால் இது வரை செய்ய முடியாத அல்லது இதுவரை யாரும் சாதிக்க முடியாத ஒரு பெரிய காரியத்தை இது சமயம் செய்து முடிப்பார். மனிதர்களாலும் கால்நடையாலும் இலாபம் ஏற்படும். குடும்ப சுகம் பெருகும் பொன் வெள்ளி மற்றும் பணமும் பெருகும். துணிவகைகள் சேரும். பல வழிகளிலும் இலாபம் ஏற்படும். அரசாங்க முக்கியஸ்தர்களின் ஆதரவு கிட்டும். எண்ணிய காரியங்கள் எல்லாம் கைகூடும். மகிழ்ச்சியும் பெருகும். நண்பர்களால் உதவிகள் ஏற்படும்.

பத்தில் வரும் சூரியன் எல்லா வகையிலும் நல்ல பலனே தருகின்றான்.

## 11. ஜென்ம ராசிக்குப் 11இல் சூரியன் வரும்போது—

பல முகாந்திரங்களாலும் பணவரத்துப் பெருகும். பகைகளை வெல்லலாம். தானம் செய்வார். பிறர்மேல் இரக்கம் ஏற்படும். நெடுநாளைய சங்கடம் நீங்கும்.

குடும்ப சுகம் பூரணமாகக் கிடைக்கும். அரசாங்கத்தால் இலாபம் ஏற்படும். எதையும் செய்து முடிக்கும் சாமர்த்தியம் ஏற்படும். தான்ய விருத்தியும் உண்டாகும். சிறந்த வாகன யோகம் கைகூடும்.. வாக்கு வன்மையால் இலாபம் உண்டாகும். பாக்கியம் கூடும். அதிர்ஷ்டத் திருப்பம் ஏற்படும். புதிய பதவி மரியாதை, அந்தஸ்து ஆகியவை கிடைக்கும். நோய் நீங்கி ஆரோக்கியம் பெருகும். போஜன சுகம் உண்டாகும் பெரியோர்கள் மூலம் காரிய அனுகூலம் ஏற்படும். வீட்டில் மகிழ்ச்சியான கொண்டாட்டங்கள் சுபகாரியங்கள் நடக்கும். 11இல் சூரியன் சரீர திட ஆரோக்கிய சுகம், இலாபம் போன்ற எல்லா வகையிலும் நன்மையே செய்வான்.

12. ஜென்ம ராசிக்கு 12இல் சூரியன் வரும் போது—

மனைவியுடன் பகை, மனைவி பிரிவு, காலில் காயம். சொறி, சிரங்கு முதலிய நோய்கள் ஆகியவை ஏற்படும், வீடு அல்லது நாட்டை விட்டு இஷ்டத்திற்கு விரோதமாய் வெளியே சென்று இருக்க வேண்டியதும் வரும். தேவையில்லாத வீண் செலவுகள், பல உண்டாகும். தகப்பனாருக்கு அரிஷ்டம் நோய் போன்றவை ஏற்படும். குன்ம, சூலை ரோகங்கள் உண்டாகும். கீழ்த்தரமான காரியங்களில் ஈடுபடத்தூண்டும், பாவ காரியங்கள் செய்வார். மனக் கஷ்டம் சொத்து நஷ்டம் ஆகியவை ஏற்படும். நண்பர்கள், வேண்டியவர்கள் ஆகியோருடன் பகைமை உண்டாகும். தீராத காய்ச்சல் உண்டாகும். ஆனால், தருமத்துட்பட்ட செயல்கள் மட்டும் நிறைவேறும், பதவி நாசமும் ஏற்படும், எல்லா உழைப்பும் காரியமும் நிறைவேறாமல் போகும். தான் பிறந்த வீட்டைவிட்டும் சிலர் வெளியேறுவர். 12இல் சூரியன் எல்லா வகையிலும் தீய பலனையே தருவான்.

குறிப்பு : சூரியன், ஒரு மாதத்தில் ஒரு ராசியைக் கடப்பதால், அது ஜென்மராசிக்கு நல்ல பலன் தரும்

3,6,10,11ஆம் இடங்களில் வரும் மாதங்களை, நல்ல பலன் தரும் மாதங்களாகக் கொள்ளலாம். இதுதவிர இடங்களைச் சுட்டாமல் நட்பாட்சி உச்சத்தில் சூரியன் வந்தால் தனலாபமும் எல்லா வகையிலும் எங்கும் நன்மையும் ஏற்படும் என்றும் கூறலாம், பகை நீச ராசிகளில் வரும் போது, அசுபபலனும் பலவகை நோய்களும் உண்டாகும் எனச் சோதிடக் களஞ்சியம் கூறுவதால், மேற்படி சூரியன் கெட்ட பலனும் தரவேண்டிய மாதங்களில் நட்பாட்சி உச்சம் பெற்றால், அவையும் நல்ல பலனாக மாறும் எனலாம். எனவே, பெரும்பாலான மாதங்கள் நன்மையே தருவன ஆகும்.

அடுத்து பகை நீசம் என்னும் ராசிக்குரிய மாதங்களில் நல்ல பலன் தரவேண்டியிருந்தால் அவை குறைத்தும். தீயபலன் ராசிகளில் இருந்தால் கொடிய பலன்கள் அதிகமாகவும் நடக்கும் என்று, அந்தந்த மாதபலனை யூகித்து அறிய முடியும். அடுத்து, 12 ராசிகளிலும் ஒரு கோள் தரவேண்டிய பலன்கள் கீழ்க்கண்ட தாரதம்மியப்படி மாறும்—

1. நல்ல பலன் தரவேண்டிய ராசிகளில் கோள் வந்து நட்பாட்சி உச்சம் பெற்றும் இருந்தால், நல்ல பலன்கள் அதிகமாகும். இதுவே பகை நீசம் பெற்றால், நல்ல பலன்கள் குறையுமேயன்றி இல்லாமல் போகாது,

2. அடுத்து, அவை கெட்ட பலன் தரவேண்டிய ராசிகளில் வந்து, அவை பகை நீசமானால், கெட்ட பலன்கள் அதிகமாகும். இதே சூழ்நிலையில், இவை நட்பாட்சி உச்சம் பெற்றால் கெட்ட பலன்கள் குறையுமே அன்றி அறவே இல்லாமல் போகாது, எப்படியும் கெட்ட பலனை அனுபவிக்க வேண்டியது தான் வரும். இந்த மதிப்பீட்டு முறையை 9 கோள்கள் விஷயத்திலும் பொது விதியாகக் கொள்ளவும்.

அத்தியாயம் 14

# சந்திரனின் ராசிபலன்கள்

சந்திரன் ஜென்ம ராசிக்கு 1.3,6.7,10,11ஆம் ராசிகளில் சுபபலனும் மற்றவற்றில் அசுப பலனும் தருகிறான்.

## 1. ஜென்ம ராசிக்கு சந்திரன் வரும் போது—

உயர்போகம், தேகசௌக்யம், சந்ததி விருத்தி தந்திர மந்திர சித்தி, வாகன யோகம், பெரியோர் நேசம், பதவி, உயர்வு, ராஜ யோகம், மனத்திருப்தி, பணவரவு, உடல் ஒளி பெறல் போன்றவை ஏற்படும். பல பயணங்கள் ஏற்படும். பல சாத்திரங்களில் ஆராய்ச்சியும் தேர்ச்சியும் ஏற்படும். புத்தி சாதுரியம் வாக்கு வன்மைகள் ஏற்படும். பாக்ய விருத்தி உண்டாகிறது. வேளா வேளைக்குத் தரமான உணவும் (போஜன சுகம்) கிடைக்கும். சுகந்த பரிமள வாசனாதி திரவியங்களும் சேரும். குடும்ப சுகத்தில் திருப்தி ஏற்படும். புத்தாடை அணிகலன்கள் முதலியவை அணிவார். மொத்தத்தில் ஜென்ம ராசியில் வரும் சந்திரன் சுபபலனையே தருவான்.

## 2, ஜென்ம ராசிக்கு 2-இல் சந்திரன் வரும்போது—

போஜன சுகம், தனலாபம், குடும்பத்தில் நிம்மதி, குடும்ப சுகம் ஆகியவை குறையும். மனைவி மக்களுக்கு அரிஷ்டம் அல்லது தொல்லை ஏற்படும். சிறை வாசம், துன்பம் போன்றவை உண்டாகும். மனக்கஷ்டம் அதிகமாகும். வீட்டில் கருப்பவதி ஒருத்தி இறந்த தோஷத்தால் துன்பம் தனநாசம்ஏற்படும். தோல்விகள் காணும். மகிழ்ச்சி குறையும். கல்வியில் தோல்வி உண்டாகும். மான கௌரவ பங்கமும் ஏற்படும், வீண் பயம், உடற் சோர்வுகள்

உண்டாகும். எல்லாரிடமும் வீண் பகை, வாக்குவாதம் இதனால் கஷ்டம் ஆகியவை ஏற்படும். 'கண் நோய்கள் ஏற்படும். சந்திரன் இரண்டில் வரும் 2¼ நாளும் துன்பம் தான்,

3. ஜென்ம ராசிக்கு மூன்றில் சந்திரன் வரும் போது—

மனத்தெம்பும் மகிழ்ச்சியும் ஏற்படும். எல்லா வகையிலும் சுகமும் நிம்மதியும் ஏற்படும். பிள்ளைப் பேறுகள் ஏற்படும். ஆடையாபரணங்கள் சேரும். சந்ததிகள் மேல் ஆர்வம், புத்தித் தெளிவு ஆகியவை ஏற்படும். தன்னம்பிக்கை கூடும். இந்த நாள்களில் மனைவியும் அதிகம் ஒத்துழைப்பாள். சிற்றின்ப சுகமும் பாக்ய விருத்தியும் ஏற்படும். சகோதர நன்மை உண்டாகும். எல்லா முயற்சிகளிலும் வெற்றி ஏற்படும். தனலாபமும் பெருகும். புதிய நண்பர்களின் சேர்க்கையும் அவர்களால் உதவியும் உண்டாகும். சத்துரு ஜெயமும் உண்டாகும். மனத்தில் தைரியமும் புதிய உற்சாகமும் உண்டாகும். இந்த, மூன்றில் சந்திரன் எல்லா வகையிலும் நன்மையே தருவான்.

4. ஜென்ம ராசிக்கு நான்கில் சந்திரன் வரும்போது—

வீட்டில் நிம்மதி குறையும். பொருள்கள் களவுபோகும். மன நிம்மதி கெடும், வயிற்று நோய், வயிற்றுப் போக்கு போன்ற நோய்கள், உண்டாகும். தாய்க்கு அரிஷ்டம் ஏற்படும். அல்லது உடல் நலம் கெடும், வாகன சுகம் குறையும். எல்லாவற்றிலும் ஒரு பயம் உண்டாகும். தன நாசம், தரித்திரம் ஏற்படலாம். தூக்கம் குறையும். எல்லாக் காரியங்களும் தடைப்படும். நீரிலே ஆபத்தும் உண்டாகும். நான்கில் சந்திரன் எவ்வகையிலும் துன்பமே தருபவன்.

## 5. ஜென்ம ராசிக்கு ஐந்தில் சந்திரன் வரும்போது—

சந்ததிக்கு அரிஷ்டம் அல்லது நோய் ஏற்படும். புத்திக் கலக்கமும் உண்டாகும். பிறருடன் பகைகள் ஏற்படும். மனைவிக்குக் கருச்சிதைவும் ஏற்படலாம். எவ்வளவு திறமையுடம் செயல்பட்டாலும் முட்டாள் என்ற பெயர்தான் மிஞ்சும். கவலை அதிகமாகும். சோகம் மனக் கஷ்டம் போன்றவை உண்டாகும். பிறருடன் பகையும் வாழ்க்கையில் கீழ்நிலைக்குத் தள்ளப்படும். அதிர்ச்சியும் உண்டாகும். நோய்கள் பற்றி வருத்தலாம், பயணத்தில் தடங்கல் அல்லது விடுத்து ஏற்படலாம். பணவிரயம், அசீரண நோய், அந்தஸ்துக் குறைதல் ஆகியவை ஏற்படும் மன அமைதி இன்மை, தனக்கு வேண்டிய பொருள் ஏதாவது காணாமல் போதல் ஆகியவை யும் உண்டாகும் எப்படிப் பார்த்தாலும் ஜென்ம ராசிக்கு 5-இல் சந்திரன் தீய பலனே தருகின்றான்.

## ஜென்ம ராசிக்கு 6-இல் சந்திரன் வரும்போது —

எதிரிகள் பணிவர், எல்லா நலன்களும் உண்டாகும். நோய்கள் நீங்கும். ஆரோக்யம் கிட்டும். பயணசுகம் ஏற்படும். எல்லா வகையிலும் நல்லதே ஏற்படும். சந்திரன் தேய்பிறையாக ஆறில் வரும்போது, மேலும் மிகுதியாக நன்மையே ஏற்படும் தன வரவு கூடும். சத்ரு ஜெயம் உண்டாகும். நண்பர்களால் உதவிகள் ஏற்படும். தான் விரும்பியது எதுவாயினும் கிட்டும். பெயரும், புகழும் உண்டாகும். புதுப்பெண்கள் சினேகமும் அதனால் மகிழ்ச் சியும் உண்டாகும். தனக்கென்று சொந்த வீடும் ஏற்படும். இப்படி எவ்வகையிலும் சந்திரன் 6-இல் நன்மையே செய்வான்.

7. ஜென்ம ராசிக்கு 7-இல் சந்திரன் வரும்போது —

ஸ்த்ரீசுகம் கூடும். சாஸ்திரப் பயிற்சியில் தெளிவு ஏற்படும். வாகன போஜன சுகங்கள் உண்டாகும். பல வழிகளிலும் பணம் வரும். பெரிய மனிதன் என்ற பெயரும் ஏற்படும். தனக்கென்று ஒரு காதலி ஏற்பட்டு அதனால் மகிழ்ச்சி ஏற்படும். பேச்சின் இனிமை சாதுர்யம் இவற்றால் எடுத்த காரியங்கள் எல்லாம் கை கூடும் அரசாங்கத்தால் இலாபம் உண்டாகும். எல்லா விதத்திலும் பூரண சுகம் ஏற்படும். அந்தஸ்தும் உயரும். உறவினர் உதவியும் ஏற்படும். ஆபரண வகைகள் சேரும். புதுப் புது உடை வகைகள் கிடைக்கும். மனைவி மூலமும் நன்மை உண்டாகும். 7-இல் சந்திரன் இனியவனே. இதனால் நன்மையே ஏற்படும்.

8. ஜென்ம ராசிக்கு 8இல் சந்திரன் வரும் போது —

பல வகையிலும் உடல்நலம் கெடும். மூல காச நோய்கள் உண்டாகும். கோர்ட்டு வழக்கு, அதில் தோல்வி, சிறைவாசம் முதலியவையும் நேரும். களவு, திருட்டுத் தொழில்களில் ஈடுபாடும், அவற்றில் பிடிபட்டுத் தண்டனை அடைதலும் போன்றவை உண்டாகும். பிறருக்கு தீமை நினைத்தல், தன் பணிவின்மையால் பல வழியிலும் கஷ்டம் போன்றவையும் ஏற்படுகின்றன. நீதி நேர்மையின்றி நடந்து கொள்வார். வயிற்றுப்போக்கு நோய் உண்டாகும். வாகன சுகம் குறையும். மனைவி கலகத்தால், தனக்குப் பாசமான பந்து ஜனங்களை இழப்பார். இவர் இஷ்டத்திற்கு மாறாகவே எல்லாம் நடக்கும். திடீர் நடுக்கமும் பயமும் ஏற்படும். மாரக தசை நடந்தால் மரணமும் ஏற்படலாம். அசீரண நோய், மனப் பயித்தியம், பிறருடன் சில்லறைச் சண்டைகள், சர்ப்ப தோஷத்தால் கண்டம் முதலியவையும் உண்டாகலாம்.

இந்த 8-ஆம் இடம் ஒன்றில்தான் மற்ற இடங்களை விடச் சந்திரனுக்கு மிகக் கொடிய பலன்கள் கூறப் பட்டுள்ளன. இதனை 'சந்திராஷ்டமம்' என்று வழங்குவர். எனவே, இந்த $2\frac{1}{4}$ நாளும் எச்சரிக்கையோடு, நிதானத்தைக் கையாள வேண்டும் எனலாம்.

## 9. ஜென்ம ராசிக்கு 9-இல் சந்திரன் வந்தால்

இங்கு, தமிழ் நூல்கள் நல்ல பலன்களைக் கூறுகின்றன. நாமும், அதைப் பின்பற்றியே எழுதுகிறோம்.

எல்லா வகையிலும் நற்பலன்களே ஏற்படுகின்றன. பாக்ய விருத்தியும் ஏற்படும். தெய்வ பக்தி, தெய்வ நம்பிக்கை ஆகியவை ஏற்படும். இந்த நாள்களில் மனைவி கருத்தரிப்பாள்; அல்லது குழந்தை பிறக்கும். காம இச்சை அதிகமாகும். புகழ் ஓங்கும். புண்ணியக் காரியங்களில் ஈடுபாடும் ஏற்படும். கோயில் குளப் பணிகளில் இறங்கு வார். வாழ்க்கையில் நல்ல திருப்பங்கள் ஏற்படும். இந்தக் கால கட்டங்களில் சுகம், சந்தோஷம், உல்லாசப் பயணங்கள் எல்லாம் ஏற்படும். ஆனால் வடமொழி நூல் களின் கொள்கைப்படி அசுப பலன்களே பல வழியிலும் கூறப்பட்டுள்ளன. அதனால், நடுநடுவே சுவையும் ஏற்படும். இருப்பினும், சமாளிக்கப்பட்டு நிகர நற்பலனே ஏற்படும் என்று கொள்ள வேண்டும்.

## 10. ஜென்ம ராசிக்கு பத்தில் சந்திரன் வரும்போது—

எல்லாக் காரியங்களும் அனுகூலமாகும், அரசு ஆதரவு, முக்கியஸ்தர்களின் உதவி, உத்யோக வாய்ப்பு, சாஸ்திர, தந்திர, மந்திர வித்தைகளில் தேர்ச்சி ஆகியவை உண்டாகும். சுய நம்பிக்கை, தேக திடம், வீரம், தைரியம் எல்லாம் ஓங்கும். இந்திரபோகம் உண்டாகும். இவர் பண்டிதனாவார். புத்தித் தெளிவு ஏற்படும். முன்னேற்ற வாய்ப்புகள் எதிரில் வந்து தோன்றும். வாழ்க்கையில்

நல்ல திருப்பங்கள் ஏற்படும். தீர்த்த யாத்திரைகள் ஏற்படும். நல்ல பயன்தரும் சத்தான காரியங்களில் ஈடுபடுவார். புகழ் ஓங்கும். விருப்பங்கள் கைகூடும். பிறரைக் கட்டளை இடுகின்ற வாய்ப்பும் ஏற்படும். மரியாதையும் அந்தஸ்தும் உயரும். ஆனால் இவர் எல்லாரையும் எதிர்த்து விரோதித்துக் கொள்வார். முடிவில், எல்லாக் கஷ்டமும் நீங்கி, ஆரோக்யம் உண்டாகும். எனவே, சந்திரன் 10இல் நல்லவனே.

## 11. ஜென்ம ராசிக்கு 11 இல் சந்திரன் வரும் போது—

தன லாபமும், எல்லா வகையிலும் நன்மையும் ஏற்படுகிறது. பெண்களால் இலாபமும் விரும்பிய ஸ்த்ரீபோகமும் கிடைக்கலாம். மரணப் படுக்கையில் இருந்தாலும், மாரக தசை இல்லை என்றால், இந்த நாள்களில் நோய் நீங்கிச் சுகம் ஏற்படும். பிறருக்கு உபகாரம் செய்வார். கல்வியில் வெற்றி அடைவார். பெரும் சந்தோஷம் உண்டாகும். போஜன சுகம் ஏற்படும். பிரிந்துவிட்ட குடும்பத்தினருடன் சேர்தல், அதனால் மகிழ்ச்சி ஆகியவையும் ஏற்படும். எல்லா வகையிலும் சந்தோஷமே ஏற்படும். 11 இல் சந்திரன் மிக நல்ல பலனே தருவான்.

## 12. ஜென்ம ராசிக்கு 12 இல் சந்திரன் வரும் போது—

நிம்மதி கெடும். கட்டாயமாக, சொந்த வீடு, ஊர் இவற்றைவிட்டு வெளியேற வேண்டியது வரும், வீண் செலவு, பணமுடை ஆகியவை ஏற்படும். பெண்களால் பண விரயமும் உண்டாகும். எல்லா வகையிலும் நஷ்டமும் உண்டாகும். வேளா வேளைக்கு சாப்பாடும் கிடைக்காது. கிடைக்கும் உணவும் வகையாக இருக்காது. கெட்ட வழிகளில் பணம் செலவாகும். கோபத்தால் வம்பு தும்பை விலைகொடுத்து வாங்குவார்; இவரது, அறிவும் மழுங்கும். இந்த நாள்களில் மூளை சரியாக வேலை செய்யாது.

சோப்பேறித் தனம் அதிகமாகி, வாழ்க்கையில் அடிமட்டத்திற்கு தள்ளப்படும் துரதிர்ஷ்டமும் நேரலாம். பொறாமை மேலிடும். பல வழிகளிலும் தீமையே அதிகமாகும். தீராத சோகம் உண்டாகும். பந்து ஜனங்களுடன் சண்டையோ வெறுப்போ உண்டாகும். குறிக்கோளின்றிக் கண்டபடி திரியவும் நேரும். 12 இல் சந்திரன் அசுப பலனே தருகிறான்.

## சந்திரனை வைத்து தினப்பலன் பரிமாணம்

**தினப்பலன்:** சந்திரன் $2\frac{1}{4}$ நாள்கள் ஒரு ராசியில் தங்குகிறான். எனவே, ஜென்ம ராசிக்கு 1,3,6, 7, 9, 10, 11, ஆக 7 ராசிகளில் $7 \times 2\frac{1}{4}$ ஏறக்குறைய ஒரு மாதத்தில் 16 நாள்கள் இவன் விட்டுவிட்டு நல்ல பலன்களைத் தருகிறான். மற்ற 8 கோள்களும் மொத்தத்தில், வெவ்வேறு ராசிகளில் அதே சமயத்தில் நல்ல பலனோ கெட்ட பலனோ தருவார்கள். அவர்கள் குறிப்பிட்ட நாளில் தரும் மொத்தப் பலனை $\frac{8}{9}$ என்று வைத்துக் கொண்டால், சந்திரன் அன்றாடம் தரும் பலன் நல்ல பலனாக இருந்தால், அதை $\frac{1}{9}$ என்று வைத்துக் கொண்டால், மற்ற எத்தனை கிரஹங்கள் சுபபலன் தருமோ, அதனுடன் இதையும் சேர்த்து நல்லதா கெட்டதா என்று தெரிந்துகொள்ளலாம். உதாரணமாக 24-8-1991 ஆம் தேதியன்று சிம்ம ராசியின் பலனைப் பார்ப்போம்.

9 கிரஹங்களும் சேர்ந்து தரும் சுபபலன் ஒன்று என்று வைத்துக்கொண்டால், ஒவ்வொரு கிரகமும் தரும் சுபபலன் ஒன்றை ஒன்பதால் வகுத்துக் கண்ட பலனே அவையாகும். அதாவது $\frac{1}{9}$ ஆகும். மேற்கண்ட தேதியில் எத்தனை கோள்கள் சுபபலன் தருமோ, அத்தனை $\frac{1}{9}$ பங்கு சுபபலன் ஏற்படும்.

மேற்கண்ட தேதியில் சூரியன் 1 இல் அசுபன்; குரு ஜென்மத்தில் அசுபன்; செவ்வாய் 2 இல் அசுபன்; புதன் 12 இல் அசுபன்; சுக்கிரன் ஜென்மத்தில் அசுபன்; சனி 6 இல் சுபன், ராகு 5 இல் அசுபன்; கேது 11 இல் சுபன் இதிலிருந்து சந்திரன் நீங்கலாக 8 கோள்களில் 7 கோள்கள்

அசுபபலன் தருகின்றன. எனவே, காலம் சிரமம்தான். இப்பொழுது, சந்திரன் நீங்கலாக சுபபலன் கேது மற்றும் சனி ஆகியவர் மட்டும் தருவதால், சுபபலன் $2+\frac{1}{9}$ ஆகும். அதாவது $\frac{2}{9}$ ஆகும். இதனுடன், இப்பொழுது சந்திரன் தரும் பலனையும் சேர்த்துக்காண வேண்டும். சந்திரன் 24-8-1991 பகல் 12 மணி முதல் 27-8-1991 காலை 9 மணிவரை மேற்கண்ட சிம்ம ராசிக்காரருக்கு, ஜென்ம ராசிக்கு 7 இல் சுபபலன் தருகின்றான். எனவே, இந்த நாள்களில் இவன் தரும் சுபபலன் அளவு $1\times\frac{1}{9}=\frac{1}{9}$ ஆகும், இனி மேற்கண்ட மற்றதையும் சேர்க்க $\frac{2}{9}+\frac{1}{9}=\frac{3}{9}$ அளவு இந்த நாள்களில் சுபபலன் ஏற்படுகிறது. எனவே மற்ற நாள்களைவிட இந்த நாள்கள் நல்ல பலனுள்ளவை என்று கொள்ளலாம். (ஆனால், மொத்தத்தில் பார்க்கும்போது, மீதி 6 கோள் அசுபமானதால், $\frac{2}{3}$ பங்கும் கஷ்டமும், $\frac{1}{3}$ பங்கு சுகமும் இந்தநாள்களில் ஏற்படும் என்றே கொள்ளவேண்டும்) மற்ற வருஷக்கோள் (சனி, குரு, ராகு, கேது) மறைக்கோள்கள் (சூரியன், சுக்ரன், புதன், செவ்வாய்) இவை தரும் மொத்தப் பலனுடன், சந்திரன் சுபபலனைக் கூட்டினால் அன்றைய தினம் மற்றத் தினங்களைவிட நன்மைதரும் ஆனதால், அன்று தினப்பலன் நல்லது என்று கொள்ளவேண்டும். அன்று சந்திரன் கெட்ட பலன் தரும்படி அமைந்தால் அது மற்றைய தினத்தின் நல்ல பலன் அளவில் குறையும். ஆதலால், அன்றைய தினப் பலன் அசுபம் அல்லது கெட்டது என்று கொள்ள வேண்டும். இப்படி மதிப்பிட்டு அன்றாட சுபம் அல்லது அசுபபலனை நம்மால் அறிய முடியும். நான்கிற்கு மேற்பட்ட கோள்கள் சுபத்துவமாக அமைந்தால் சந்திரனையும் சேர்க்க, $\frac{5}{9}$ பரிமாணம் சுபம் வந்து விடும். ஆகையால் அன்று நிச்சயம் நமக்கு வெற்றி, நன்மை என்று அறிந்து கொள்ளலாம்.

இனி ஜென்ம நக்ஷத்திரத்திலிருந்து சந்திரன் இருக்கும் நக்ஷத்திரம் 2, 4, 6, 8. 9 என்னும் நக்ஷத்திரங்களில் வந்தால், அது நன்மை தரும் (இவை முறையே சம்பத்து க்ஷேமம், தெய்வானுகூலம், மைத்திரம் பரம மைத்திரம்

எனப்படும்.) எனவே, சந்திரன் ஒரு ராசியில் உள்ள $2\frac{1}{4}$ நாளி லும் எந்த ஒரு அல்லது இரண்டு நன்மை தரும் என்று நாம் காண முடியும். மேற்படி 24-8-1991 இல் சந்திரன் அவிட்டத் தில் இருப்பான். உதாரண சிம்ம ராசிக்காரர் பூரம் என்று கொண்டால், அவிட்டம் இரண்டாம் பரியாயத்தில் க்ஷேம தாரை ஆகிறது. எனவே, அவிட்டச் சந்திரன் உள்ள 25-8-1991 பிற்பகல் வரை இவருக்கு மற்ற நாள்களைவிட நல்ல பலன் உண்டு. அடுத்து சதயம் வரும்போது இது 5 ஆவது பிரத்தியக்கு தாரையாகும். எனவே 25-8-1991 பிற் பகல் முதல் சந்திரன் 7 இல் சுபபலன் தந்தாலும், நக்ஷத்திர சாரப்படி அசுபன் ஆகிறான். மீண்டும், 26-8-1991 பிற்பகல் முதல் 27-8-1991 காலை 9 மணி வரை இவன் 6 ஆவது தெய்வானுகூல தாரை பூரட்டாதியில் இருப்பான். எனவே, இது காலம் சுபபலன் தருவான். ஆக, இந்தக் கால கட்டத் திற்குள் சுபத்துவம் அதிகம் உள்ள நாள் 24-8-1991 பிற் பகல் முதல் 25-8-1991 பிற்பகல் வரை. 26-8-1991 பிற்பகல் முதல் 27-8-1991 முற்பகல் 9 வரை, இந்தச் சிம்ம ராசிக் காரருக்கு சுபபலன் கூடும் என்று கொள்ள வேண்டும்.

இதே போல், சந்திரன் கெட்ட பலன் தரும் ராசிகளில் சஞ்சரிக்கும்போதும் இவன் செல்லும் நக்ஷத்திரம் ஜென்ம நக்ஷத்திரத்திற்கு சுபத்துவமான 2, 4, 6, 8, 9 ஆவது நக்ஷத்திரமாக அமைந்தால், அன்றைய மொத்த கெட்ட பலன் குறைவாக இருக்கும் என்று கொள்ளலாம். நக்ஷத்திரத்தைக் கொண்டு நல்லது கெட்டதை அறியும் முறையே தாராபலன் அல்லது நக்ஷத்திர பலன் என்றா கிறது. இதனாலேயே—

''தேதேவ லக்னம் அதினம் தவேத தாராபலம் சந்திர பலம் தேதேவ'' என்ற சுருதி வாக்கியம் வந்தது.

தாரா பலனுடன் திதி, வாரம், நக்ஷத்திரத்தின் அடிப் படையில் சந்திர பலன் காணும் முறை, பின்னால் விளக்கப்

கோ—10

படும். எனவே, இரண்டும் நன்றாய் அமைந்தால் அன்று 'சுபதினம்' அல்லது 'நல்ல தினம்' என்று கொள்ளவேண்டும்.

அத்தியாயம்—15

## செவ்வாயின் ராசி பலன்கள்

செவ்வாய், ஜென்ம ராசிக்கு 3, 6, 11-ஆம் ராசிகளில் வரும்போது சுபபலனும், மற்ற ராசிகளில் அசுப பலனும் தருகின்றார். இனி விரிவான பலனைக் கவனிப்போம் :-

1) ஜென்ம ராசியில் செவ்வாய் வரும்போது—

பலவகையிலும் பிறரால் குற்றம் சாற்றப்பட்டு அவதிப் படுவார். இவர் குணமும் கெட்டுப் போகிறது. உடலில் ரணகாயம் ஏற்படுகிறது. கண்ணோய் ஏற்படுகிறது. வாத சூலை ரோகங்களும் உண்டாகின்றன. முக அழகும் கெடு கின்றது. மன வருத்தம் ஏற்படுகிறது. நெருங்கிய உறவின ரிடமிருந்து பிரிய வேண்டியதும் வருகிறது. இரத்தம் கெட்டுப் போகிறது. அதனாலும் பலவித நோய்கள் ஏற் படுகின்றன. பாம்பு விஷம் தீண்டும் பயம், தீ, ஆயுதம் இவற்றால் ஆபத்து, விபத்துகள். தனநாசம், காசநோய் போன்ற தீய பலன்களும் உண்டாகின்றன.

2) ஜென்ம ராசிக்கு 2-இல் செவ்வாய் வரும்போது

பணம், பொருள் நஷ்டமாகிறது. ஏதாவது வகையில் கண்டமும் உண்டாகும். வீண் பழியோ கௌரவப் பங்கமோ ஏற்படும். கண் நோய் அல்லது முக ரோகம் ஏற்படும். முக அழகு கெடும். மனவருத்தம் ஏற்படுகிறது. பூமி,பயிர்களில் நஷ்டம் ஏற்படுகிறது. குடும்பத்தில் மனைவி மக்களுடன் சண்டை சச்சரவு ஏற்படுகிறது. கல்வியில்

தோல்வி உண்டாகும். கடுமையான சுரம், கொடுஞ் சொல்லால் பிறருடன் பகை போன்றவை ஏற்படும். அரசர், அல்லது பகைவர் மூலம் கஷ்டம் அல்லது பயம் உண்டாகும். பலருடனும், சில்லறைச் சண்டைகள் ஏற்படும். வீட்டில் பொன் பொருள் போன்றவை களவு போகும், இவன் இந்திரனுக்குச் சமானமானவனாக இருந்தாலும் இந்தக் கஷ்டங்களில் இருந்து தப்ப முடியாது. குடும்ப நிம்மதியின்மை, மன நிம்மதி இன்மை இரண்டும் ஒரு சேர அனுபவிக்க வேண்டியதும் வருகிறது.

### 3) ஜென்மத்திற்கு 3-இல் செவ்வாய் வரும்போது—

எல்லாவிதத்திலும் நன்மை உண்டாகிறது. விவாகம் நடக்கும். சந்ததி விருத்தி ஏற்படும். ஆயுள் விருத்தி ஏற்படும், பயிர், மனை இவற்றால் இலாபம் ஏற்படும். ஆடை ஆபரணங்கள் சேரும். பால் மாடுகள் நிறையப் பால் தரும். வேதம் கல்வி இவற்றில் தேர்ச்சி ஏற்படும். வீரம் பெருகும். சகோதரரால் நன்மை ஏற்படும். எதையும் செய்து முடிக்கும் துணிச்சல் உண்டாகும். எதிலும் வெற்றியும் சந்தோஷமும் உண்டாகும். ஆபரண வகைகள் சேரும். கீழ்நிலையில் உள்ளவர்களால் நன்மைகள் உண்டாகும். அவர்கள் மூலம் நிறையப் பணம் வரும். உடலில் ஒளியும் பொலிவும் அழகும் பெருகும். சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லாமல் தேவையான உணவுப் பொருள்கள் வீட்டில் நன்கு நிறைந்திருக்கும். தைரியம் ஓங்கும். மொத்தத்தில் எல்லா வகையிலும் நன்மையும் சந்தோஷமும் ஏற்படும் அ॰மப்பு இது.

### 4) ஜென்ம ராசிக்கு 4-இல் செவ்வாய் வரும்போது—

பலவிதக் கஷ்டம் மனச் சங்கடம் போன்றவை ஏற்படும். பொருள் விரயமாகும். இரத்தவெக்கை நோய் கௌரவ பங்கம் போன்றவை உண்டாகும். வீட்டின் பொன் பொருள்கள் திருடு போகும். அக்கினி பயம் வாகன

விபத்துகள் போன்றவை உண்டாகும். கூரிய ஆயுதங் களால் வெட்டுப் படலும் ரண காயங்களும் ஏற்படலாம். பந்து ஜனங்களை விரோதித்துக் கொள்வார். வீட்டில் கலகம் உண்டாகும். தாய்க்கு அரிஷ்டம் அல்லது நோய் உண்டாகும். வீட்டில் விரோதம் காரணமாக வீட்டை விட்டு வெளியேற வேண்டியதும் வரும். சிலருக்கு எதிராகக் கபடம், வஞ்சனை சூழ்ச்சிகள் அதிகமாகும். புத்திக் கலக்கம் உண்டாகும். பதவி தகுதி இவை பறி போகும். வயிற்று நோய், அசீரணம், சீதபேதி போன்ற நோய்கள் தோன்றும். மிகவும் நெருங்கிய உறவினரின் இறப்பால் துக்கமும் சோகமும் தோன்றும். வீட்டில் உணவுப் பொருள் களுக்கும் அத்தியாவசியப் பண்டங்களுக்கும் பஞ்சம் ஏற் பட்டுப் பற்றாக்குறையாகும். வறுமை மேலிடும். பகை வர் அதிகமாவார்கள். அசுப காரியங்களில் தான் மனம் சதா ஈடுபட்டுக் கொண்டிருக்கும்.

5) ஜென்ம ராசிக்கு 5 இல் செவ்வாய் வரும்போது—

பலவகையிலும் நஷ்டம் ஏற்படும். கண்டமும் ஏற்படும். புத்திக் கலக்கம், மன சஞ்சலம் ஆகியவையும் ஏற்படும். பிறருடன் எளிதில் சண்டைபோட்டுக் கொள்வார். இதனால், வேண்டாதவர்களும் பகைவர்களும் அதிகமாவர். அக்கிரமும் அதிகம் செய்வார். எதற்கும், சின்ன விஷயங் களுக்குகூட கோபம் பொத்துக்கொண்டு வரும். கோபத்தால் காரியமெல்லாம் கெடும். புத்திர நாசம், சோகம் ஆகியவை யும் ஏற்படலாம். தீய காரியங்களில் ஈடுபடுவார். தரித்திரம் ஓங்கும். பணமுடை ஏற்படும். மனைவின் உடல்நலம் கெட்டு கருச் சிதைவு முதலியவை உண்டாகலாம். தகாத ஆசைகள் தோன்றும். கெட்ட சகவாசம் ஏற்படும். அதனால், பெயர், மரியாதை ஆகியவை கெடும். உறவினர்களுடன் பூசல் உண்டாகும். உடல் புஷ்டி குறைந்து பலவீனமாகிப் பல வகையான நோய்கள் உண்டாகும். சாமர்த்தியமும் செயல் திறனும் குறையும். தன நாசம் ஏற்படும். வேளைக்கு உணவு

கிடைக்காது. வேளையற்ற வேளையிலும் தரக் குறைவான உணவுமே தான் கிடைக்கும் விபரீத. ஆசைகள் தோன்றும். சத்துருபீடை, தொல்லை அதிகமாகும். பலவகையில் 5 இல் செவ்வாய் கெட்டபலனையே தரும்.

6) ஜென்ம ராசிக்கு 6 இல் செவ்வாய் வரும்போது—

தன தானிய விருத்தி, பொன் நகை, புதிய ஆடை முதலியவை சேர்தல் போன்றவை ஏற்படும். எல்லாக்காரியங்களும் வெற்றி அடையும். எல்லாத் துறைகளிலும் இலாபம் ஏற்படும். ஆனந்தம் பொங்கும். சந்துரு ஜெயமும் ஏற்படும் சுபகாரியங்கள் நடக்கும் கடன்களும் நோய்களும் நீங்கும். ஆரோக்கியம் ஏற்படும். இதுவரை இருந்து வந்த சண்டை சச்சரவுகள் நீங்கும். தகராறுகள் வழக்குகள் எல்லாம் சாதகமாக முடியும். பிறருக்கு தான தருமம் செய்யலாம். பொருளாதாரம் ஓங்கும். கல்யாணமாகாதவர்களுக்குத் திருமணம் கைகூடும். புத்திரபாக்யம் உண்டாகும் பூமி பயிர்விளைச்சல் இவற்றால் இலாபமும் பெருகும். காம வேட்கை பெருகும் அதுவும் நினைத்தபடி நிறைவேறும். பசி அதிகமாகும். செரித்துக் கொள்ளும் சக்தியும் அதிகமாகும். வேளா வேளைக்கு வக்கணையாக உணவும் கிடைக்கும். மற்றவர்களுக்கு நேரும் நன்மை தீமைகளைப் பற்றிக் கவலைப் படாமல் தலை நிமிர்ந்து நிற்பார். பகைவரால் ஏற்பட்ட அச்சம் தீரும். அந்தஸ்து புகழ் ஆகியவை ஓங்கும். எல்லா வகையிலும் செவ்வாய் ஆறில் நன்மையே செய்வார்.

7) ஜென்ம ராசிக்கு 7 இல் செவ்வாய் வரும் போது—

பண வரத்துக்குறையும். பற்றாக்குறையும் முடையும் அதிகமாகும். வறுமை மேலிடும். உணவுப் பற்றாக்குறை அகால போஜனம் போன்றவை உண்டாகும். பற்று ஜன விரோதம் கணவன் மனைவியரிடையே சண்டை, சகோதரர்களுடன் பூசல் ஆகியவை உண்டாகும். கண்நோய், வயிற்று

நோய்கள் உண்டாகும். நெருப்பு, ஆயுத எந்திர விபத்துகள் போன்றவையும் ஏற்படும். உடல் சோர்வு, கை கால் குடைச்சல், வலி போன்ற சுகவீனங்கள் தோன்றும். கெட்ட எண்ணம் தலைதூக்கும். மனைவிக்கு நோய் கண்டமும் ஏற்படலாம். தவறான நடத்தைகளால் ஒரு பக்கம் அவமானமும் மற்றொரு பக்கம் உடல் நலக் கெடுதலும் உண்டாகும். சேர்த்துவைத்த பணமும் அழியும். குடும்பம் மற்றும் மனைவியைப் பிரிய வேண்டியதும் வரும். காச நோய் போன்ற நோய்கள் ஏற்படும்.

இந்த ஒரு ராசியில், இடத்தில்தான் செவ்வாய் எல்லா ராசிகளையும்விட அதிகமான தீய பலனைத் தருகின்றான். குடிப்பழக்கம், சில்லறைச் சண்டை, மான கௌரவ பங்கம், வெகு ரோகம், சிறைகாவல், மாரக தசையுள்ளவர்களுக்கு மரணமும் ஏற்படுவது போன்ற தீராத பெருத்த துன்பங்களை ஏழில் வரும் செவ்வாய் தருகிறான் என்பதைப்புரிந்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

8) ஜென்ம ராசிக்கு 8 இல் செவ்வாய் வரும்போது—

பலவகையிலும் கஷ்டமும் நஷ்டமும் உண்டாகும். காரியத் தடங்கல், நிர்பந்தமாக வெளிநாட்டு வாசம் (நாடு கடத்தப்படல்) சிறைப்பயம், சிறை வாசம், நோய், கடன் இவற்றால் தீராத கஷ்டம் ஏற்படலாம். தனவிரயம், மான பங்கம் போன்றவையும் ஏற்படும். கூரிய ஆயுதத்தால் தாக்கப்படுவர். பெண்களுக்குச் சமையல் வேலையின்போது தீக்காயம், அரிவாள்மனை வெட்டுப் போன்றவற்றால் ரணம் அல்லது காயம் ஏற்படும். வீண் பழி சாட்டப்படுவர். தூண்டிலில் மாட்டிக் கொண்ட மீன் போல ஏதாவதுபெரிய சிக்கலில் மாட்டிக் கொண்டும் தீராத கஷ்டத்திற்கு ஆளாகலாம். எல்லாம் அழாத குறையாகத்தான் இருக்கும். மனைவிக்கும் கண்டம் ஏற்படலாம். ஆயுள் க்ஷீணமடையும். மலம், சிறுநீர் சம்பந்தமான நோய்கள் ஏற்படலாம். உடல் ஒளி கெட்டுப்போகக் கூடும். வழக்கு வியாச்சியங்களில் மாட்

டிக்கொண்டு. தோல்வி, பணவிரயம் போன்றவை ஏற்படும். எப்படிப் பார்த்தாலும் 8 இல் செவ்வாய் தீய பலன் களையே தருவான் எனலாம்.

9) ஜென்மத்திற்கு 9 இல் செவ்வாய் வந்தால்—

இதற்குத் தமிழ் நூலான ஜோதிடக் களஞ்சியம் சுப பலனே கூறுகிறது. அதன்படி, ஆடையாபரணாதிகளின் சேர்க்கை திருமணமாதல், மக்கட்பேறு, பால் வளம் (பால் மாடுகளின் செழிப்பு) கால்நடைச் செல்வம், போஜன சுகம் ஆகியவை ஏற்படும்.

வடமொழி நூல்களின்படி மரியாதைக் குறைவு சரீர பீடை, உடல் வலிமை குறைதல், பணக் கஷ்டம், தரித்திரம் பித்துரு, சகோதர பீடை, உத்தியோகத்தில் இஷ்டமில்லாத இடமாற்றம் முதலியவை ஏற்படும். ஆயுதங்களால் காயம் ரணம் போன்றவையும் ஏற்படும், அவமானம் மனக் கஷ்டம் ஆகியவை உண்டாகும். உடலில் பலவகைத் தாதுக்கள், திசுக்கள் கெட்டுப்போதலால்நடை மந்தமாகும். உடல் ஒளி கெட்டு விகாரமாகிறான். மனச் சங்கடம், பிறரின் தாக்குதல் போன்ற கஷ்டங்களும் ஏற்படுகின்றன. எனவே, 9 இல் செவ்வாய் நல்லது கெட்டது என்னும் இரண்டு வகைப் பலனும் தருவான் என்று கொள்ள வேண்டும்.

10. ஜென்மராசிக்குப் பத்தில் செவ்வாய் வரும் போது—

எல்லாக் காரியங்களும் தடையாகும். நோய்த் துன்பம் தோல்வி, ஆகிய பலவும் ஏற்படுகின்றன. பகைவரால் தொல்லை, ஆயுதங்களால் தாக்கப்படல், பல பொருள்கள் பொன், முதலியவை களவுபோதல், ரண காயம் ஏற்படல், கஷ்டங்கள் ஏற்படல் என்றும் இவை ஏற்படுகின்றன இவன் நடத்தையும் கெடும். இதற்கு வராஹமிஹிரர் நல்லதும் கெட்டதும் கலந்த பலனைக் கூறுகிறார். அதன்படி ஏதா

வது காரணத்தால் இது சமயம் வெளிநாட்டுப் பயணம் கிட்டும் தன வரவும் உண்டாகும். அதிக உழைப்பின்பேரில் முக்கியமான முயற்சிகள் வெற்றியாகும். நல்ல ஆதாயமும் கிடைக்கும் ஆனால் திடீர் எனப் பிறருடன் சண்டையும் உண்டாகும். தீவிபத்துகள் எந்திர விபத்துகள் ஏற்படும். குணக்கேடன் ஆகிறார். எல்லாம் கஷ்டமாக முடியும்.

எனவே, இங்கு செவ்வாய்க்கு நடுத்தரமான பலனே கொள்ள வேண்டும்.

## 11. ஜென்ம ராசிக்கு 11இல் செவ்வாய் வந்தால்—

எல்லாம் சுபபலனாகவே நடக்கும். நோய்கள் நீங்கி ஆரோக்கியம் உண்டாகும். வாழ்க்கையில் புதிய முன்னேற்றம் பலவும் ஏற்படும். பணம் வரவு அதிகமாகிப் பொருளாதாரம் ஓங்கும். ஆடை ஆபரணங்கள் வகைகளும், புதிய சௌகரியங்களும் சேரும். எல்லா முயற்சிகளும், காரியங்களும் வெற்றி அடையும், மகிழ்ச்சியும் கோலாகலமும் பல்கிப் பெருகும். திருமணம், மக்கட் பேறும் போன்றவையும் ஏற்படும். பூமி, வீடு, பயிர் இவற்றால் அதிக தன லாபம் ஏற்படும். ஆயுள் விருத்தியாகும். வெளி நாட்டுப் பயணம் அல்லது வாணிபத்தால் இலாபம் கிடைக்கும். தன் குண மேன்மை, செயல் திறன் இவற்றாலேயே கடினமான காரியங்களையும் சாதித்துக் கொள்வான். தான் ஆட்சி செய்யும், அல்லது கட்டளையிடும் பதவிகள் இவனுக்குக் கிடைக்கும். கஷ்டமில்லாத சுகவாழ்க்கையும் நடக்கும். சட்டுப்பாடற்ற சுதந்தர சுகமும் உண்டாகும். பலவகைப் பரிசுப் பொருட்கள், பொன், நகை, தனம் எல்லாம் கிடைக்கும். தேகம் திடம் பெறும். புத்தொளியும் பொலிவும் உண்டாகும். எல்லா வகையிலும் 11 இல் வரும் செவ்வாய் சுபபலனே தருவார்.

**12. ஜென்மத்திற்கு 12 இல் செவ்வாய் வரும்போது—**

வீண் விரயம், சந்தோஷமற்ற வெளிநாட்டு வாசம், (படை, உத்தியோக நிமித்தம் வெளிநாடு சென்று அங்கு எல்லா வகையிலும் கஷ்டம் அனுபவிக்க நேரலாம்.) குடும்பத்தினருடன் சண்டையும் உஷ்ண ரோசமும் ஏற்படும். விலங்குபூண நேரல், குற்றம் சாற்றப்படலும் ஏற்படலாம். கூரிய ஆயுதங்களால் வெட்டுப்பட்டு ரண காயங்கள் ஏற்படும். இடறி விழுதல், காலில் முறிவு அல்லது காயம் ஏற்படல், அங்க ஈனம்ஏற்படுதல், இரத்த வெக்கைப், பயண விபத்துகள். தீ விபத்துகள் முதலியவையும் நேரலாம். கண்ணோயால் ஏதாவது ஒரு கண்ணுக்குப் பார்வை போகலாம். வாத பித்த நோய்கள் ஏற்படலாம். கடன் அதிகமாகும். வறுமை மேலிடும். கவலை ஏற்படும். ஆண்மை வீரியம் குறையும். சொப்பன தோஷம் என்ற இரவில் இந்திரியம் தானே வெளிப்படும். ரோகம் ஏற்படக் கூடும். தூக்கம் கெடும். 12 இல் செவ்வாய் எல்லா வகை யிலும் அசுப பலனே தருவான் எனலாம்.

அத்தியாயம் — 16

# புதனின் ராசி பலன்கள்

புதன் ஜென்ம ராசிக்கு 4,6,8,10,11 என்னும் இடங் களில் வரும்போது சுப பலனும், மற்ற ராசிகளில் வரும் போது அசுப பலனும் தருகின்றான். இனி புதனின் விரிவான ராசி பலனைக் கவனிப்போம்.

**1. ஜென்ம ராசிக்குப் புதன் வரும்போது—**

புத்திக் கலக்கம் ஏற்படுகிறது. தரித்திரம், துன்பம் மேலிடும். உடலில் பித்தநோய் உண்டாகும். கண் நோய்

உண்டாகும். சகோதர விரோதம் உண்டாகும். இவன் பணம் அழிகிறது. வீண் பழி அல்லது அவச் சொல் வாங்க வேண்டியதும் வரும். சிறு சண்டைகள், சிறை பயம் போன்றவை ஏற்படும். யாத்திரையில் வழியில் கஷ்டம் ஏற்படும். ஒருவர்கூட இது சமயம் இவரிடம் அன்பு பாராட்ட மாட்டார்கள். சௌக்கியம் அழியும். கல்வியில் வெற்றி இரராது. குடும்ப விரோதம், அகால போஜனம், கூடா நட்பு ஆகியவை ஏற்படும். பகை, பூசல்கள் அதிக மாகும். பொன் பொருள்கள் களவு போகும். குறிக் கோளற்ற வீண் அலைச்சல்கள் ஏற்படும்.

2. ஜென்ம ராசிக்கு 2 இல் புதன் வரும்போது—

அவமானம் ஏற்படும். கௌரவ பங்கம் உண்டாகும். சொத்து கை நழுவும். வீண் பழியும் கவலையும் மிகும். கோபம் அதிகம் ஏற்படும். யாரும் மதிப்புத் தரமாட் டார்கள். யாருக்கும் இவர் அடங்க மாட்டார், இதனால் எல்லாருடனும் வீண் பகை உண்டாகும். கோள் சொல் பவர்கள், துர்ப்போதனை செய்பவர், இவர்களால் பணம் வீண் விரயமாகும். குடும்ப நிம்மதி குறையும். போஜன சுகம் குறையும். எல்லா விதத்திலும் தீய பலனே உண்டாகும். பிருஹத் சம்ஹிதையின் கருத்துப்படி இவ்வளவு அசுப பலன் இருந்தாலும், தனச் சேர்க்கை மட்டும் இருக்கும் என்று கூறப்படுகிறது.

ஆனால், தமிழ் ஏட்டு வாக்யப்படி இரண்டாமிட மாகிய இது ஓர் இடத்தில்தான் புதனால் மிகவும் கொடிய அசுப பலன் ஏற்படுகிறது. நோய், சண்டை, மாரக பயம், போன்ற தீமைகள் நேரும் எனப்படுகின்றது.

3. ஜென்ம ராசிக்கு 3 இல் புதன் வரும்போது—

சத்ருக்களால் பயம், குடுப்பச் சண்டை போன்றவை ஏற்படும். பணம் விரயமாகும். நஷ்டம் ஏற்படும்.

பிறருக்கு எவ்வகையிலாவது ஏவல் செய்து தன் உழைப்பு வீணாகும். சகோதரர்களுடன் கருத்து வேற்றுமைகள் உண்டாகும். தைரியக் குறைவு, கோழைத் தனம் ஆகியவை ஏற்படும். தன் வீட்டிலிருந்து வெளியேற வேண்டியதும் வரும். அரசர்களாலும், பகைவர்களாலும் பயம் ஏற்படும். நிர்பந்தமாகத் தன் வீட்டை விட்டு வெளியேற வேண்டியதும் வரும். பந்து ஜன விரோதம் ஏற்படும். இவர் வீட்டில் பொன் பொருள் மற்றத் திரவியமெல்லாம் களவு போகலாம். இவரின் துர்நடத்தையான செயல்களால் அவப்பெயர்கள் உண்டாகும். சொத்துகள் கை நழுவும். சிறைப் பயமும் உண்டாகும். 3 இல் புதன் எவ்வகையிலும் அசுப பலனே தருகின்றான்.

4 ஜென்ம ராசிக்கு 4 இல் புதன் வரும்போது—

புத்தி தெளிவு பெறும், ஆக்க பூர்வமான யோசனைகள் தோன்றும். நிம்மதியும் சுகமும் உண்டாகும். கல்வியில் வெற்றி பெறுவான். சுற்றத்தினர் சேர்வர் செயல் திறன் (Capacity) ஓங்கும். சாமர்த்திய சாலியாகவும் சுயகாரியப் புலியாகவும் இருப்பார். ஆனால் இது சமயம், இவரின் தாய் தந்தை ஆகியோர்க்கு அசௌக்கியம் ஏற்படுகிறது. பல வாகனங்கள் ஏற்படுகின்றன. கௌரவம் ஓங்கும். இவர் குணசாலியாகிறார், ஸ்த்ரீ சுகம் பூரணமாகக் கிடைக்கிறது. பலவகைப் பயணங்களும் (Picnic) அதனால் லாபமும் ஏற்படும் (Business travel) எல்லா விதத்திலும் சுகமும் நிம்மதியும் ஏற்படும். குடும்பத்திற்கு அதிகப்படியான வருமானம் கிடைக்கும். புகழும் பெயரும் மிகுதியாகும். எல்லா விதத்திலும் சந்தோஷம் பெருகும்.

5 ஜென்ம ராசிக்கு 5 இல் புதன் வரும்போது—

புத்திக் கலக்கம் ஏற்படும். மனைவிக்கு அரிஷ்டம் அல்லது நோய் ஏற்படும். பணவரத்துக் குறையும். தரித்திரம்

தாண்டவமாடும். எதுவும் நன்மையாக நடக்காது. கவலை மேலிடும். சோம்பேறித்தனம் அதிகமாகி, எதையும் செய்யாமல் விட்டு விடுவார்கள். பல நோய்கள் உண்டாகும் ஆயுள் க்ஷீண மடைகிறது, இவரின் பேச்சுக்கு மதிப்பிராது. வெறும் பேச்சாகிப் போய்விடும். எல்லாரையும் விரோதம் பண்ணிக் கொள்வான். இவரின் தாய் மாமனுக்கு நோய் உண்டாகிறது. சந்ததிக்கு அரிஷ்டம், நோய் உண்டாகும். குழந்தை இன்றி வேறு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ளவேண்டியதும் வரும்.மனைவிமக்களுடன் விரோதம் பண்ணிக் கொள்வான். அழகிய மனைவி அருகில் இருந்தும், அவளிடம் இன்பம் பெறமுடியாமல் போகும். பிறரிடம் நிஷ்டூரப்பட வேண்டியது வரும். மனச் சங்கடங்கள், தீராத கஷ்டங்கள் ஆகியவை ஏற்படும். இவரின் வீட்டிலேயே மனைவி. மக்கள் முதலியவர்கள் கலகம் செய்வார்கள். இப்படி எவ்வகையிலும் புதன் 5 இல் அசுப பலனே தருவான்.

6. ஜென்ம ராசிக்கு 6 இல் புதன் வரும்போது—

பலவகையான யோகங்கள் ஏற்படுகின்றன. அரசனைப் போல் இவருக்கு நிறையப் பணியாட்கள் அமைவர். ஆடை ஆபரண வகைகள் சேரும். தாய் மாமனுக்கும் நன்மை ஏற்படும். அரசாங்க உத்தியோகமும் ஏற்படலாம், கல்வியில் முன்னேற்றமிராது. ஆனால் தைரியசாலியாகவும் சூரனாக வும் ஆகிறார். எழுத்துத்தொழிலில் முன்னேற்றம் ஏற்படும். எல்லாக் காரியங்களும் வெற்றி அடைகின்றன. பெரும் புகழும், பொது மக்களிடையே மதிப்பும் ஏற்படும். எங்கும் இவருக்கு ஆதரவு பெருகும். தன விருத்தியாகிப் பொருளாதாரம் முன்னேறும். மரியாதையும் கௌரவமும் ஓங்கும். இவனுக்கு கௌரவப் பட்டங்கள் கிடைக்கும். சந்தோஷமும் மனநிம்மதியும் ஏற்படும். பரிசுப் பொருட்கள் பல வகையிலும் கிடைக்கும். புதன் மொத்தத்தில் 6 இல் பூரண சுப பலன் தருகிறான்.

**7. ஜென்ம ராசிக்கு 7 இல் புதன் வரும்போது—**

ஸ்த்ரீ சுகம் குறையும், வீட்டில் நிம்மதி கெடும். வறுமை மேலிடும். மனைவிக்கு உடல்நலம் கெடும். முக்கிய உறவினர் களின் மறைவு ஏற்படும். மனைவியின் பேச்சைக் கேட்டு நடக்க வேண்டியது வரும். களத்த தோஷம் உண்டாகும். பெண்களாயின், கணவன் மார்களுக்குக் கண்டம், மாரக பயம் இவை ஏற்படும். ஆண்களாயின் அவன் மனைவியின் உடல் ஆரோக்யமும் அழகும் கெடும். குட்ட நோய் கூட இவருக்கு ஏற்படலாம். இவருக்கும் உடல் நலம் கெடும். வீட்டின் உள்ளும் வெளியிலும் சண்டை உண்டாகும். எல்லாம் இஷ்டத்திற்கு விரோதமாகவே நடக்கும். மானம் கௌரவம் பாதிக்கப்படும். வேளா வேளைக்கு உணவு கிடைக்காது. கிடைக்கும் உணவும் தரமாக இராது. பங்காளிகள் அல்லது கூட்டாளிகள் ஏமாற்றுவர். பிறர் இவரைத் தவறாகப் புரிந்து கொள்ளுவர். அதனாலும் பல வகை கஷ்டங்கள் ஏற்படும். உடல் அழகும் பொலிவும் கெடும். மனதில் சந்தோஷம் இருக்காது. வீண் ஆசைகள் பல தோன்றும். அவை எதுவும் நிறைவேறாது. 7 ஆம் இடத்தில் புதன் எல்லா வகையிலும் தீமையையே தருகின்றான்.

**8. ஜென்மத்திற்கு 8 இல் புதன் வந்தால்—**

பலவகை யோகமும் சந்ததி விருத்தியும் ஏற்படும். நிம்மதியும் சுகமும் அதிகமாகும். யாத்திரைகள் புண்ணியத் தலப் பயணங்கள் போன்றவை ஏற்படும். போஜன சுகம் பூரணமாக உண்டு. தேகம் திடம் பெற்றுப் பிறரைக் கவரும். பொலிவும் அழகும் பெறுவார். அரசாங்க உத்தியோகம், அரசாங்க ஆதரவு போன்றவை ஏற்படும். மன்னர் மன்னனாகும் ராஜயோகமும் உண்டாகும். பூமி மனை வீடுகள் மூலம் இலாபம் ஏற்படும். அதாவது மிகவும் உயர்ந்த அந்தஸ்தை அடைவார். அதிக தனலாபமும் புகழும் ஏற்படும். இவருக்கு பலவகையிலும் பிறர் உதவி செய்வார்கள். புத்தி சாதுர்யம்

ஓங்கும். பிடித்தமான வாகனம் வீடு முதலியவை புதிதாகக் கைகூடும். பதவி வாய்ப்புகள், உயர்வுகள் உண்டாகும். ஆடையாபரணாதிகள் கைகூடும். இவரின் செயல் திறன் (Capacity) அதிகமாகும். பங்கு மார்கட் வகையில் அதிக தன லாபம் பெறுவார். சந்ததியால் லாபமும் உண்டு. சந்தோஷம் பெருகும். எல்லாக் காரியங்களும் வெற்றி அடையும். அனுபவ பூர்வமான அறிவுத்திறன் கூடும்.

9. ஜென்மத்திற்கு 9 இல் புதன் வரும்போது—

நிர்ணயத்திறன் குறையும். புத்தி, எதையும் ஆராய்ந்து முடிவு எடுக்கும் சாதுர்யம், சாமர்த்தியம் ஆகியவற்றை இழக்கும். சேர்த்த பணம் அழியும். வறுமை மேவிடும், தோல் சம்பந்தமான நோய்கள் உண்டாகும். பலகைக் கஷ்டங்களும் தொல்லைகளும் ஏற்படும். எல்லாக் காரியங்களும் தடைப்படும். பகைவர்களால் பல வழியிலும் கஷ்டம் ஏற்படும். பழிச்சொல் பெரும் பழி இவை ஏற்படும். உழைப்பு அதிகமாகும், எல்லாரும் உதவி பெற்றுக் கொண்டு இவருக்கே அபகாரம் செய்வர். பயன் தராத முயற்சிகளில் ஈடுபடுவார். உடல் களைப்பும் சோர்வும் ஏற்படும். குறிக்கோளற்ற வீண் அலைச்சல்கள் ஏற்படும். இப்படி எல்லா வழியிலும் புதன் 9 இல் அசுப பலனேயே தருவான்.

10. ஜென்மத்திற்கு 10 இல் புதன் வரும்போது—

புது உயர்பதவிகள் கிடைக்கும். வாக்கு வன்மையால் புகழ் ஏற்படும். சத்ரு ஜெயமும், அதனால் நன்மையும் உண்டாகும். பலவகைப் பணியாட்கள், சொகுசு உபகரணங்களும் கிடைக்கும். கல்யாணம் போன்ற சுப மங்கள காரியங்கள் நடக்கும். புண்ணிய காரியத்தில் ஈடுபட்டும் லாபம் உண்டாகும். தெய்வப் பிரார்த்தனையால் வேண்டியது நிறைவேறும். ஆசார சீலனாகிறார் செய்யும் காரியமெல்லாம் சிறப்பாகவும் நேர்மையுள்ளதாகவும் இருக்கும். கணிதத் தொழிலில் வல்லவர் ஆகிறார். அதிக தனலாபமும்

தன வரத்தும் ஏற்படும். ஆடிட்டர் போன்ற தொழிலுடைய வர் மிகவும் முன்னேறுவர். எல்லாவகையிலும் சந்தோஷம் ஏற்படுகிறது. சந்துருக்களின் தனமும் இவருக்கு வந்து சேரும். இவரின் செயல்திறன் மென்மேலும் பெருகும். தடங்கல் எல்லாம் நீங்கி எல்லாக்காரியங்களும் வெற்றிஅடையும். நல்ல மனைவி வாய்க்கலாம். அவளால் ஒரு நல்ல வீடும் கிடைக்கலாம். பெயரும் புகழும் ஓங்கும். இவரின் நிர்வாகத் திறனும் பளிச்சிடும். நிம்மதியும் சுக சௌக்யங்கள் எல்லாமும் உண்டாகும். பல வகையிலும் புதன் 10 இல் இப்படி நன்மைகளையே செய்வான்.

## 11. ஜென்ம ராசிக்கு 11 இல் புதன் வந்தால்—

சுக சௌக்யம் எற்படும். வாகனாதிகள் வந்துசேரும். எல்லா நன்மையும் உண்டாகி ஆரோக்யமும் கூடும். புகழ் மரியாதைகள் கூடும். பந்து ஜனங்களுடன் சுமுகமும் அதனால் பலவகையான நன்மையும் ஏற்படும். கணக்காளர் தொழிலில் தன லாபம் பெருகும். கௌரவம் ஓங்கும். எல்லா விதமான முன்னேற்றமும் உண்டாகும். எல்லாவித மான சுகவசதிகளும் கிடைக்கும். பலவகை வேலைக்காரர் பணியாள்கள் அமைவர். யாத்திரையும் வெளிநாட்டுப் பயணங்களும் ஏற்படும். அளவற்ற பணம் பலவழிகளிலும் வந்து குவியும். சந்த்தி விருத்தி ஏற்படும், மனைவி மூலம் பூரணமான சுகம் கிடைக்கும். தன் சொல்வன்மையால் அதிக சம்பாத்தியம் ஏற்படும். கால்நடைச் செல்வமும் பெருகும். எதை நினைத்தாலும், விரும்பினாலும் அது கிடைக்கும். வேடிக்கை விநோதங்களில் ஈடுபட்டு மனம் நிம்மதி அடையும். புதிய நண்பர்கள் ஏற்படுவார்கள். அவர்களால் நன்மையுண்டாகும். தொலைதூரத்திலிருந்து நல்ல சேதிகள் வரும். எனவே, புதன் 11 இல் எல்லாவகையிலும் நன்மைகளையே செய்வான்.

**12. ஜென்மராசிக்கு 12 இல் புதன் வந்தால்—**

தன விரயம், சுகக்கேடு ஆகியவை ஏற்படுகிறது. மனச் சங்கடம் உண்டாகும். வேளா வேளைக்கு வாய்க்குச் சுவை யான சாப்பாடு கிடைக்காது. பலருடன் பழகிப் பிறர் உதவி இருந்தும், காரியத்தடைகள் பல உண்டாகும். மனைவிக்கு உடல்நலம் கெடும். இவருக்கும் கீல்வாதம் மூட்டு வாதம் போன்ற நோய்கள் ஏற்படும். பிறரால் தண்டனை, மனக் கஷ்டம் ஆகியவை உண்டாகும். பிறருக்குப் பிணையாக நிற்கப்போய் அந்தக் கடனுக்குத் தானே பொறுப்பேற்க நேரும். கடன் வாங்கிக் கடல் வாணிபம் செய்தால் அதிலும் பெருநஷ்டம் ஏற்படும். அரசுடன் விரோதம் உண்டாகும். சுப விரயம் அசுப விரயம் என்னும் இரண்டும் ஏற்படும், கௌரவ பங்கமும் மன உளைச்சலும் உண்டாகும். தாம் பத்திய உறவிலும் தகராறுகள் வரும். எந்தக் காரியமும் ஒழுங்காக நடக்காது. சிறிய சுலபமான காரியத்தையும் அதிகமாக உழைத்து முடிக்கவேண்டியது ஏற்படும். வீண் அலைச்சல், காலில் காயம்படல் முதலியவையும் உண் டாகும். சத்துருக்களால் அவமானம் அடைவான். இப்படி 12 இல் புதன் அசுப பலனே தருகின்றான்,

அத்தியாயம் 17

# குருவின் ராசி பலன்கள்

குரு 2,5,7,9,11 என்னும் ராசிகளில் சுபபலன் தரு கின்றார். மற்ற ராசிகளில் அசுப பலன்களே இவரால் ஏற்படுகிறது. இனி, குருவின் விரிவான ராசி பலனைக் காண்போம்.

1. ஜென்மத்தில் குரு வரும் போது—

ஒருவன் தான் விரும்பாத வெளியூருக்குக் கட்டாயமாகச் செல்ல வேண்டியது வரும். வேறு இடத்தில் சென்று விருப்பமின்றி வசிக்க வேண்டியது வரும். பதவி பறி போகும். பந்துக்களைப் பிரிய வேண்டியதும் வரும். பலரையும் பகைத்துக் கொள்வார். எப்பொழுதும் குறிக்கோளின்றி அலைந்து கொண்டே இருப்பார். வீண் செலவுகள் உண்டாகும். கைப் பணம் கரையும். அறிவுத் திறன் குறையும். உத்தியோக பங்கமும் ஏற்படும். எதிலும் பற்றும் ஆர்வமும் இராது. மானம் கௌரவம் போன்றவை கெடும். பகைவர்களால் கஷ்டம் ஏற்படும். ராஜ கோபமும் மனக்கவலை, பொன், பொருள், நஷ்டம் எனும் எல்லாம உண்டாகும். பந்து ஜனங்களுடன் விரோதம் உண்டாகும் எதிலும் ஓர் அச்ச உணர்வு இருக்கும், துக்கமும் ஏற்படும்.

2. ஜென்மத்திற்கு 2இல் குரு வரும்போது—

செல்வம் சேரும். அழகிய மனைவி வாய்ப்பாள். குழந்தைகள் பிறக்கும். அழகும் பொலிவும் கூடும். வாக்கு வன்மை ஓங்கும். இதனால் இலாபமும் உண்டாகும். புத்தித் தெளிவும், அறிவுத் திறனும் கூடும். தனதான்ய விருத்தியும் ஏற்படும். கல்வியில் சிறந்து விளங்குவார். பெயரும் புகழும் ஓங்கும். எல்லாச் சுகமும் தேடி வரும். குடும்பத்தில் அமைதி ஏற்படும். இவன் வார்த்தையை எல்லாருமே மதிப்பார்கள். பகைவர்களை வெல்லலாம். அவர்களால் உண்டான தொல்லைகளும் நீங்கும். தாம் பத்திய சுகத்தில் திருப்தி ஏற்படும். நல்ல பதவிகள் ஏற்படும். ஐஸ்வர்யம் பெருகும். ஆண் சந்ததி ஏற்படும். பதவி உயர்வும் கிடைக்கும். வேலை இல்லாதவர்களுக்கு வேலையும் கிடைக்கும். புது அந்தஸ்து ஏற்படும். குரு 2இல் எல்லாவித நன்மைகளையும் தருவார்ம்.

### 3. ஜென்மத்திற்கு 3இல் குரு வரும் போது—

பெருத்த அசுபமோ துக்கமோ ஏற்படும், உடன் பிறப்புக்கும் அரிஷ்டம் உண்டாகும். வேண்டாத இடப் பெயர்ச்சி, தகப்பனுக்குக் கண்டம் இவையும் ஏற்படும். பந்து ஜனங்களை விரோதித்துக் கொள்வார். பிணி, மாரக பயம் ஆகியனவும் உண்டு. மாரக தசை நடந்து, ஆயுள் பிரமாணம் முடிந்து இருந்தால், மரணமும் சம்பவிக் கலாம். சிறைக்காவல், வெகுரோகம். சில்லறைச்சண்டை, மான கௌரவ பங்கம் ஊரார் சிரிக்கும் அளவுக்கு இழிவான நிலை எல்லாம் அடைய நேரலாம். இந்த ஓர் இடத்தில் கோசாரத்தில் குருவுக்கு மிகக்கொடிய பலன்களே கூறப்பட்டுள்ளன. இந்தச் சமயத்தில், இவர் முரடராய் இருந்தாலும் தைரிய மற்றுக் கோழையாகி விடுவார். மந்த புத்தி உள்ளவரும் ஆவார். தரித்திரம் தாண்டவமாடும். பதவி, உத்தியோகம், அந்தஸ்து ஆகியவை பறி போகும். வியாபாரம் முதலியவற்றில் பெரிய நஷ்டமும் ஏற்படும். நண்பர்களைப் பிரிய வேண்டியது வரும். எல்லாக் காரியங் களும் தடைப்படும். பல நோய்கள் உண்டாகும், அதிக உழைப்பும், பிறரால் ஏமாற்றமும் உண்டாகும். பீடை, சரீரக் கஷ்டம் இவையும் ஏற்படும். பிழைப்புக்கு வழியின்றி அலைவார். சந்தோஷம் சற்றும் இருக்காது. வீண் குறிக் கோளற்ற அலைச்சலால் சரீரக் களைப்பு மிகும். குரு மற்ற இடங்களைவிட இந்த 3ஆம் இடத்தில் மிக அதிக மான கெடுதிகளைச் செய்கிறார்.

### 4. ஜென்மத்திற்கு 4இல் குரு வரும்போது—

கால்நடைச் செல்வம் அழியும். தன் வீட்டில் இருக்க முடியாமல் கட்டாயமாக வெளியிடத்தில் சென்று வசிக்க வேண்டியது வரும். சூதாட்டம், நஷ்ட வியாபாரம் இவற்றில் ஈடுபட்டு (Speculations) சொத்து பணமெல்லாம் பறிபோகும். சிலர் ஓட்டாண்டியாகலாம். வீட்டில் நிம்மதியும் சுகமும் கெடும், பந்து ஜனங்கள் வெறுப்பார்கள்.

அவமானம் ஏற்படும். நாலு கால் பிராணிகளால் (மாடு முட்டல் முதலியவை) பிராண பயமும் உண்டாகும். மனத்தில் தீராத கவலை மண்டிக் கொள்ளும், வீட்டினுள்ளும் கவலை, வெளியிலும் நிம்மதி இல்லை என்று எங்கும் நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருப்பார். வாகன விபத்து, வீண்பழி போன்றவையும் ஏற்படுகிறது. மனத் தவிப்பு அதிகமாகிறது. மதிப்பு மரியாதைகள் கெடும். உத்தியோக பதவி இறக்கமும் வருமானக் குறைவும் ஏற்படும். தண்டனையும் கிடைக்கலாம். மனக்குழப்பம் மேவிடும். காட்டிலும் வாழ இடமில்லை, வீட்டிலும் நாட்டிலும் வாழ இடமில்லை என்ற நிலையில் சதா அலைந்து கொண்டே இருப்பார். குரு 4இல் அசுபபலன்களையே தருகின்றார்.

### 5. ஜென்மத்திற்கு 5இல் குரு வரும்போது—

மனைவி மக்களுடன் வாழ்க்கை சந்தோஷமாகக் கழியும். வீட்டில் மங்கள சுபகாரியங்கள் நடக்கும். பலவகையான வாகன சுகமும் ஏற்படும். முக்கியஸ்தர்கள், பணக்காரர்கள் சிநேகம் உண்டாகும். கீர்த்தி பெருகும். புனித காரியங்களில் ஈடுபடுவார். புதிய தொடர்புகள் மகிழ்ச்சி தரும் புத்தி சாதுரியமும்.அறிவுத் திறனும் அதிகமாகும். அன்னதானம் செய்வார். தன் இன மக்களிடம் பற்று அதிகமாகும். அரசாங்க உத்தியோகம் ஏற்படலாம். வேலையாட்கள், பணிசெய்யும் உதவியாளர்கள் ஏற்படுவர். ஆண் சந்ததி ஏற்படும். கால் நடைச் செல்வம், பால்வளம் ஏற்படும். வித்துவான் ஆவார். பொன் பொருும் கைகூடும். ஆடை ஆபரணம் கிடைக்கும். கௌரவம், அந்தஸ்து, மரியாதை, பதவி எல்லாம் கிடைக்கும். நண்பர்கள் உதவுவார்கள். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் கைகூடும். யானை, குதிரை (கார் போன்ற) போன்ற வாகனங்கள் கிடைக்கும். கிராமாதிகாரம், அரசபதவிகள்

போன்றவை ஏற்படும். சிறந்த நீதிமான் ஆவார். இப்படிக் குரு 5இல் பூரண சுபபலன் தருவார்.

## 6. ஜென்மத்திற்கு 6இல் குரு வரும்போது—

தானியமும் மாடு மக்களும் அழியும். இடம் விட்டு வலுக்கட்டாயமாக வெளியேற வேண்டியது வரும். பிறர் செய்த குற்றத்திற்கு இவர் தண்டனை அனுபவிக்கவும் வேண்டியது வரும். பங்காளிகளின் கை மேலாக ஓங்கும். சரீரத்தில் ரண காயங்கள் ஏற்படக்கூடும். வாத சீதள நோய்கள் உண்டாகின்றன. பகைவர்களால் கஷ்டமும் தொல்லையும் ஏற்படுகின்றன. மனைவி மக்களிடம் வெறுப்பு ஏற்படும். எதிலும் திருப்தி இல்லாமல் வெறுப்பே ஏற்படும். வீண் விவாதங்களால் பிறருடன் சண்டையும் ஏற்படும். பயமும் கஷ்டமும் அதிகமாகும். எல்லா முயற்சிகளும் வெற்றி பெறாமல் வீணாகும். சோகம், அக்னி பயம், ராஜ கோபம். அவமானம். என்னும் பலவும் ஏற்படும். சங்கீதம். நாட்டியம் பொழுதுபோக்கு எதிலும் மனம் ஈடுபடாது. எப்பொழுதும் கடுகடுத்த முகத்துடன் எல்லாரையும் வெறுத்துப் பேசிக் கொண்டிருப்பார். எல்லா முயற்சிகளிலும் தோல்வியே அடைவார். ஆக குரு 6இல் எல்லாவித அசுப பலன்களையுமே தருகிறார்.

## 7. ஜென்மத்திற்கு 7இல் குரு வரும்போது —

குரு ஜென்மத்திற்கு 7இல் வரும்போது மனைவி மூலம் பூரணமான சுகம் ஏற்படுகிறது. செல்வம் செழிக்கும். அரசு மூலமும் வெகுமானம் கிட்டும். உயர்ந்த ரக வாகனாதிகள் கிடைக்கும். பெரிய இடத்துப் பெண் மனைவியாக அமைந்து அதனால் வாழ்க்கையில் முன்னேற்றமும் உண்டாகும். கல்வியில் தேர்ச்சியும் உண்டாகும். அதிகமான பணம் சேர்க்க முடியும். இவரின் மனைவி இப்பொழுது இவனுக்கு அடங்கிய குணவதியாய் இருப்பாள். ஒரு நல்ல குறிக்கோளுக்காக புண்ணிய தலப்

பயணமும் மேற் கொள்வார். வியாபார சம்பந்தமான வெளிநாட்டுப் பயணமும் ஏற்படும். குழந்தை பிறக்கும். ஆடையாபரணமும் சேரும். வேளைக்கு வக்கணையாகச் சுவையான, பிடித்தமான உணவும் கிடைக்கும். வாசனாதி பரிமள திரவியங்கள் சேரும். தன் இனிய வாக்கால் எல்லாரையும் கவர்ந்து விடுவான். புத்தி சாதுரியத்தால் இவர் வித்வானாகிறார். சுக வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள் பலவும் தட்டின்றி வீட்டில் நிறைந்துவிடும். இனிய பான வகைகள் கிடைக்கும். வளர்பிறை போல் சந்தோஷமும் தனமும் நாளுக்கு நாள் கூடும். இப்படி 7-இல் குரு இருந்தால் எவ்வகையிலும் நல்லதே நடக்கும்.

8. ஜென்ம ராசிக்கு 8-ல் குரு வரும்போது—

இப்போது தானியம் செல்வமெல்லாம் சேதமாகும். வீட்டை விட்டும், நாட்டை விட்டும் வெளியேற வேண்டியதும் வரும். தன் பதவி, உத்தியோகம், கௌரவம் எல்லாம் பறி போகும். ஆயுள் க்ஷீணமடையும். கீழ் நிலையில் உள்ளவர்களின் சிநேகத்தால் அவப்பெயர் உண்டாகும். உடல் பலஹீனமாகும். பயணங்களின் போது கஷ்டம், விபத்து போன்றவை ஏற்படுகிறது. துரதிர்ஷ்டமும் துக்கமும் அதிகமாகும். கைப் பணம் விரயமாகும். பணமுடையும் தரித்திரமும் ஓங்கும். கோர்ட் வழக்கு முதலிய வகையிலும் பணம் கரையும். சிறை வாசமும் சிலருக்கு ஏற்படலாம். பலவகையான நோய்களும், தாள முடியாத மனக் கஷ்டமும் உண்டாகும். மரண கட்டத்தை அடையும் அளவுக்கு நோய்க் கடுமை ஏற்படும். காரியங்கள் எதுவும் நினைத்தபடி கை கூடாது. உழைப்பும் அதிகமாகும். அதற்கேற்ற இலாபமோ, பலனோ எதுவும் இராது. அக்கினி விபத்து, அரச கோபம், சரீரக் கஷ்டம் ஆகியவை நேரிடும். அனாவசியக் கட்டுப்பாடும், உடல் சோர்வும் ஏற்படும். இப்படி குரு 8இல் அசுப பலனையே தருவான்.

## 9. ஜென்ம ராசிக்கு 9-இல் குரு வரும்போது —

கிராமாதிகாரம் அரச மரியாதை ஆகியவை கிட்டும். தாய் தந்தையால் உதவிகள் கிட்டும். உயர்ந்த ரக வாகனங்கள் கிடைக்கும். தன் ராஜ தந்திரத்தால் அரசியலில் நல்ல பதவிகளை அடைவான். ஆசாரம் ஒழுக்கம்-நேர்மையுள்ளவனுமாகிறான். ராஜ யோகம் உண்டாகும். உயர் பதவிகள் கிடைக்கும். அரசாங்கத்தின் மூலமாக இலாபம் உண்டாகும். புண்ணியக் காரியங்கள் மற்றும் தான தர்மங்களைச் செய்வார். தவத்திலும், பூஜை புனஸ்காரங்களிலும், தெய்வீக வாழ்க்கையிலும் பற்று ஏற்படும். பாக்கிய வசத்தால் இவருக்கு வருமானம் அதிகமாகும். தகப்பனாரின் ஆதரவும் கிட்டும். அதனால் இலாபமும் கிடைக்கும். பிரசித்தியும் ஏற்படுகிறது. பல ஜனங்களை இவர் ஆதரித்துக் காப்பாற்றுகிறார். எல்லாம் கற்றுத் தேர்ந்த நிபுணர் ஆகிறார். இவர் கட்டளைகளைப் பிறர் ஏற்று நடக்கும் வண்ணம் இவர் அந்தஸ்தும் உயரும். காரியங்கள் எல்லாம் தடங்கலின்றிக் கைகூடும். வளங்கொழிக்கும் வயல்களால் வசதிகள் பெருகும். இவருக்குச் சமூகத்தில் எல்லாவற்றிலும் முதலிடம் கிடைக்கும். பதவி அந்தஸ்துகள் உயரும். வீட்டில் தேவைப்படும் அத்தியாவசியப் பொருள்கள் எல்லாம் நிரம்பி வழியும். இலாபகரமான வெளிநாட்டுப் பயணங்கள் ஏற்படும். ''ஓடிப் போனவனுக்கு 9-ஆம் இடத்தில் குரு'' என்ற பழமொழிப்படி, இவன் எல்லாக் கஷ்டங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறான். பூர்வபுண்ய ஸ்தானமாகிய 9இல் குரு இப்படி எல்லா வகையிலும் நன்மையே செய்கிறார்.

## 10. ஜென்மத்திற்கு 10-இல் குரு வரும்போது —

தன தான்யம் அழியும். தரித்திரம் அதிகமாகும். எல்லாவற்றிற்குமே பிறர் தயவை எதிர்பார்க்க வேண்டியது வரும். பதவி உத்தியோகம் பறி போகும். ஆரோக்யம் கெடும்.

பலவித நோய்களும் உண்டாகும். கண்ணோய்கள் நேரும். இஷ்டமான எண்ணம் எதுவும் நிறைவேறாது. சிலேத்துமச் சளிநோய்கள் உண்டாகும். மனச்சோர்வு உடல் சோர்வு எல்லாம் உண்டாகும். இருக்கும் இடத்தை விட்டு வெளியூருக்கு அல்லது வேறு இடத்திற்கு மாறிப் போக வேண்டியது வரும். தன் சந்ததிக்குக் கண்டம் ஏற்படும். "பத்தில் பார்ப்பான் (குரு) பதவியைக் கெடுப்பான்" என்ற பழமொழிக்கேற்ப, உத்தியோகத்தில் முக்கியமான பாதிப்பு ஏற்படும். சொத்து நஷ்டமும் உண்டாகும். சுகம், சௌகர்யம் கெடும். நெருங்கிய உறவினர் ஒருவர் மரணமடையலாம். மக்கள் ஒருவருக்கும் மாரக பயமுண்டு. இப்படி 10-ஆம் வீட்டில் குரு அசுபத்தையே தருவான்.

## 11. ஜென்மராசிக்கு பதினொன்றில் குரு வரும்போது—

செல்வம் சேரும். கிராமாதிகாரம், அரசியல் அதிகாரம் உண்டாகும். அரச மரியாதை கிட்டும். தான தர்மம் செய்வான். கார் போன்ற வாகனங்கள் கிடைக்கும். கல்வித் துறை பலவற்றிலும் சிறந்து வித்வானாகிறார். இவர் புகழ் பலவகையிலும் ஓங்கும். பாக்யம் பெருகும். பெரும்புள்ளிகள் சிலர் அறிமுகமாகி அதனாலும் உயர்வடைவார். அரசில் சகாயம் இருக்கும். அரசாலும் கல்வியாலும் இலாபம் ஏற்படும். பணம் பல வழியிலும் குவியும். பொன் பொருள்கள் சேரும். நல்ல சந்ததி ஏற்படும். உயர் பதவிகள் கிடைக்கும் செல்வம் சேரும். வங்கியில் சேரும் ரொக்க இருப்பு கூடும். நோய் நீங்கி ஆரோக்யம் ஏற்படும். மனை, வீடு, வயல் என்னும் இவை சொந்த மாகக் கிடைக்கும். தாம்பத்திய சுகம் பூரணமாகக் கிடைக்கும். ஆடை ஆபரணாதி வகைகள் கை கூடும். வெளிநாட்டுப் பயண வாய்ப்பும், அதனால் ஆதாயமும் பெருகும். ஆக, எல்லா வகையிலும் 11-இல் குரு சுப பலனே தருகின்றார்.

**12 ஜென்மராசிக்கு பன்னிரண்டில் குரு வரும்போது—**

தன் வீட்டை விட்டு நிர்ப்பந்தமாக வெளியூர் போக வேண்டியது வரும். தன் பதவி, உத்தியோகம் ஆகியவை பறி போகும். மாரக தசை நடப்பவர்களுக்குக் கண்டம் ஏற்படும். அதிக வறுமை ஏற்படும். கீழ்த்தரமான கல்விப் பயிற்சிகளில் ஈடுபாடு ஏற்படலாம். சுப காரியச் செலவுகள் ஏற்படும். கிரந்தி, ரண ரோகம் ஆகியவை ஏற்படும். உயர்குல வேற்றுப் பெண் தொடர்பால் அவப் பெயரும், வீண் செலவும் உண்டாகும். பகைவர் சூழ்ச்சியால்; வீட்டில் யாராவது இறத்தலும் கூடும். எல்லாவற்றிலும் அச்ச உணர்வும் தயக்கமும் ஏற்படும். சொத்து நஷ்டமும் ஏற்படும். கெட்ட வழியில் செல்வதால் தீராத கஷ்டமும் ஏற்படும். இவர் பணக்காரனாக இருந்தாலும் அந்தப் பணம் இவரது கஷ்டங்களைத் தீர்க்க உதவாமல் போகும். கௌரவத்திற்காகவும், இயல்பாகவும் தான தர்மங்களைச் செய்து, இவரது சொத்துக் கரையும். அதிக உழைப்பும் சோகமும் ஏற்படும். வெளிநாட்டுப் பயண வாய்ப்பும் ஏற்படும். உடல் சோர்வும் மனக் களைப்பும் ஏற்படும். ஆக, எப்படியும் குரு 12-இல் அசுப பலனே தருவார்.

**குரு தரும் அசுப பலனின் தாரதம்யம்**

குரு வருஷக்கோள். ஆகையால் இவர் தரும் அசுப பலனுக்கு அந்தந்த வீடுகளுக்கு ஏற்ப ஒரு தனித் தன்மையும் உண்டு. அதை விளக்கும் பழம்பாடல் வருமாறு :

**ஜென்ம ராமர் வனத்திலே**
**சீதை யைச்சிறை வைத்ததும்**
**தீதிலா தொரு மூன்றிலே**
**துரியோ தனன்படை மாண்டதும்**

இன்மை எட்டில் வாலிபட் டம்
இழந்து போம்படி யானதும்
ஈசனாரொரு பத்திலே தலை
ஓட்டிலே இரந்துண் டதும்

நன்ம புத்திரர் தாலி லேவன
வாசமப்படிப் போனதும்
சத்ய மாமுனி ஆறிலே இரு
காலிலே தளை பூண்டதும்

வன்மை யுற்றிட ராவணன் முடி
பன்னிரண் டினில் வீழ்ந்ததும்
மன்னுமா குரு சாரி மாமனை
வாழ்விலா துறு மென்பவே!

குரு ஜென்மம், 3, 4, 6, 8, 10, 12 ஆகிய இடங்களில் அசுப பலன் தருகிறார். இந்த ஒவ்வொரு வீட்டின் அசுப பலனையும் ஒவ்வோர் இதிஹாச நாயகன் வாழ்க்கை நிகழ்ச்சியோடு சேர்த்து இந்தப் பாடல் விளக்குகிறது. இதன்படி,

1. ஜென்ம ராசியில் குரு வந்தபோது இராமர் காட்டுக்குப் போனார். சீதை சிறைப்பட்டாள். இது போல், ஜென்ம குரு வரும்போது பதவி இறக்கமும், வேண்டாத இட மாற்றமும், சிறை காவல் போன்ற கட்டுப்பாடும் ஏற்படுகிறது.

2. 8-இல் குரு வரும் போது வாலி பட்டமிழந்தான், மாண்டான். இது போல், 8-இல் குரு வரும்போது ஒருவனின் பதவி அந்தஸ்து பறி போகும். ஆயுர்தாயப்படி ஆயுள் எல்லை முடியுமானால், மாரக தசையும் கூடினால், இவனுக்கு மரண கண்டமும் உண்டாகும்.

3. பத்தில் குரு வந்த போது, பிரம்மனைத் தலை கிள்ளிய தோஷத்தால், கிள்ளப்பட்ட அவன் தலை ஓட்டிலேயே அந்த தோஷம் விலகப் பிச்சை எடுத்துத் திரிந்தார்

சிவன். அது போல், எதாவது இசகு பிசகான தவறால் ஒருவனுக்கு பதவி நாசம் ஏற்பட்டு, வறுமையும் குரு 10-இல் வரும்போது ஏற்படும் என்று கொள்ள வேண்டும்.

4. சத்யமாமுனி வேறு திருடர்கள் செய்த தவறுக்காகத் தான் காலில் விலங்கு பூட்டப்பட்டார். இது 6-இல் வந்த குருவால் இவருக்கு ஏற்பட்டது.

இதுபோல் 6இல் குரு வந்தால் இக்காலத்தில், வேறு ஒருவர் செய்த குற்றத்திற்காகத் தான் தண்டனை அனுபவிக்க வேண்டியது வரும்.

5. 4-இல் குரு வந்த போது தரும புத்திரர் சூதாடிச் சொத்திழந்து, வனவாசம் போனார். அதேபோல், இன்றைய நிலையில், வீண் சூதாட்டம், அல்லது போட்டி, பந்தயங்களில் ஈடுபட்டு, ஒருவன் சொத்துகளையெல்லாம் இழப்பான் எனலாம்.

6. 12-இல் குரு வந்த போது இராவணன் இராமனால் மாண்டான். முடியும் துறந்தான். எனவே 12-இல் குரு வந்தால் தற்காலத்தில் மாரக பயமும் பதவி நாசமும் ஏற்படலாம் எனலாம்.

7. குரு 3 இல் வந்த போது பாரதப் போரில் துரியோதனன் மாண்டான். இது போல் தற்கால நிலையில் குரு மூன்றில் வரும்போது, ஆயுர்த்தாயப்படி ஆயுள் க்ஷீணமாகி இருந்தால் கண்டமும் மரண பயமும் உண்டாகும் என்று கொள்ள வேண்டும்.

மற்ற இடங்களில் சுபபலன்களே ஏற்படுவதால் அதைப் பற்றி விளக்கம் இங்கு தேவையில்லை.

அத்தியாயம் — 18

# சுக்கிரனின் ராசி பலன்கள்

சுக்கிரன் ஒருவரின் ஜென்ம ராசிக்கு 1,2,3,4,5,8,9,11 மற்றும் 12 ஆம் இடங்களில் வரும்போது சுப பலன்களைத் தருகின்றார். 6,7,10 ஆகிய மூன்று இடங்களில் மட்டுமே இவர் அசுப பலன் தருகின்றார். இப்பொழுது விரிவான பலன்கள் வருமாறு :

## 1 ஜென்ம ராசியில் சுக்கிரன் வந்தால்—

பொன் பொருள் சேரும். தாம்பத்திய இன்ப சுகமும் நிறைவாகக் கிடைக்கும். உயர் வாகனாதிகள் கிடைக்கும் கல்வியில் சிறப்பும், கணிதத்தில் திறமையும் பெறுவார். ராஜயோகம் ஏற்படும். ''அகில விஷயபோகம்'' அதாவது, உலகில் ஐம்புல இன்பங்கள் என்ற பெயரில் உள்ள இன்பம் எல்லாம் கிடைக்கும். கட்டில், மெத்தை, ஆடை அலங் காரப் பொருள்கள் சுகந்த பரிமள வாசனாதி திரவியங்கள் ஆகிய எல்லாம் ஒரு சேரக் கிடைக்கும். வேளா வேளைக்குச் சுவையான போஜனமும் கிடைக்கும். பால் வளமும் உண்டாகும். நல்ல சந்ததிகள் ஏற்படும். சில சமயம் இவர் தவறான நடத்தை உள்ளவரும் ஆகிறார். புதிதான பெண்ணுறவும் தன விருத்தியும் ஏற்படும். புதிய பதவியும் உத்யோக அந்தஸ்துகளும் கிடைக்கும். மொத்தத்தில் சுக்ரன் ஜென்ம ராசியில் மேலான சுப பலன்களையே தருகின்றார்.

## 2. ஜென்ம ராசிக்கு 2 இல் சுக்கிரன் வந்தால்—

'பிறருக்கு அன்னதானம் செய்யும் வளமை இவருக்கு உண்டாகும். வித்தையில் தேர்ச்சியும் அறிவுத் திறனும்

உண்டாகும். சிக்கறுத்துப் பேசும் வாக்கு வன்மையைப் பெறுவார். அழகை மிகவும் மகிழ்ச்சியுடன் கண்டு களிப்பார். தன விருத்தியும் குடும்ப நிம்மதியும் உண்டாகும். போஜன சுகம் பூரணமாகக் கிடைக்கும். கண்கள் புத்தொளி பெறும், முகப் பொலிவும் கவர்ச்சியும் உண்டாகும்.

செல்வம் கொழிக்கும் தானிய வகைகள் குவியும் அரசு ஆதாவும் கிடைக்கும். எல்லாவித போக, உபயோகத் தேவைப் பொருள்களும் குறைவின்றி வீட்டில் மண்டிக் கிடைக்கும். நோய் நீங்கும். ஆரோக்கியம் பெருகும். சந்ததி விருத்தியும் ஏற்படும். அரசாங்க விருதுகள் கிடைக்கும். சுக்ரன் 2 ஆம் இடத்தில் பூரண சுபபலனே தருவார்.

### 3. ஜென்ம ராசிக்கு 3 இல் சுக்கிரன் வந்தால்—

பொன் ஆபரணங்கள் விதவிதமாகக் கிடைக்கும். சில சமயம் தன் மனைவியைப் பிரிந்து துயரம் அனுபவிக்க வேண்டியதும் வரும். பிறருடன் அதிக தயை தாட்சணியத்துடன் இருப்பான். தன்னை விதவிதமாக அலங்கரித்துக் கொள்வார். எதையும் சாதிக்கும் திறமையும் சாமர்த்தியமும் அதிகமாகும். நினைத்ததை நினைத்தபடியே நடத்தி முடிப்பவராவார். பலவகை முன்னேற்றமும் உண்டாகும். அதிகாரம் பண்ணும் தலைமைப் பதவி கிடைக்கும். அந்தஸ்தும் மரியாதையும் உயரும், இவன் பகைவர்கள் செயலிழந்து போவார்கள், புதிய நண்பர்கள் சிலர் ஏற்படுவார்கள். அவர்களால் நன்மையும் ஏற்படும். நோய்களும் நீங்கும். ஆரோக்யம் பெருகும். பணவரவும் அதிகமாகும். எல்லாவித முன்னேற்றமும், சுகமும் ஏற்படும். மரியாதை, புகழ், அந்தஸ்து பதவிகள் ஆகியவை இவரைத் தேடிவரும். தைரியமும் வீரமும் ஓங்கும். 3 இல் சுக்கிரன் நன்மையே செய்வார்.

### 4 ஜென்மத்திற்கு 4 இல் சுக்கிரன் வந்தால்—

எல்லாவித வசதிகளுடன், தனக்கெனத் தனி வீடு அமையும். படிப்பில் தேர்ச்சியும் வெற்றியும் ஏற்படும். உடல் அழகுடன் மெருகேறும். முகத்தில் அறிவுச் சுடர் ஒளி வீசும், உத்தம குணங்கள் அதிகமாகும். தரும சிந்தனையும் மேலிடும். நண்பர்களுக்கு உதவுவான், சகோதரர் உதவியும் ஏற்படும். சுக சௌக்கியம் பெருகும். பிறர் குற்றங்களை மன்னிக்கும் குணமும் ஏற்படும். நண்பர்கள் மூலம் வாழ்க்கையில் புதிய வசதிகள் கிடைக்கும். இந்திரன், ருத்திரன் போன்று வாழ்க்கைத் தரம் மிகவும் உயரும். உயர் அதிகாரமுள்ள பதவிகள் கிடைக்கும். உறவினர்களின் கூட்டுறவால் வாழ்க்கை வளம் பெறும். புதிய ஆடை அணிகலன்களும் கிடைக்கும். புதிய பதவி அந்தஸ்துகள் ஏற்படும். அழகிய ஆண் சந்ததி பிறக்கக் கூடும். தனக்கு நெருக்கமானவர்களுடன் உல்லாசமாக இருப்பார். இனிமையாக அவர்களுடன் பொழுது போக்குவார். இவருக்கு வேண்டாதவர்களே இருக்க மாட்டார்கள். சுக்கிரன் 4 இல் எவ்வகையிலும் நற்பலனே தருவான்.

### 5. ஜென்ம ராசிக்கு 5 இல் சுக்கிரன் வந்தால்—

நல்ல குழந்தை பிறக்கும். சொற்பொழிவுத் திறன் அதிகமாகும். அதனாலும் ஆதாயம் மேலிடும். தன் நாட்டு உயர்மட்ட அரசுப் பதவியில் உள்ளவர்களுக்கு வேண்டியவராகி, அவர்களால் நிறையப் பயன் பெறுவார்; புத்திமானும் ஆவார். அமைச்சர் சேனாதிபதி போன்ற பதவிகள் கூடத் தேடி வரலாம். இவர் மனைவி வயதானவளாக இருந்தாலும், அழகு குன்றாதவளாக இருப்பாள். தன் மனைவியையும் குழந்தைகளையும் நன்றாகக் கவனித்துக் கொள்வார். பெரியோர், குரு, ஜனங்கள் உதவிகளும் ஏற்படும். தன விருத்தியும் உண்டாகும். எப்பொழுதும் இவருடன் யாராவது துணையாக இருந்து கொண்டே இருப்பார்கள். இவர் பகைவர்கள் மனம் உளைந்து

தோற்றழிவர். வாகனங்களும் சொத்துகளும் இவரைச் சேரும். கால்நடைகள் பசு, பால் பாக்யம் ஆகியவை ஏற்படும். வேலையாளர் பணியாள்கள் அமைவர். சொத்துச் சுகம் சேரும். பேரும் புகழும் ஓங்கும். சுக்கிரன் இப்படி 5 இல் வரும்போது சுபபலனே தருகின்றான்.

6. ஜென்ம ராசிக்கு 6 இல் சுக்கிரன் வந்தால்—

துன்பமும் தொல்லையும் ஏற்படும். வயிற்று வலி கூடிய ரோகம், நீரிழிவு போன்ற ரோகங்கள் ஏற்படலாம். காம இச்சை அதிகமாகும். ஆனால் அதே சமயம் தன் மனைவியுடன் பகை ஏற்பட்டு அவளை நெருங்க முடியாமலும் பூர்த்தி பண்ணிக் கொள்ள முடியாமலும் தவிப்பார். துண்பமும் சோகமும் இதனால் மிகும். இவருக்குப் பசி அதிகமாகிப் பெருந் தீனிக்காரராக மாறுவார். பங்காளிகள் கை ஓங்கும். அதிகமான சுக போகத்தால் மறைமுகமான நோய்கள் ஏதாவது தோன்றும். ஆபத்து விபத்துகள் போன்றவையும் உண்டாகும். மனம் நிலைகொள்ளாமல் தவிப்பார். வீண் அலைச்சல்கள் ஏற்படும். எல்லாவற்றிலும் அச்சமும் பயமும் இருக்கும். இடையூறுகள் ஏற்பட்டு, முயற்சிகள் எல்லாம் வீணாகும். மனைவியிடம் பயமும் துவேஷமும் ஏற்படும். கெட்டவர் நட்பினால் கெடுதியும் துன்பமும் பொருளழிவும் ஏற்படும். தவறான நடத்தைகளால் நோயும் அவமானமும் நேரும், இவரின் பதவி அந்தஸ்துகள் குறையும். மரியாதையும் கௌரவம் கெட்டுப் போகும். பலவகை நோய்களும் உண்டாகும். 6இல் இப்படிச் சுக்கிரன் எல்லாவித அசுபபலன்களையே தருகிறார். சுக்கிரன் இந்த ஓர் இடத்தில்தான் எல்லா இடங்களைவிட அதிக அசுப பலனைத் தருகிறார். வெகு ரோகம், சிறை. காவல், மாரமரண பயம், கண்டம் முதலியவை தவறாமல் ஏற்படுகின்றன,

7. ஜென்ம ராசிக்கு 7இல் சுக்கிரன் வந்தால்—

சோர்வும், சோம்பலும் மிக அதிகமாகும். பயித்தியம் பிடித்தவன் போன்று மனம் அல்லற்படும். ஜலத்திலே கண்டம் ஏற்படும். சிலருக்கு இரு மனைவிகள் ஏற்படலாம். நடத்தைத் தவறுகளினால் உடல் நலம் கெடும். நண்பர்கள் உறவினர்களுடன் பகையும் ஏற்படும். கூட்டு வியாபாரத்தில் மோசடியும் நஷ்டமும் ஏற்படும். ஒரு பெண்ணின் கலகத்தால் வாழ்க்கையில் நிம்மதி கெடும். வெளி நாட்டுப் பயண வாய்ப்புகள் ஏற்படும். ஆனால் அங்கேயும் ஒரு பெண்ணால் ஆபத்து ஏற்படும். வழக்குகளில் ஜெயம் உண்டாகும். ரகசிய நோய்களின் பீடிப்பால் அவஸ்தைப் படுவார். இவை சில சமயம் உயிருக்கே ஆபத்தாய் முடியலாம். கண்டபடி அலையும் அலைச்சல் ஏற்படும். அதிக தாகமும், பெண்கள் மூலம் பயமும், கெட்ட எண்ணம் கொண்ட நண்பர்கள் மூலம் கஷ்டமும் உண்டாகும். சுக்கிரன் 7இல் இப்படிப் பலவகையிலும் அசுப பலனே தருகிறார்.

8. ஜென்ம ராசிக்கு 8இல் சுக்கிரன் வரும்போது—

எல்லா வசதிகளும் இன்பமும் உண்டாகும். உயர்ந்த செல்வ நிலையடைவார். நோய் கண்டம் எல்லாம் நீங்கி ஆரோக்கியமும், புத்தொளியும், தெம்பும் பெறுவார். இவர் சுக புருஷன் ஆகிறார். தாய்க்கு அரிஷ்டம் ஏற்படும். தம் இஷ்டம்போல் இதமாகப் பணிவிடை செய்யும் மனைவியை உடையவர் ஆகிறான். நிறைந்த சம்பத்து. அதாவது செல்வமும் ரூவியும். பல வீடுகள் ஏற்படுகின்றன. பணக்கார மனைவியையும் அடைகிறான். புகழ் ஓங்கும். விமானம்,கௌரவம் அந்தஸ்து ஆகியவை உயரும். இவன் மனத்திற்குப் பிடித்தபடி எல்லாம் நடக்கும். அன்புள்ள நண்பர்களும் உறவினர்களும் அமைகின்றனர். நல்ல வசதியுள்ள வீடும் கிடைக்கும். சுகமும் கிடைக்கும். துக்கமும் துன்பமும் ஒழியும். சமூகத்தில்

மதிப்பும் மரியாதையும் பெருகும். சுக்கிரன் 8இல் பலவிதத்திலும் சுபபலனே தருகிறான்.

9. ஜென்ம ராசிக்கு 9இல் சுக்கிரன் வரும்போது—

உயர்ரக ஆடையாபரண வகைகள், போகப் பொருள் பொழுதுபோக்கு உபகரணங்கள் யாவும் கிடைக்கும். விரும்பிய பொருள்களெல்லாம் கிடைக்கும். சுகமும் ஆரோக்யமும் பெருகும். நிறையத் தனம் சேரும். அன்ன தானம் செய்வார். மற்றும் பல புண்ணிய காரியங்களிலும் மனம் ஈடுபடும். உயர்ந்த வள்ளலும் செல்வந்தருமான ஒரு முக்கியஸ்தர் இவருக்கு நண்பராய் அமைந்து. அதனால், இவருக்கு நல்ல முன்னேற்றம் உண்டாகும். வாக்கு நாணயம் பெருகும். தேவதா பக்தியும் ஏற்படும். குண முள்ளவராகவும் தவ முயற்சி உள்ளவராகவும் இருப்பார். ஆனால் கோசாரத்தில் சுக்ரனுக்கு அசுப பார்வை ஏற்பட்டு விட்டால், பாவ கர்மம் செய்வார். இக்காலம் தகப்ப னாருக்கு நன்மை ஏற்படுகிறது. வாகன சுகமும் உண்டா கிறது. எல்லா வகையிலும் பூரண சுகமும் நிம்மதியும் பெற லாம். போஜன சுகமும் நிறைவாக உண்டு. நண்பர்களும் விரும்பி உதவுவார்கள். திருமணமாகாதவர்களுக்குப் பெரிய இடத்துப் பெண்ணுடன் திருமணம் நடக்கும். அவளால் செல்வமும் சுகமும் பெறுவார். கல்வியும் புகழும் ஓங்கும். இவர் குணசாலியாகிறார். எல்லாராலும் போற்றப்படு வார். வெளிநாட்டுப் பயணம், வெளிநாட்டிலே காதல் திருமணம், பலவகை ஆதாயம் என்னும் இவை ஏற்படும். பல புண்ணியத்தல யாத்திரையும் மேற்கொள்வார். பொரு ளாதாரம் மிகவும் மேலான நிலையை அடையும். நல்ல குரு—ஆசான் போன்றவர் ஒருவர் அமைவார். அவரால் வாழ்வில் ஒளியும் முன்னேற்றமும் பெருகும். புத்தி சாதுர்யம் ஓங்கும். ஒழுக்கமும் நடத்தையும் சிறப்பாக இருக்கும். சுக்கிரன் 9 இல் முழுவதும் நல்ல சுப பலனே தருகிறார்.

**10. ஜென்மத்திற்கு 10 இல் சுக்கிரன் வரும்போது—**

நோய் நொடிகள் உண்டாகும். அகால போஜனமும் சத்தில்லாத உணவும் கிடைக்கும். மனக் கஷ்டம், துக்கம் போன்றவை ஏற்படும். ஏதாவது வேலையாக வெளி நாடுகள் செல்லல், அங்கே ஏதாவது தடங்கல் உண்டாதல், உத்யோகம், தொழில் வியாபாரங்களில் சரிவு ஏற்படல், கெட்ட செயல்களில் மனம் ஈடுபடல், எந்தக் காரியமும் நிறைவேறாது போதல் போன்ற அசுப பலன்கள் பலவும் காணும். பிடரியில் நோய், பொருட்சேதம், கெட்ட சகுனம், மனக் கிலேசம் போன்றவை உண்டாகும். கலகமும் சில்லறைச் சண்டைகளும் ஏற்படும். மானம் கௌரவம் அந்தஸ்து முதலியவை பறிபோகும். உத்தியோகம் கெடும். பெரும் பழியும் அவப்பெயரும் உண்டாகும். சாதுவாகச் சிவனே என்று ஒதுங்கி இருந்தாற் கூட, பிறர் வலுக் கட்டாயமாக வம்புக்கிழுப்பர். நண்பர்கள் பந்துக்களுடைய பிரீதி பாசம் இப்போது குறைகிறது. எல்லாம் கெட்ட பலனாகவே நடக்கும். தாம்பத்திய சுகம் குறையும். மனைவியுடன் சச்சரவு ஏற்படும். கெட்ட நடத்தையால் உடல்நலம் கெடுவதோடு சமூகத்தில் கெட்ட பெயரும் ஏற்படும், வலுக்கட்டாயமாக, வலுச் சண்டைகளில் ஈடுபடுத்தப்பட்டுக் கஷ்டப்படுவார். இப்படி 10 இல் சுக்கிரன் அசுப பலனே தருகிறார்.

**11. ஜென்மராசிக்குப் பதினொன்றில் சுக்கிரன் வரும்போது-**

தனப்பிராப்தி அதிகமாக உண்டாகும் வீரம், பிரதாபம், புகழ் போன்றவை ஓங்கும். எல்லாக் காரியங்களும் வெற்றியடையும். உயர்ந்த ரக, தரமான, சுவையுள்ள உணவுகள் வேளாவேளைக்குக் கிடைக்கும். எதிலும் தயக்கமோ பயமோ ஏற்படாது. அள்ள அள்ளக் குறையாத பொன் பொருள்கள் சேரும். மனைவியை மகிழ்விப்பதில்

வல்லமை ஏற்படும். வீரனாக மாறுவார். இசையில் வல்லவ ர்ாவார். அதனாலும் சம்பாத்தியம் ஏற்படும். (ஏதாவது கலைத்தேர்ச்சி மூலம் என்று கொள்ளலாம்.) கல்வியில் பெரியவனாகிறார். பண்டிதனாகிறார். பூமி, மனை, வீடுகள் முதலியவை கிடைக்கின்றன. பிறரிடம் கருணை யும் இரக்கமும் ஏற்படும். சுக்கிரன் 11 இல் சரராசியாகி நின்றால். வெளிநாட்டுப் பயணங்களும் அதனால், ஆதாய மும் ஏற்படும்- இவருக்கு நிறைய நண்பர்கள் ஏற்படு வார்கள். அவர்களால் நன்மைகளும் உண்டாகும். சுகந்த பரிமள திரவியங்கள் சேரும். முழுமையான தாம்பத்திய சுகமும் பெறுவான். அன்னபானாதி உணவுப் பொருள்கள் வீட்டில் நிரம்பி வழியும். பொருளாதாரம் பலமுனை யிலிருந்தும் வரும். பண வரத்தால் மிகவும் உயரும். ரொக்கச் சேர்மானம் வங்கியிலே அதிகமாகும். இதனால், வருமான வரி பற்றியும் சிந்திக்க வேண்டி வரும். 12 ஆம் இடத்தில் சுக்கிரனால், எல்லா வகையான நன்மைகளும் உண்டாகும்.

**12. ஜென்மராசிக்கு 12 இல் சுக்கிரன் வரும் போது —**

தனப்பிராப்தியும் வஸ்திர ஆபரணாதிச் சேர்க்கையும் ஏற்படும். பூர்ண சயன சுகம் ஏற்படும். உற்ற நண்ப னாகப் பிறருக்கு நன்மைகள் செய்வார். மனைவியிடம் மிகவும் அன்புடையவராக இருப்பார். அவளை அன்புடன் போற்றிப் பாதுகாப்பார், மந்திரி போன்ற உயர் பதவிகள் கிடைக்கும். சிற்றின்ப வகைகளுக்காக தம் வருமானத் தையும் செலவழித்து விடுவார். பலரையும் விரோதம் பண்ணிக்கொள்வார். கார் போன்ற உயர்வகை வாக னங்கள் கிடைக்கும். இந்தச் சமயம், இவர் வாழ்க்கை பூலோகத்தில் சொர்க்கமாக இனிக்கும். ''அர்த்த பிராப்தி'' அதாவது இந்த 12 ஆம் இடம் விரயமானாலும் சுக்கிரன் இங்கு இருந்தால் நிறையப் பணம் சேரும். போகப் பொருள்கள் நிறைய கிடைக்கும். ஆனால் பெரும்பகுதி

நஷ்டமாகி விடும். சுக்கிரன் 12 இல் எல்லா வகையிலும் சுப பலனையே தருகிறான்.

குறிப்பு : சுக்கிரனும் பூரண சுபக் கோள்கள் குரு இம்மை மறுமை இரண்டுக்கும் வேண்டியவற்றையும் தருபவர். சுக்கிரன் இம்மைக்கே உரிய இன்பத்தையும் மற்ற வசதிகளையும் தருபவர். சுக்கிரனால் ஏற்படும் பலன்களில் ஜோதிஷக் கிரந்தங்களில் பெண்ணால் வரும் சுகத்தைத் தருபவனாகவே பேசப்படுகிறார். எப்படியும் சுக்கிரன் சுபத்துவம் பெற்றால், தாம்பத்திய சுகம் பூரண மாக நிறைவு பெறும் என்று மட்டும் கொள்ள வேண்டும். பெண்கள் விஷயத்தில், அவர்கள் தங்கள் கணவன்மார் களை முழுமையாகத் திருப்திப் படுத்தும் தகுதியை அவர் களுக்குச் சுக்கிரன் தருவதாகக் கொள்ள வேண்டும்.

அத்தியாயம் — 19

# சனியின் ராசி பலன்கள்

சனி ஜன்ம ராசிக்கு 3, 6, 11 ஆம் இடங்களில் சுப பலன்களைத் தருகிறார். மற்ற இடங்களில் அசுப பலன் களையே தருகின்றார். சனியின் ராசி பலனை விரிவாகக் காண்போம்.

## 1. ஜென்ம ராசிக்கு சனி வரும் போது—

சனி ஜென்மச் சனியாகத்தான் எல்லாவற்றையும் விட அதிகமாகக் கொடிய பலனைத் தருகின்றான். உயிர்க்குக் கண்டம், நோய்கள், பிறருடன் விரோதம், தன விரயம், சிறைப் பயம், மான கௌரவ பங்கம், மாரக பயம் எல்லாம் உண்டாகும். தலை நோய், வைசூரி, பேதி போன்றவையும் தோன்றும். ஜல கண்டம் ஏற்படும்.

பித்த வாத ரோகங்கள் ஏற்படும். யாருக்காவது இவர் கர்மம் (நீத்தார் கடன்) செய்ய வேண்டியது வரும். உண வின் நச்சுத் தன்மையால் (Food Poisoning) தீரா நோய் ஏற்படும். தீ விபத்துகள் ஏற்படும். இவரே தம் உறவினர் ஒருவர் மரணத்துக்குக் காரணம் ஆகிறார். உடல் ஒளி கெட்டுத் தோற்றப் பொலிவு அழிகிறது. உடல் கருத்துத் தோன்றும். உறவினர்களும் நண்பர்களும் பிரிவர். குழந்தைகளுக்கு நோய் காணும். வீண் அலைச்சல் அதிக மாகும். சிறைப் பயம் அல்லது சிறைவாசம் உண்டாக லாம். தொங்கிய முகத்துடன் பிறரிடம் சென்று கையேந்தி நிற்க வேண்டியது வரும். ஏதாவது ஒரு பெரிய சிக்கலில் மாட்டிக்கொண்டு விடுபட முடியாமல் தவிப்பார். கத்தி மற்றும் கூர்மையான ஆயுதங்களால் தாக்கப்படும் ஆபத்து முண்டு. மனக் கிலேசமும், உடலுக்கு அளவுக்கு மீறிய உழைப்பால் சோர்வு முதலியவையும் ஏற்படும். இது 7½ சனியில் மிகவும் கொடுமை செய்யும் ஜன்ம சனிக்கால மாகும் நடு 2½ வருஷமாகும். ஆயுர்த்தாயம் நிறைவும் சமீபத்து 7½ சனியும் ஜென்மச் சனியாய் அமைந்து விட் டால், மரணமும் சம்பவிக்கலாம்.

## 2. ஜென்மத்திற்கு 2 இல் சனி வரும்போது—

இது 7½ சனியின் கடைசி 2½ வருஷ காலமாகும். பெரும் அளவில் பண விரயம் அல்லது பெருந் தொகையை மோசடி யால் இழக்க நேரிடும். பொருளாதாரம் கெடும். தரித்திரம் தாண்டவமாடும். மனைவி மக்களுக்கு உடல்நலம் கெடும். பணியாட்கள் வேலையாட்கள் இவரைவிட்டுப் பிரிவர். மான, கௌரவ பங்கம், வீட்டை விட்டுக் கட்டாயமாக வெளியேற வேண்டியது போன்றவை உண்டாகும். பிறரால் ஏவல் சூனியம் போன்ற பாதிப்புகள் தோன்றும். பெரியோர்களின் கோபத்துக்கு ஆளாக வேண்டி வரும். நேத்திர ரோகம் ஏற்படும். இவருக்கு இச்சமயம் இன்னொரு மனைவியும் அமையலாம். மனைவியால் ஏமாற்றம் ஏற்படுவ

தும் உண்டு. சொத்தில் பெரும் பகுதியும் நஷ்டம் ஆகும். சந்ததிக்குத் தொல்லையும், அவர்களால் இவருக்கு கஷ்டமும் ஏற்படும். ஆரோக்கியம் கெடும். தோற்றப்பொலிவு மறையும் ஆண்மையும் வலிமையும் குறையும், முறைமாறின வழிகளில் பணம் சம்பாதிக்க வேண்டியது வரும். பதவி நாசம், நிர்ப்பந்த இடமாற்றம் ஆகியவை தோன்றுகிறது. மனக்கிலேசம். தேவையற்ற சண்டை, உறவினருடன் பகை ஆகியவை ஏற்படுகிறது. பணப் பற்றாக்குறையால் பிறரிடம் சென்று கடன் பெற்றாலும், அதனால் பயன் அடைய முடியாமல் வேறு வழிகளில் அது வீண் விரயமாகி விடும். இது 7½ சனியின் கடைப்பகுதி. மூன்றாம் சுற்றாகி மாரக தசை. ஆயுர்தாய ஆயுள் முடிவு கூடி வந்து, ஜென்ம சனியில் எதுவும் நேராவிட்டால் இப்பொழுது மாரகபயம் ஏற்படுவது உண்டு. 2 இல் சனி எவ்வகையிலும் அசுபனே.

3. ஜென்மத்திற்கு 3 இல் சனி வரும்போது—

நோய்கள் நீங்கி ஆரோக்கியம் ஏற்படும். எல்லாக் காரியங்களும் வெற்றி அடையும். உத்தியோகம், பதவி உயர்வு ஏற்படும். எல்லாம் முழு நன்மையாகவே நடக்கும். இவரது ஊரில் இவருக்குத் தலைமைப் பதவிகள் ஏற்படும். தினமும் பாற்சோறும் உயர்தர உணவும் வேளைதவறாமல் கிடைக்கும். அஷ்ட லக்ஷ்மி கடாக்ஷமும் ஏற்படும், இந்த 2½ வருஷமும் பெரிய ராஜயோகமும் எடுத்த காரியமெல்லாம் வெற்றி அடைதலும் கைகூடும். உயர்ரக வாகன வகைகளும் ஏற்படும். உடன்பிறப்புக்கு ஏதாவதுஅதிர்ஷ்டம் ஏற்படும், நண்பர்களின் உதவிகள் ஏற்படும. ஆளடிமையும் பணியாட்களும் அமைவர். இருக்க வசதியான வீடும் அமையும்.ஒருவர் கோழையாயினும் இந்த 3 இல் சனியுள்ள சமயத்தில் வலிமையான பகைவனையும் சீறிப் பாய்ந்து வெல்லும சிங்கமாக மாறிவிடுவார். பாக்கிய விருத்தி ஏற்படும். போக சுகம் முழுமையாகக் கிடைக்கும். யானை குதிரை எருமை போன்ற, வாகன கால்நடைச் செல்வம் ஏற்படும். கார்

போன்றவை கிட்டும். எல்லா வகையிலும் கலப்பற்ற பூரண சுபபலன் சனி 3 இல் உள்ளபோது ஒருவருக்கு ஏற்படுகிறது.

**4. ஜென்மத்திற்கு 4 இல் சனி வரும்போது—**

இது மிகவும் கெட்ட பலன் தருவதாகும். இது அர்த்தாஷ்டமச்சனி, அல்லது கண்டச்சனிஎன்றும் சொல்லப் படும். இது சமயம் அரசாங்கத்தால் கெடுபிடியும் பகையும் ஏற்படும். கால்நடைகள் பாழாகும் முன் சேர்த்துவைத்த பணம் அழியும். வீட்டை நாட்டை விட்டு, எல்லாவற்றையும் விட்டுக் கொடுத்து விட்டு, வெளியூர்களுக்குச் செல்ல வேண்டியது வரும். மாரக தசை நடந்தால் உயிருக்கும் கண்டம் ஏற்படலாம். வீடுபோன்ற சொத்துகளும் கை நழுவும். மனைவியுடன் பகையும் பிரிவும் ஏற்படும். பந்து ஜனங்களை விரோதம் பண்ணிக்கொள்ள நேரும். ஏதாவது துக்கத்தால் கஷ்டப்பட்டுகொண்டே இருப்பார். வாதநோயில் வாதம், பக்க வாதம் போன்ற நோய்கள் ஏற்படும். கால் இழுத்துக் கொண்டு ஒரு கால் முடமாகவும் நேரலாம். நாய்க்கடித் தொல்லை, மாடு முட்டல் போன்ற இன்னல்களும் ஏற்படும். மனைவி, மற்றும் உறவுப் பெண்களுக்கு நோய் காணும். இவருக்கே கண்டம், தரித்திரம் மேலிடும். சுகம், சௌக்கியம், தூக்கம் எல்லாம் கெடும். மனம் எப்பொழுதும் கெட்டதையே எண்ணிக் கொண்டிருக்கும். மானம், மரியாதை, கௌரவம் எல்லாம் பறிபோகும். நிழலுக்கு ஒதுங்கக்கூட இடமின்றி, வீடுவாசலின்றி, இவர் அலையலாம். எதிலும் பயமும் தயக்கமும் ஏற்படும். வாழ்க்கையின் அடிமட்டத்திற்கு தள்ளப்பட்டு, அங்கேயே தவிக்க வேண்டியது வரும். பகைவர்களாலும் வேண்டாதவர்களாலும் மிகுதியான தொல்லை ஏற்படலாம். சதா காலமும் எதைப் பற்றியாவது கவலை இருந்து கொண்டே இருக்கும். தனக்கு எப்பொழுது கெட்டதே நேரும் என்ற உள்ளுணர்வும் இருந்து கொண்டே இருக்கும். குதர்க்க புத்தியும், கெட்ட சிந்தையும் இருந்து கொண்டே

இருக்கும். ஆக, எப்படியும் 4-இல் சனி மிகக்கொடியவனே, ஆவான்.

## 5. ஜென்மத்திற்கு 5-இல் சனி வரும் போது—

சந்ததிக்கு அரிஷ்டம் ஏற்படுகிறது. புத்தி சரியாகச் செயல்படாமல் தகுந்த முடிவு எதுவும் எடுக்க முடியாமல் சில முக்கியமான திட்டங்கள் நிறைவேறாமல் பாழாகும். ஏதாவது விபத்து முதலியவற்றால் அங்க ஈனம் ஏற்படக் கூடும். பணம் கரையும். வறுமை மேலிடும். ஏதாவது இழிசெயல் செய்தாவது பிழைக்க வேண்டியது வரும். மனக்கலக்கமும் ஏற்படும். நடத்தை கெட்ட பெண்களின் உறவால் பொருளும், பணமும் கெடும். பல நடன் பலவகைச் சண்டைகளில் ஈடுபட நேரிடும். அன்றாடச் செலவுக்குக்கூட பணம் இல்லாமல் அவதிப்படலாம். எந்த ஸ்திரமான உருப்படியான காரியமும் நிறைவேறாது. குழந்தைகள் யாருக்காவது மாரகம் ஏற்படலாம். பந்து ஜனங்களைப் பகைத்துக் கொள்வார். குழந்தைகுட்டிகளை விட்டுப் பிரிவார். சோகம், புத்திரஹானி போன்றவை உண்டாகலாம், எனவே, எல்லா வகையிலும் சனி 5-இல் அசுப பலனையே தருகிறான்.

## 6. ஜென்மராசிக்கு 6–இல் சனி வரும் போது—

எல்லா வகையிலும் பொன்னும், பொருளும் சேரும். தன் குடும்பத்தினரால் உதவிகள் ஏற்படும் சுகபோகம் ஏற்படும். சத்ரு நாசம் ஆகும். புதுவீடு கட்டுதல் போன்ற எல்லாமே நல்லதாக நடக்கும், அந்தஸ்து, பதவி, கௌரவம், உத்யோகம் அல்லது அதில் உயர்வு எல்லாமே தேடிவரும். சாதாரண உணவுக்குப் பதிலாகத் தினமும் உயர்தர உணவாகவே கிடைக்கும். இந்த $2\frac{1}{2}$ வருஷமும் இவர்களுக்கு ராஜயோகம்தான். (ஜாதகத்தில் ராஜயோகம் அமையாவிட்டாலும்) இது யோக காலமாகவே நடக்கும்.

நிறையப் பணமும், வாகன வகைகளும் கிடைக்கும். நீடித்த நோய்கள் நீங்கும். தேகம் திடம்பெறும்; புத்தொளி பெறும். அதற்கேற்ப அதிக உணவே உட்கொள்ளலும் அதைச் செரித்துக் கொள்ளும் சக்தியையும் பெறலாம். பகைவர்களை வென்று விடுவார். எல்லா விதத்திலும் சுகமும் சௌக்யமும் ஏற்படும், ஆண் குழந்தை ஏற்படும். எனவே, சனி 6-இல் எல்லா வகையிலும் நல்ல பலனே தருகிறார்.

## 7. ஜென்மத்திற்கு 7-இல் சனி வரும் போது—

ஏதாவது வகையில் கஷ்டம், மனைவிக்கு மாரக பயம் பண விரயம், சேர்த்த சேமிப்பு அழியும். தான் இருக்கும் இடத்தை விட்டு விருப்பத்திற்கு மாறாகப் பிற இடங் கட்குப் போக வேண்டியது வரும். பயணம் செய்யும் போது வழியில் விபத்துப் பயம் ஏற்படும். கால்நடைச் செல்வம் பாழாகும். வேலையாட்கள், பணியாட்கள் விட்டுப் பிரிவர். மான, கௌரவ பங்கமும், பதவி நாசமும் ஏற்படலாம். தீராத தலைநோய் ஏற்படும். சுமையும் தூக்கிப் பிழைக்க வேண்டியது கூட வரும். சரீரத்தில் ஏதாவது தோஷம், நோய் இருந்து கொண்டே இருக்கும். கெட்ட நடத்தையால் பெயர் கெடும். உடல் நலமும் கெடும். காரணமற்ற குறிக்கோளற்ற பயணங்கள் ஏற்படும். மனத்தில் ஏதாவது பயம், திகில் இருந்து கொண்டே இருக்கும். சோகம், உறவினர் மறைவு போன்றவை ஏற்படும். பெரும் பசி காணும். மிகக் கீழ்நிலையில் அன்றாடப் பிழைப்புக்குக் கூட வழியின்றிப் பிறரிடத்தில் கையேந்த வேண்டியதும் வரும். 7-இல் சனி கண்ட சனி எனப்படும். இதில் சனி அசுப பலனைக் கொஞ்சம் அதிக மாகவே தருகின்றார். இருக்க இடமின்றி, ஒரு குறிக் கோளின்றிப் பல இடத்திலும் அலைந்து கொண்டே இருப்பார். இது சமயம் வெளி தேச வாசமும் இவருக்கு

ஏற்படும். ஆனால் அங்கும் இவருக்குப் பலவகைக் கஷ்டங்கள் இருந்து கொண்டே இருக்கும். 7-இல் சனி எல்லா வகையிலும் அசுப பலனையே தருகிறார்.

**8. ஜென்மத்திற்கு 8-இல் சனி வரும் போது—**

தீராத வயிற்று நோய், பண நஷ்டம், எல்லாக் காரியங்களும் தோல்வியுறுதல், நிலை இல்லாத வாழ்க்கை, கால்நடைகளின் அழிவு, பலவகையான நோய்கள், சந்ததிக்கு அரிஷ்டம், நண்பர்களுக்குக் கஷ்டம் என்னும் இவை பலவும் ஏற்படுகின்றன. அரசாங்கத்தால் தொல்லைகளும், சிறைத் தண்டனையும் ஏற்படலாம். மாரக தசை நடப்பவர்களுக்கு உயிருக்குப் பயம், மான கௌரவ பங்கம், மனைவியுடன் பகை, பலவகைத் தடங்கல்கள், தண்டச் செலவுகள், வீண் செலவுகள், குற்றம் முதலியவற்றிற்கு அபராதத் தொகை செலுத்துதல் போன்ற வகையில் பணம் கரையும். வேண்டாத, வசதியற்ற ஊருக்கு மாற்றலாகி அவதிப்படுவார். கண்ணோய்கள் ஏற்படும். இது சமயம் கூசாமல் பொய் பேசுவார். மீள்வதற்கு வழி இல்லாமல், கீழ்த்தரமான துர்ச்சீவனமும் பண்ணுவார். வறுமை மிகுதியால் பட்டினி கிடக்க வேண்டியதும் வரும். மனதை ஏதாவது துன்பமோ, கவலையோவாட்டிக் கொண்டே இருக்கும். ஒரு பெண்ணால் அவப்பெயர் ஏற்படலாம். யாருக்காவது அடிமையாக இருக்க வேண்டியது வரும். கடுமையான உழைப்பின் மூலம் தான் வயிறு நிறையும். ஆபத்துக்கள், விபத்துகள் ஏற்படும். அதிகம் பசியும் இருக்கும். மனக் கவலையும் இருந்து கொண்டே இருக்கும். 8-இல் சனி அஷ்டமச் சனி எனப்படும். ஏழரைச் சனியை அடுத்து இது பெரும் கஷ்டத்தைத் தருவதாகும்.

**''சொல்புத்தி கேட்காத பிள்ளையோ யாரெனின்**
**அஷ்டமச் சனியாகுவான்''**

என்று அறப்பளீசுரச்சதகம் கூறும். இதனால் அஷ்டமச்

சனிக் காலத்தின் போது, இவர் பிள்ளைகள் கூட இவர் பேச்சைக் கேட்கமாட்டார்கள். இவர் வார்த்தைக்கு யாரிடத்திலும் மதிப்பிருக்காது என்று கொள்ள வேண்டும்.

**9. ஜென்மத்திற்கு 9-இல் சனி வரும் போது—**

இதற்குத் தமிழ் நூல்கள் நல்ல பலன்களே கூறியுள்ளன. அதன்படி இந்த இரண்டரை வருஷ காலமும் தனிப்பட்ட முறையில் ராஜயோகத்தை இவர் அனுபவிப்பார். எடுத்த முயற்சிகள் எல்லாம் வெற்றி அடையும். புதிய பெண்கள் தொடர்பும் உண்டாகும். ஊரில் முக்கிய நபர் என்று பெயர் எடுப்பார். பலவகையான உயர்ந்த வாகனங்கள் அமையும். கட்டளை இடும் படியான பெரிய பதவிகள் தேடி வரும். போஜன சுகம் கைகூடும். செல்வம் சேரும். ஆளடிமைகள், வேலையாட்கள் அமைவர்.

வடமொழி நூல்களின் கொள்கைப்படி 9-இல் உள்ள சனிக்குக் கெட்ட பலனே கூறியுள்ளது. அதன்படி பணம் வீணாகச் செலவாகும். புண்ணிய தரும காரியங்கள் நடக்காமல் தடைப்படும். தகப்பனுக்கு அல்லது அவருக்குச் சமமான ஒருவருக்கு அந்திமக்கடன் செய்ய வேண்டியது வரும். நித்தியமும் ஏதாவது சோகம் அல்லது துக்கம் இருந்து கொண்டே இருக்கும். எட்டாமிடத்திற்குச் சொன்ன துர்ப்பலன்கள் பல இங்கும் ஏற்படும். பலவித நோய்கள், ஆபத்து, விபத்துகள் ஆகியவையும் உண்டாகும். பணம் வரும் வழிகள் தடைபடும். பூர்வ புண்யம் குறையும். நல்ல வாய்ப்புகள் எல்லாம் கை நழுவும். அதிர்ஷ்டக் கட்டையான காலமாக இது இருக்கும். சௌபாக்கியம் புண்ணியம் ஆகியன குறையும். கெட்ட பாவச் செயல்களிலேயே மனம் ஈடுபடும். ஆகத் தமிழ் நூல்களின் சுப பலனும், இங்கு சொன்ன அசுப பலனும் இரண்டும் சேர்ந்து மத்திம பலன் நடக்கும் என்று

கொள்ள வேண்டும். சிறைப் பயம், குடும்பப் பிரிவு, பலவகை நோய்கள் முதலியன நேரும். தெய்வ நம்பிக்கையும் ஒழுக்கமும் குறையும். நித்திய அனுஷ்டானங்களை மறப்பர். இப்படி அசுப பலன்களைக் கூட்டிச் சொல்ல வேண்டும்.

## 10. ஜென்மராசிக்குப் பத்தில் சனி வரும்போது—

பதவி உத்தியோகத்திற்குப் பங்கம் வரும். வேண்டாத இடமாற்றம் ஏற்படும். செய்வினை, பில்லி சூனியம் போன்ற பாதிப்புகளின் அச்சம் ஏற்படும். மனப்பயம் கூடும். கவலை மிகும், கருமித்தனம் மேவிடும். காசித்தல யாத்திரை மேற்கொள்ளலாம் (அதாவது அதிக காலம் வீட்டை விட்டுப் பிரிந்து வாழ்வார்.) அதிக உழைப்பும் குறைந்த வருவாயும் உள்ள வேலைகளில் ஈடுபட்டு, கஷ்ட ஜீவனம் பண்ணுவார். பலனற்ற வேலைகளில் ஈடுபடுவார். வீண் அலைச்சல் மிகும். தன நஷ்டமும் கல்விக்குப் பங்கமும் ஏற்படும், தோல்வி ஏற்படும். பலவித நோய்கள் பற்றிக் கொள்ளும், அவச்சொல் பெரும் பழி எல்லாம் அடிக்கடி வரும், இதயரோகம் இவருக்கு ஏற்படும். மனை பங்கம், கௌரவ பங்கம் ஏற்படும். ஓயாத உழைப்பும் அதை செய்ய முடியாத களைப்பும், அதற்குக் குறைந்த பலனும்தான் இருந்து கொண்டு வரும், புத்தித் தெளிவு சிறிதும் இராது. நிர்ணயத்திறன் குறையும், லாப மில்லாத ஆதாய மில்லாத வேலைகளைச் செய்வர், இப்படிப் பலவகையிலும் கஷ்டமே ஏற்படும். சனி எவ்வகையிலும் 10 ஆம் இடத்தில் அசுப பலனே தருகிறார்.

## 11. ஜென்ம ராசிக்கு 11-இல் சனி வரும்போது —

பல வழிகளிலும் பணம் சேரும். நோய்கள் நீங்கித் தேக பலமும் புதுப் பொலிவும் ஏற்படும். புதுத் தெம்பு உற்சாகம் கூடும்; உயர்ந்த அதிகாரி, அமைச்சர் போன்ற பதவிகள்

கிடைக்கும். பெண் குழந்தை பிறக்கும். கௌரவமும் அந்தஸ்தும் ஏற்படும். கட்டளை இடும் பெரும் பதவிகள் வந்து அடையும். பெரிய மனிதர் என்று பெயரெடுப்பார், காம இச்சை அதிகமாகும். அது நிறைவேறும். முழுமையான சுக சௌக்கியம், ஏற்படும். தவறான உறவுகளிலும் சிலர் மனம் செல்லலாம், அளவுக்கு மீறிய முரட்டுத் தனம் ஏற்படும். மாற்றான் பணமும் வந்து சேரும். பல நண்பர்கள் கிடைப்பார்கள்; உதவுவார்கள். எல்லாக் காரியங்களாலும் இலாபமும் உண்டாகும். வீட்டில் தேவையான அனைத்து உணவுப் பொருள்கள், மற்றும், வசதியான வாழ்க்கைத் தேவைகள் நிரம்பி வழியும், எல்லா விதத்திலும் இந்த $2\frac{1}{2}$ வருஷம் பூராவும் ராஜயோகம் நிறைந்த சுபயோக சந்தோஷ வாழ்க்கையே இருக்கும். எல்லா வகையிலும் சனி 11–இல் நல்லதையே செய்வார்.

## 12. ஜென்மத்துக்கு 12 இல் சனி வரும் போது—

தரித்திரம், நஷ்டம், பயனற்ற அலைச்சல் ஆகியவை தரும். வெகு தூரப் பயணங்கள் ஏற்படும். கட்டுக் கடங்காத அளவுக்கும், சக்திக்கும் மீறிய செலவுகள் ஏற்படும். மனத்தில் எப்பொழுதும் சங்கடமும் கவலையும் இருந்து கொண்டே இருக்கும். வேலை இல்லாமை, அதனால் வருவாய் இல்லாத நிலை, எந்தத் தொழிலையும் செய்ய முடியாமை, செய்ய மனமில்லாமை, என்னும் இவை உண்டாகும். உள்ள பணமெல்லாம் பல வழிகளிலும் நஷ்டமாகும். மாரக தசை நடந்து, ஆயுர்த் தாயமும் ஆயுள் முடிவு நெருங்கியிருந்து, இது மூன்றாம் சுற்று $7\frac{1}{2}$ சனியாகவும் அமைந்தால், உயிருக்கே கண்டம் ஏற்படலாம். மான பங்கம், கௌரவ பங்கம் போன்றவை ஏற்படும். சிந்தை தெளிவின்மையால் சரியான முடிவு செய்ய முடியாமல் எல்லாக் காரியங்களும் கெடும். மனைவி மக்களை விட்டுப் பிரிய நேரும். கால்நடை அழியும். விருப்பத்திற்கு மாறாக வெளியூர், வெளிநாடுகள் போக வேண்டி வரும். 12 ஆம்

இடம் $7\frac{1}{2}$ சனியின் ஆரம்ப $2\frac{1}{2}$ வருஷ காலமாகும். எனவே, $7\frac{1}{2}$ சனியின் தனிக் கொடிய பலன்களே ஏற்படும். இதுமுதல் $7\frac{1}{2}$ வருஷங்களுக்குத் தீமையே தரும். இந்த $7\frac{1}{2}$ சனியின் தனிப் பலன்களைப் பின்னால், தனித் தலைப்பின்கீழ் விளக்கியுள்ளோம். அங்குக் கவனித்தறியவும்.

அத்தியாயம் — 20

# ராகுவின் ராசி பலன்கள்

வடமொழி நூல்களில், ராகு, கேதுக்களுக்குக் கோசார ராசிபலன் எதுவும் கூறப்படவில்லை, பெரிய வருஷாதிநூல், சோதிடக் களஞ்சியம் இரண்டிலும் மட்டும் சங்கிரகமாக [சுருக்கமாகக்] கூறப்பட்டுள்ளன. அதனைக் கருத்தில் கொண்டும், எமது அனுபவத்தின் அடிப்படையிலும், இங்கு இவற்றுக்கு பலன் எழுதப்படுகிறது. இங்கே 'அனுபவம்' என்ற சொல் ஜோதிட சாஸ்திரக் கர்த்தாக்களான ரிஷி முனிவர்களுடைய கருத்துக்குட்பட்டதாகும். ''சனிவத் ராகு! குஜவத் கேது!'' என்ற வசனப்படி, சனியைப்போல் ராகுவும், செவ்வாயைப்போல் கேதுவும் பலன் தருகின்றனர். இப்பொழுது ராகுவின் பலனைப் பார்ப்போம்.

### 1. ஜென்ம ராசிக்கு ராகு வரும்போது—

தீராத கஷ்டமும், நஷ்டமும் பலவித நோய்களும் ஏற்படுகின்றன. இந்நோய்கள் காரணம் கண்டு பிடிக்க முடியாதவையாகவும் கவலை தருபவையாகவும் இருக்கும். செய்வினை ஏவல் போன்ற அபிசாரத் தொல்லைகளும் உண்டாகும். தாய் தந்தையருக்கு அரிஷ்டம் கண்டம் ஆகியவையும் ஏற்படும்.

2. ஜென்ம ராசிக்கு 2 இல் ராகு வந்தால்—

சேர்த்துவைத்த பணம் அழியும், செலவுகள் அதிக மாகும். வறுமை மேலிடும். உணவில் ஏற்படும் நச்சுத் தன்மை யால் (Food Poisoning) பலவகையான சீரணக் கோளாறு களும் மற்ற நோய்களும் தோன்றும். குடும்பத்தில் குழப்பம், கெட்ட சூழ்ச்சிகள், ஒரு விதவைப் பெண்ணால் கலகம், ஏவல் செய்வினை போன்ற தொல்லைகள் ஆகியவை நேரும். மனைவி, குழந்தைகளுக்கு அரிஷ்டம் நேரலாம்; நோய்கள் ஏற்படலாம்.

3. ஜென்ம ராசியிலிருந்து 3 இல் ராகு நின்றால்—

எல்லா நல்லபலனும் உண்டாகும். பல வழிகளிலும் சுக சௌக்யமும் உண்டாகும். பல முகாந்திரங்களில் லாபமும் தனவரவும் குறையின்றிக் கிடைக்கும். மனோ தைரியம் ஓங்கும். ஆண்மைச் சக்தி அதிகரிக்கும். வேற்றுப் பெண் உறவும் ஏற்படலாம். போஜன சுகம் உண்டாகும். சகோதர உதவிகள் கிட்டும். மனைவி மக்கள் மிகவும் உடல் நலம் பெற்றுச் செழித்து விளங்குவர். புதுப் புது பதவிகளும் அதனால் வருவாய்ப் பெருக்கமும் ஏற்படும். பாகு, தேன், பாற்சோறு ஆகியவை கிட்டும். சத்துருக்களின் தனம் இவருக்கு வந்து சேரும்.

4. ஜென்ம ராசிக்கு 4 இல் ராகு வரும்போது—

பலவகைப் பிணிகள் உண்டாகும். மருத்துவரின் கவனக் குறைவால் சிக்கலான உடல் நலக் கோளாறுகள் ஏற்படும். சத்துருக்கள் அதிகமாவர். எவருடைய பிரிவினாலாவது சோகம் உண்டாகும். பலரையும் விரோதித்துக் கொள்வார். தாய்க்கு அரிஷ்டம் உண்டாகும். வாகனாதிகளால் விபத்து உண்டாகும். யாத்திரையில் துன்பம் ஏற்படும். தூக்கம் குறையும். கவலை மிகும், மனைவி குழந்தைகளுக்கு உடல்

நலம் கெடும். கல்வியும் கெடும். பூமி, மனை, சொத்து போன்றவை தங்காமல் கைமாறும்.

**5. ஜென்ம ராசிக்கு 5 இல் ராகு வரும்போது—**

பொருளாதாரம் பெரும்பாலும் சீர்குலைந்து போகும். வீண் விரயம் ஏற்பட்டு வறுமை குடியேறுகிறது. புத்திர சோகம் அல்லது புத்திர தோஷம் ஏற்படுகிறது. புத்திக் கலக்கம், தெளிவின்மை, எல்லாக் காரியங்களையும் முறை மீறித் தலைகீழாகச் செய்யும் குணம் போன்றவை ஏற் படும். தாய் தந்தையருக்கு அரிஷ்டம் ஏற்படுகிறது. மனைவிக்கு உடல்நலம் கெடுகிறது. சனிக்கு 5 இல் சொன்ன பலன்களே இதற்கும் நடக்கும்.

**6. ஜென்மத்திற்கு 6 இல் ராகு வரும்போது —**

பலவகையிலும் தனம் வந்து குவியும். எல்லாக் கஷ்டங் களும் நீங்கிச் சுகமும் நிம்மதியும் உண்டாகும். தனியாகப் பொருள் சம்பாதிப்பது மட்டுமில்லாமல், எதிராளியின் தனமும் வந்து சேரும். சத்ருநாசம், ரோக நாசம் ஏற்படும். தெலுங்கு அல்லது உருது மொழி அல்லது வேற்று மொழி பேசும் ஒரு பெண்ணின் நேசம் ஏற்பட்டு, அதனாலும் வாழ்க்கையில் முன்னேற்றம் உண்டாகலாம். புத்தி சாதுரியத்தால்பொருள் சேர்ப்பார். தான்வாழும் இடத்தில் இவருக்கு அதிக மதிப்பும் மரியாதையும் ஏற்படும். தாய் மாமன் வகையினாலும் இவருக்கு நன்மை உண்டாகும்.

**7) ஜென்ம ராசிக்கு 7இல் ராகு வரும்போது—**

பலமுனைகளிலும் தீராத அவமானம் ஏற்படுகிறது. வீண் விவாதங்களால் பலர் விரோதத்தையும் சம்பாதித்துக் கொள்வார். பலவகையிலும் துன்பமும் நஷ்டமும் ஏற்படு கிறது. உறவினர் மற்றும் நெருங்கிய நண்பர்களின் பிரிவால் சோகம் உண்டாகிறது. மனைவிக்கு உடல்நலம் கெடும். ஒரு

பெண்ணால் அவமானமும், உடல்நலக் கேடும் உண்டா கிறது. பரதேச வாசம் ஏற்பட்டு அங்கும் தாங்க முடியாத கஷ்டம் ஏற்படுகிறது. சொத்து வகைகள் நாசமாகும். சிலருக்கு மேக ரோகம், மனைவியுடன் சண்டை, தன்னை விட மூத்தவளுடன் தகாத உறவு எல்லாம் ஏற்படுகிறது.

8. ஜென்ம ராசிக்கு 8 இல் ராகு நின்றால் —

எல்லா வகையிலும் ஏதாவது துன்பம் காணப்படும். மாரக பயம் உண்டு. ஆயுட் பிரமாணம், 7½ சனி இவற்றை அனுசரித்துக் கண்டம் உண்டு. பலவிதமான நோய்கள் வரலாம். எதற்கெடுத்தாலும் இனந்தெரியாத பீதி ஏற்படும். ஜனனேந்திரியத்தில் நோய் காணலாம். கோர்ட் கேஸ் வகைகளில், பிறர் சூழ்ச்சியால் தோல்வியும் சொத்திழப்பும் ஏற்படலாம். விருப்பமற்ற இடமாற்றம் உண்டாகும். ஈடுபடும் எல்லாத் தொழிலும் பாழாகும். வைசூரிபோன்ற நோய்கள் ஏற்படலாம், மருத்துவத்திற்கும் புரியாத (Undiagnosable) நோய்கள் காணும், காரியத்தடையும், நகை நட்டுகள் களவு போதலும் ஏற்படும்.

9) ஜென்ம ராசிக்கு 9இல் ராகு வந்தால்—

தனம் விரயமாகும். தரித்திர நிலை தோன்றும். சுகம் கெடும். எந்த முயற்சியும் ஈடேறாது, வேண்டியவர் பிரிவர். அதனால் கஷ்டம் உண்டாகும். கூடா நட்பால் தொல்லையும் நஷ்டமும் ஏற்படும். பாப காரியங்களில் சிந்தை செல்லும். பிறமத ஒழுக்கத்தை மேற்கொள்ள லாம்; தரும, புண்ணிய காரியங்களில் நாட்டம் இராது. சகோதரர் அல்லது தாய். தந்தை ஆகியோருக்குப் பீடை ஏற்படும். சொத்துச் சுகம் நஷ்டமாகும். மாந்திரீகம், ஏவல், வைப்பு, அபிசாரம் போன்ற விந்தைகளில் (Block magie) ஈடுபாடு ஏற்படும்.

10) ராகு ஜென்மத்திற்குப் பத்தில் நின்றால்—

பொதுவாக 10இல் ராகு அசுர பலன் தருவதாகவே கூறப்படுகிறது. ஆனால், ''பத்தில் ஒரு பாம்பேனும் வேண்டும்'' என்ற பழமொழிப்படி இங்கு ஏறக்குறைய சுப பலனே ஏற்படும் என்று நம்பலாம். பலவழிகளிலும் புகழ் சுகம் எல்லாம் ஏற்படும். ஆனால் தமிழ் நூல்களின் கொள்கைப்படி சொத்துகள் கைதவறும். அரசாங்க ஆதரவு ஆகியவை இல்லாமல் போகும். விருப்பமற்ற வேலை இடமாற்றம் போன்றவை ஏற்படும். செய்வினை முதலியவற்றால் குழப்பமும் அச்சமும் உண்டாகும். தாய் தந்தைக்கு மாரக தசை நடந்தால் இவர் கர்மம் செய்ய வேண்டியது வரும். காசி யாத்திரை செல்லலாம். மனைவியுடன் குழப்பமும் சண்டையும் உண்டாகும். போஜன சுகம் குறையும். தூக்கம் கெடும், மனத்தெளிவும் கவன சக்தியும் இராது. எனவே, முதலில் சுப பலனும், பின்னர் இந்த அசுப பலனும் கலந்து நடக்கும் என்று கொள்ளவேண்டும்.

11. ஜென்மத்திற்கு 11இல் ராகு வரும்போது—

உயர்ரக சுவையான இனிப்பு முதலியவற்றுடன் வக்கணையான சாப்பாடு வேளை தவறாமல் கிடைக்கும். பணம் பலவழியிலும் மேன்மேலும் வந்துகொண்டிருக்கும். மனைவி மக்கள் நோய் நீங்கி புதுப்பொலிவுடன் விளங்கு வார்கள். நகைநட்டுகள் சேரும். சமூகத்தில் மதிப்பும் மரியாதையும் உயரும். தெய்வபக்தி மேலிடும். பிறர் பணம் இவருக்கு வரும். ஆறு கடல் போன்றவற்றின் மூலம் வாணிபப் பெருக்கால் லாபம் ஏற்படும். இப்படிப் பல வகையிலும் 11இல் ராகு சுபபலன் தருவான்.

**12. ஜென்மத்திற்கு 12இல் ராகு வந்தால்**

பணம் நஷ்டமாகும். சக்திக்கும் வரவுக்கும் மீறிச் செலவுகள் ஏற்படும். பலவகை கஷ்டங்கள் ஏற்படும். மனைவிக்கு அரிஷ்டம் உண்டாகும். இதனால் சயனசுகம் கெடும். பூமி, மனை, சொத்து முதலியன பறிபோகும். மருத்துவத்திற்குப் புதிராக இருக்கும் சிக்கலான நோய்கள் ஏதாவது உண்டாகும். உடன்பிறப்புடன் பகை ஏற்படும். தூக்கம் கெடும். காலில் இடறல் முதலியவற்றால் காயம் அல்லது முறிவு ஏற்படும். தைரியமும் தெம்பும் குறையும். ஆரம்பித்த வேலையை விரும்பியபடி செய்யமுடியாதபடி, விபரீதமாக முடியும்.

அத்தியாயம்—21

# கேதுவின் ராசி பலன்கள்

**1. ஜென்ம ராசிக்கு கேது வந்தால்—**

வீண் கவலைகளும் நோய்களும் உண்டாகும். கஷ்டம் நஷ்டம் ஏற்படும். வைசூரி போன்ற வெப்பு நோய்கள், சகோதரர்களுடன் விரோதம், அவர்களுக்குப் பீடை சொத்து நாசம் ஏற்படும். பெண்களுக்கு சமையல் செய்யும்போது ஏற்படும். தீ விபத்துக்களால் நிறம்மாறி அழகு கெடல் போன்றவையும் நேரும். கேது ஞான காரகனானதால் ஞானம் அல்லது பக்தியில் சிலமசயம் நாட்டம் செல்லும்.

**2. ஜென்மத்துக்கு 2இல் கேது நின்றால்—**

பலருடன் பகை உண்டாகும். ்வளைக்கு உணவு கிடைக்காது. கிடைக்கும் உணவும் தரம் கெட்டதாக

இருக்கும். வாய், நாக்கின் அடிப்பாகம் இவற்றில் புண்ணும் உண்டாகும். ஜாதக ரோகஸ்தானம் குறிப்பிட்டால் வாயின் அடிப்பாகத்தில் புற்றுநோயும் உண்டாகும். குடும்ப கலகமும் அமைதியின்மையும் ஏற்படும்.

**3. ஜென்மத்திற்கு 3இல் கேது வரும்போது—**

பிறருடன் மோதல் பூசல் இவற்றில் எல்லாம் வெற்றி உண்டாகும். எல்லா வகையிலும் தனம் மேலும் மேலும் குவியும். மேக நோய்கள் ஏற்படலாம். எச்சரிக்கை தேவை. பலவகைகளிலும் பேரும் புகழும் உண்டாகும். சொன்னசொல் தவறாதபடி நடப்பார். தைரியம் கூடும். பெரிய மகராஜன்போல் வாழவும் வகை ஏற்படும்.

**4. ஜென்மத்திற்கு 4இல் கேது நின்றால்—**

காரணமின்றி எல்லாவற்றிலும் வீண்பயமும், சந்தேகமும் ஏற்படும். சூதாட்டம் (Speculation) சூதாட்ட பேரம் போன்றவற்றில் பெரும் பொருள் இழப்பார். பூமி, மனை, சொத்து கைதவறும் தீ விபத்துகள், வாகன விபத்துகள் ஏற்படலாம். வயிறு இதயம் ஆகியவை நோயால் பாதிக்கப்படும். ஜாதக ரோகஸ்தானப்படி உறுதியானால், கேது கோசாரத்தில் எந்த ராசியில் வருகிறானோ அந்த ராசி குறிக்கும் கால புருஷனின் அங்கத்துக்கு இணையான அங்கத்தில் தீராத நோய் ஏற்படலாம். மற்ற 8 பாவங்களுக்கும் இப்படியே கொள்க. உருவம் மாறி வாழ்வில் வெறுப்பு ஏற்பட்டுத் துறவி ஆகவும் வாய்ப்புள்ளது.

**5. ஜென்மத்திற்கு 5இல் கேது வரும்போது—**

எல்லா வகையிலும் பெரும் கஷ்டம் ஏற்படுகிறது. மனைவிக்குக் கர்ப்பக் கோளாறு அல்லது கருச்சிதைவு ஏற்படும். கேது ஞானகாரகன் ஆகையால் 5இல் புத்தி தெளிவையும் செயல் திறனையும் அதிகமாக்குவான்.

வயிற்றின் கீழ்பாகம் உள்ளும் வெளியும் புண் (அல்சர், முதலியவை ம்றபடலாம், புத்திர சோகம் எற்படலாம், ஆனால் சந்ததிகளுக்கு அரிஷ்டம் ஏற்படும்.

6. ஜென்மத்திற்கு 6இல் கேது வரும்போது—

எல்லா வகையிலும் லாபமும் சத்ரு ஜெயமும் ஏற்படும். தாய்மாமன் வகையில் அரிஷ்டமும் ஏற்பட்டாலும் ஏற்படலாம். வித்துவத்துவமும் வாக்கு வன்மையும் ஏற்படும். அதிக சுகமும், கீர்த்தியும் உண்டாகும். எல்லாவற்றையும் தவறாகப் புரிந்துகொண்டு சங்கடப்படநேரும். வயிற்றில் வலிவந்து நீங்கும். இவர்களுக்கு பெண்கள் வசப்பட்டாலும் அவர்கள்மேல் அவ்வளவு தீவிர இச்சை ஏற்படாது. கடன் அழியும். நோய் நீங்கி ஆரோக்யம் பெருகும். பகை ஒழியும். ஞான முயற்சியும் நற்சிந்தனையில் நாட்டமும் ஏற்படும்.

7. ஜென்மத்திற்கு 7இல் கேது நின்றால்—

சிறிதளவு சோகமும் துன்பமும் ஏற்படும், மனைவிக்கு கருச்சிதைவு முதலியவற்றால் உடல்நலம் கெடும். இல்லாவிட்டாலும், இதுசமயம் அவளிடத்தில் காம சுகம் கிடைக்காமற்போகும். நடத்தைகுறைந்த பெண்களின் தொடர்பு ஏற்படும். இது சமயம் முறைமீறிய (Unconventional) காதல் ஏற்பட்டு, கட்டாய விவாகத்தில் சென்றும் முடியலாம். ஜல கண்டம் உண்டாகலாம், மனைவி, உறவினர் வகையில் சூதகம் (தீட்டு) ஏற்படலாம். பல ஊர்களுக்கும் போய்வரும் வீண் அலைச்சல் ஏற்படும். இவருக்கு எந்தக் காரியத்திலும் ஈடுபட மனமிருக்காது. சோம்பேறித்தனமே மிகுதியாக இருக்கும்.

8. ஜென்மத்திற்கு 8இல் கேது நின்றால்—

ராகுவுக்கு 8இல் சொன்ன பலன்கள் பெரும்பாலும் ஏற்படும். தீராத சங்கடமும், எதற்கெடுத்தாலும் பயமும்

ஏற்படும். ஆண்குறியில் புண் ஏற்படும். பெண்களுக்கு கருப்பாதையில் புண் அல்லது நோய் காணும். உடலில் ஏதாவது பிணி வாட்டிக்கொண்டே இருக்கும். பொன் பொருள்கள் நஷ்டமாகும். கண்ணில் நோய் காணும். ஆச்சாரக் குறைவாக நடப்பார். சிந்தை தெளிவின்றி குழம்பிய நிலையில் இருப்பார். பாம்பு தீண்டும் பயமும் உண்டு. ஆனால் இதுசமயம் மனைவி மிகவும் அனுகூல மாக நடந்துகொள்வாள்.

9. ஜென்மத்திற்கு 9இல் கேது வரும்போது—

எல்லா நிலையிலும் இவருக்குப் பிறரால் அவமானம் ஏற்படும். பிறர் சூழ்ச்சிகளுக்கு ஆளாகவும் நேரும். கபட மாக நடித்துப் பிறர் ஏமாற்றுவார்கள். சூதாட்டம் முதலிய வற்றில் பொருளிழக்கலாம். ஊரை ஏமாற்றும் கபட சந்நியாசியாகவும் இவர் மாறுவார். பலவகை வழக்குகள் ஏற்படும். ஆனால் அவற்றில் இவர் வெற்றி பெறுவார். பொய்களைப் பேசுவார். இவரின் முன்கோபத்தால் பல காரியங்களும் கெடும். மாமனாருக்குப் பீடை யுண்டாகும். இவருக்கும் கஷ்டம், தகப்பனாருக்கும் கஷ்டம் உண்டா கும். ஞானத்திலும் தவத்திலும் நாட்டமும், நல்ல குரு வாய்க்கப் பெற்று அதனால் ஆன்மிக வழியில் அறிவுத் தெளிவும் ஏற்படும்.

10. ஜென்ம ராசிக்குப் பத்தில் கேது நின்றால்—

10இல் ராகுவுக்கு சொன்ன எல்லாப் பலன்களும் ஏறக் குறைய இப்போதும் நடக்கும். பண வரவும் லாபமும் இருக்கும். ஆனால், சூதாட்டம் முதலியவற்றில் ஈடுபட்டுத் தம் பணத்தை இழப்பார், தீ விபத்து முதலியவற்றால் இவரின் உடல் கருகும். உடலின் தோற்றம் விகாரமாக மாறும். இவர் போலித் துறவி யாவார். ராகு 10இல் தரும் அசுபத்தைவிட 10இல் கேது அசுபத்தைக் குறைத்துத் தான் தருவார். வேள்வி யாகாதி காரியங்கள், புண்யத்தல

யாத்திரைகள், மடாதிபதியாக மதத் தலைவராக பொறுப்பு ஏற்று நடத்துதல் போன்ற பணிகளில் ஈடுபடுத்துவான்.

**11. ஜென்மத்திற்கு 11இல் கேது வந்தால்—**

எல்லா வழிகளிலும் இலாபம் உண்டாகும். பயிர் விளைச்சல் உண்டு. சொன்ன சொல் தவறாதவராவார். எல்லாக் காரியங்களிலும் வெற்றிகிட்டும். வீட்டில் எல்லாப் பொருள்களும் நிரம்பி வழியும். செல்வம் வந்துசேரும். இதனால் 'மகாராஜா' என்று பெயர் எடுப்பார். பலவகை யான வியாபாரங்கள் பெருகும். நீதித் துறைத் தொடர் புடைய பணிகளில் ஈடுபடுத்தும். உத்யோகம் உயரும். அரசாங்கத்தால் வரும் வருமானம் மிகுதியாகும். பந்துக் களை விரோதம் பண்ணிக் கொள்ளுவான். ஆனால், பகைவர்களையும் வேண்டாதவர்களையும் வெற்றி கொள் வார். மூத்த சகோதரத்திற்கு அரிஷ்டம் உண்டாகலாம். ஆனால், முடிவாகப் பலவகையிலும் நற்பலனே ஏற்படும்.

**12, ஜென்மத்திற்கு 12இல் கேது நிற்கும் போது—**

இவருக்குப் பலவகை நஷ்டமும், விரயமும் ஏற்படும். இவர் உறவினர்களுக்கும் கெடுதி ஏற்படும். தீ விபத்து வைசூரி முதலியவற்றால், இவரின் தோற்றப் பொலிவு கெடும். ஞான மார்க்கத்தில் புத்தி ஈடுபட்டுச் சந்நியாசி யாகவும் ஆகலாம். கண்களில் நோய் உண்டாகும். வாகன சுகம் குறையும். தரும சிந்தனைகள் மேலிடும். பரதேச வாசம் ஏற்படும். பந்து ஜனங்களால் கலகம் உண்டாகும். சித்தம் சஞ்சலம் அடையும். 12ஆம் இடம் மோக்ஷ ஸ்தானம் ஆகையால் இதில் ஞானகாரனாகிய கேது வரும்போது, ஆன்மிகத்துறை யோகசாதனை முதலியவற்றில் முயற்சிகள் அதிகமாகும். ஆன்மிகப் பாதையில் முன்னேற்றமும் ஏற் படும்.

**குறிப்பு :** ராகுவின் பலனில் அசுபத்துவம், பாபம், உலக இன்ப நாட்டம் அதிகம் காணும். கேது பலனில் சுபத்துவம், தெய்விக, ஆன்மிக சிந்தனை, இம்மை மறுமை இரண்டையும் வெற்றி பெறச் செய்தல் போன்று சுபத்துவம் சிறிது தூக்கலாக இருக்கும்.

அத்தியாயம்—22

## கோசாரத்தில் பார்வை பலன்கள்

சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன் சனி, ராகு, கேது ஆகிய நவ கோள்கள் தாங்கள் இருக்கும் இடத்திலிருந்து 7ஆம் இடத்தையும் பார்க்கின்றனர். குரு தான் இருக்கும் இடத்திலிருந்து 5, 7, 9ஆம் இடங்களையும், செவ்வாய் 4, 7, 8ஆம் இடங்களையும், சனி 3, 7, 10ஆம் இடங்களையும் சிறப்புப் பார்வையாகப் பார்க்கின்றனர்.

மேனாட்டுக் கொள்கைப்படி கிரகங்களின் 60 பாகை 120 பாகை, 80 பாகை, 90 பாகை ஆகிய 3, 11, 5, 9, 4, 10, 7 ஆகிய பார்வைகளைக் கணக்கிட்டுத் தனிப் பெயரும் பலனும் சொல்வர். நாம் இவற்றைப் பயன்படுத்துவது கிடையாது. ஆகையால் நம் இந்திய முறைப்படி பார்வை பலனைக் கவனிப்போம்

கோசாரத்தில், ஜென்ம ராசி முதல் தாம் இருக்கும் ராசிக் கணக்கின்படி பலன் சுபம் அல்லது அசுபம் தரும் கோள்கள், மேற்சொன்ன பார்வைப்படி எந்த ராசியைப் பார்க்கின்றனவோ, அவை ஜென்ம ராசிக்கு எத்தனை யாவது ராசியாக வருமோ, அந்தப் பாவபலனையும் தங்கள் இயல்பான சுபம் அல்லது அசுபத்தன்மைப்படி பாதிப்பைச் செய்கின்றனர். இதைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் நாம் அட்டவணையில் காட்டியுள்ளோம்.

இனி, இந்த அட்டவணைமூலம் பலன் அறியும் விதம்: உதாரணமாக, மேஷ ராசிக்காரர் ஒருவருக்கு (சந்திரன் மேஷத்தில் உள்ளவர்) 4இல் கடகத்தில் சூரியன் இருப்பதாக வைத்துக் கொள்வோம். கோசார சட்டப்படி சூரியன் 4இல் சுபபலன் தரமாட்டான். ஆனால் கடகத்திலிருந்து 7ஆம் பார்வையால் இவன் 10ஆம் இடத்தைப் (மேஷத்தை) பார்க்கிறான், அட்டவணையில் சூரியன் இருக்கும் இடத்திற்கு நேராகக் குறுக்கே 10 என்ற காலத்தின் கீழ் பார்க்கவும். ''எண்ணியது கூடும் உத்யோக உயர்வு'' என்று தரப்பட்டு உள்ளது. அதாவது பார்வைக்கு கோசாரக்கோள் இருக்கும் இடத்தைக் கருதக் கூடாது. அது பார்க்கும் இடத்தைத்தான் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

அடுத்து, சிம்ம ராசிக்குத் தற்போது 6இல் சனி 11ஆம் பார்வையாகத் துலா ராசியைப் பார்க்கிறார். இது சிம்மத்திற்கு 3ஆம் இடம், எனவே சனிக்கு 3க்கு நேராகக் கீழ் உள்ள ''சுபம் சகோதர உதவி'' என்ற பலனைக் கொள்ள வேண்டும். இந்த நிலையில் சனி இவர்களுக்கு 6இல் சுப பலனையும், 3ஆம் இடத்தைப் பார்த்து அதற்கும் சுப பலனையும் இப்படி 2 விதத்திலும் சுபத்தைத் தருகிறார். இப்படியே மற்ற நிலைகளுக்கும் அறிந்துகொள்ளவும்.

அட்டவணை எண்-8

| | கிரஹங்கள் பார்க்கும் பாவமும் அதற்கு ஏற்படும் பலனும் (ஜென்ம ராசிமுதல்) | | |
|---|---|---|---|
| கிரஹங்கள் | 1 | 2 | 3 |
| சூரியன் | அசுபம் களைப்பு நோய் | அசுபம் தன நஷ்டம் அச்சம் | சுபம் எல்லாம் நன்மை |
| சந்திரன் | சுபம் பாக்யம் ஆரோக்யம் | அசுபம் தன நஷ்டம் | அசுபம் வெற்றி தனலாபம் |

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் | அசுபம்<br>நோய்<br>பிரிவு | அசுபம்<br>களவு<br>தனநாசம் | சுபம்<br>தனலாபம்<br>வெற்றி |
| புதன் | அசுபம்<br>தனநாசம்<br>நிர்ப்பந்தம் | சுபம்<br>தனலாபம்<br>சுகம் | அசுபம்<br>பகை<br>தொல்லை |
| குரு | சுபம்<br>ஆரோக்யம்<br>இடமாற்றம் | சுபம்<br>தனலாபம்<br>போஜன சுகம் | அசுபம்<br>சகோதர<br>நன்மை |
| சுக்கிரன் | சுபம்<br>பெண்<br>போகம் | சுபம்<br>போஜன<br>சுகம் | சுபம்<br>போக<br>விருத்தி |
| சனி | அசுபம்<br>இடமாற்றம்<br>நஷ்டம் | அசுபம்<br>தனநாசம்<br>குடும்பக்<br>கலகம் | அசுபம்<br>சகோதர<br>உதவி<br>தைரியம் |
| ராகு | அசுபம்<br>இனம்புரியா<br>நோய் பயம் | அசுபம்<br>போஜன<br>விஷம்<br>கஷ்டம் | சுபம்<br>தைரியம்<br>போகம் |
| கேது | சுபம்<br>நோய்<br>கவலை | சுபம்<br>வித்யா<br>லாபம்<br>துர்போஜனம் | சுபம்<br>தைரியம்<br>முன்னேற்றம் |

| | பாவங்கள் | | |
|---|---|---|---|
| கிரஹங்கள் | 4 | 5 | 6 |
| சூரியன் | அசுபம்<br>சுகக் கேடு | அசுபம்<br>புத்தி கலக்கம் | சுபம்<br>சத்ரு நோய்<br>நீக்கம். |

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | அசுபம் | அசுபம் | சுபம் |
| | வயிற்று நோய் | பயம் | லாபம் சத்ரு |
| | | திகில் | நாசம் |
| செவ்வாய் | அசுபம் | அசுபம் | சுபம் |
| | சத்ரு பயம் | தனநஷ்டம் | தனலாபம் |
| | வயிற்று நோய் | பயம் | வெற்றி |
| புதன் | சுபம் | அசுபம் | சுபம் |
| | தனம் கல்வி | பீடை | காரிய |
| | விருத்தி | கலகம் | வெற்றி |
| குரு | சுபம் | சுபம் | அசுபம் |
| | சுகம் கல்வி | புத்ரப் பேறு | நோய் |
| | வெற்றி | நலம் | கடன் |
| சுக்கிரன் | சுபம் | அசுபம் | அசுபம் |
| | கல்வி | புத்ர | ஸ்த்ரீ |
| | வாஹனம் | நாசம் | ரோகம் |
| சனி | அசுபம் | அசுபம் | சுபம் |
| | பயண | க்லேசம் | சத்ரு நாசம் |
| | விபத்து | புத்ர நாசம் | வெற்றி |
| | கல்வியில் | | தனலாபம் |
| | தோல்வி | | |
| ராகு | அசுபம் | அசுபம் | சுபம் |
| | வித்தை | புத்ர | சத்ரு நாசம். |
| | நாசம் | தோஷம் | ஆனால் சர்ப்ப |
| | தாய் கெடுதி | | விஷ பயம் |
| கேது | அசுபம் | அசுபம் | சுபம் |
| | வித்யா | கருச் சிதைவு | சத்ரு |
| | நாசம் | கஷ்டம் | ஜெயம் |
| | மாத்ரு நாசம் | | |

| | பாவங்கள் | | |
|---|---|---|---|
| கிரஹங்கள் | 7 | 8 | 9 |
| சூரியன் | அசுபம் பயண விபத்து மனைவிக்கு நோய் | அசுபம் அதிக கஷ்டம் சண்டை நோய் | அசுபம் தகப்பனுக்கு அரிஷ்டம் |
| சந்திரன் | சுபம் தனலாபம் அரச உதவி | அசுபம் மிகவும் கஷ்டம் | சுபம் ராஜ்ய லாபம் |
| செவ்வாய் | அசுபம் தனநாசம் மனக்கவலை | அசுபம் ஆயுத காயம் ரணம் | அசுபம் நோய் அவமானம் |
| புதன் | அசுபம் பீடை கஷ்டம் | சுபம் தனலாபம் எல்லாம் நன்மை | அசுபம் துக்கம் கஷ்டம் |
| குரு | சுபம் விவாஹ ப்ராப்தி | சுபம் ஆயுள் விருத்தி | சுபம் க்ஷேத்ரா டனம் |
| சுக்கிரன் | சுபம் நூதன ஸ்த்ரீ சுகம் | அசுபம் ரகசிய நோய் | சுபம் உல்லாசம் நன்மை |
| சனி | அசுபம் மனைவிக்கு நோய் இடமாற்றம் சண்டை | அசுபம் வழக்கு, கேஸ் பட்டாபழி கஷ்டம் | அசுபம் தகப்பனுக்கு அரிஷ்டம் |

| | | | |
|---|---|---|---|
| ராகு | அசுபம்<br>பெண்<br>சூழ்ச்சி<br>ஸ்த்ரீரோகம் | அசுபம்<br>ஸ்த்ரீ ரோகம்<br>பல நோய் | அசுபம்<br>துர்பாக்கியம்<br>கெடுதி |
| கேது | அசுபம்<br>பெண்<br>சூழ்ச்சி | அசுபம்<br>தோல்நோய்,<br>ரணம் கஷ்டம் | அசுபம்<br>பித்ரு<br>அரிஷ்டம் |

| | பாவங்கள் | | |
|---|---|---|---|
| கிரஹங்கள் | 10 | 11 | 12 |
| சூரியன் | சுபம்<br>எண்ணியது<br>கூடும்<br>உத்யோக<br>உயர்வு | சுபம்<br>தனலாபம்<br>நன்மை | அசுபம்<br>விரயம் சயன<br>சுகம் கெடல் |
| சந்திரன் | சுபம்<br>லாபம்<br>ஆனந்தம் | சுபம்<br>தனலாபம்<br>சுகம் | அசுபம்<br>விரயம்<br>கஷ்டம் |
| செவ்வாய் | சுபம்<br>லாபம்<br>முன்னேற்றம் | சுபம்<br>தனவரவு | அசுபம்<br>அதிக செலவு |
| புதன் | சுபம்<br>லாபம்<br>சுகம் | சுபம்<br>தனலாபம்<br>சுகம் | அசுபம்<br>தனநாசம்<br>கஷ்டம் |
| குரு | அசுபம்<br>பதவி நாசம் | சுபம்<br>தனலாபம் | அசுபம்<br>சுபச்செலவு |
| சுக்கிரன் | சுபம்<br>தனலாபம்<br>உத்யோக<br>நன்மை | சுபம்<br>ஸ்த்ரீமூலம்<br>லாபம் | சுபம்<br>சயன சுகம்<br>சுபச் செலவு |

| | | | |
|---|---|---|---|
| சனி | அசுபம் வீண் உழைப்பு தனநாசம் உத்தியோக பங்கம் | அசுபம் லாபம் அதிக சுகம் பரம திருப்தி | அசுபம் அதிகச் செலவு |
| ராகு | சுபம் உத்தியோக லாபம் வருமானம் | சுபம் சர்வசௌக் யம் லாபம் | அசுபம் கெட்ட வழிச் செலவு |
| கேது | சுபம் எல்லாம் வெற்றி | சுபம் லாபம் தனவரவு புண்ணிய யாத்திரை | அசுபம் அதிக செலவு ஞானம் |

அத்தியாயம்—23

# கோசார வேதையும் — விபரீத வேதையும்

ராசிபலன் பார்க்கும்போது, ஜென்ம ராசியிலிருந்து ஒரு கிரகம் சுபபலன் தரும் ராசியில் இருக்கும்போது, அதே சமயம் குறித்த கணக்குப்படி வேறு ஒரு கோள் ஜென்ம ராசி முதல் குறிப்பிட்ட ராசியில் இருந்தால், இதற்கு 'வேதை' அல்லது 'கோசார வேதை' என்று பெயர். இது சமயம் கோசாரகோள் தரும் சுபபலன் இல்லாமற் போகிறது. இந்த இடங்கள் வேதை ஸ்தானங்கள் என்று பெயர் பெறும்.

இதே வேதை ஸ்தானங்களில் கோசாரகோள் இருந்து, அதற்கு நேர் சரியான அக்கோள் சுபபலன் தரும் ராசிகளில் வேறு கோள் இருந்தால், கோசாரக் கோளின் அசுபபலன் இராது. இதை விபரீதவேதை என்கிறோம். அதாவது, சுபபலன் இல்லாமற் போனால், கோசார வேதையென்றும், அசுபபலன் இல்லாமற் போகும். அது விபரீத வேதை எனவும் பெயர் பெறும். இனி கோள்களின் வே தகள் தானங்கள் வருமாறு:

I. சந்திர ராசியிலிருந்து:

1. சூரியன் சுபலன் தரும் ராசிகள் / இதற்கு வேதைகள் தானங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியன் சுபலன் தரும் ராசிகள் | 3, | 6, | 10, | 11, | சூரியனுக்குச் சந்திரனால் வேதை கிடையாது. |
| இதற்கு வேதைகள் தானங்கள் | 9 | 12 | 4 | 5 | |

2. சந்திரன் (சுபம்)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| சந்திரன் (சுபம்) | 7 | 1 | 6 | 11 | 10 | 3 | சந்திர னுக்குப் புதனால் வேதை கிடையாது. |
| வேதை தானங்கள் | 2 | 5 | 12 | 8 | 4 | 9 | |

3. செவ்வாய் (சுபம்)

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் (சுபம்) | 3 | 11 | 6 |
| வேதை ஸ்தானம் | 12 | 5 | 9 |

4. புதன் (சுபம்)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| புதன் (சுபம்) | 2 | 4 | 6 | 8 | 10 | 11 | சந்திரனால் வேதை இல்லை. |
| வேதை ஸ்தானங்கள் | 5 | 3 | 9 | 1 | 8 | 12 | |

5. குரு (சுபம்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குரு (சுபம்) | 2 | 11 | 9 | 5 | 7 |
| வேதை ஸ்தானங்கள் | 12 | 8 | 10 | 4 | 3 |

6. சுக்கிரன் (சுபம்)

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சுக்கிரன் (சுபம்) | 1 | 2 | 3 | 4 | 5 | 8 | 9 | 11 | 12 |
| வேதை ஸ்தானங்கள் | 8 | 7 | 1 | 10 | 9 | 5 | 11 | 6 | 3 |

சுக்கிரனுக்குச் சூரியனால் வேதை இல்லை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7. | சனி (சுபஸ் தானம்) | 3 | 6 | 11 | சனிக்குச் சூரிய னால் வேதை இல்லை. |
| | வேதை ஸ்தானங்கள் | 12 | 9 | 5 | |
| 8. | ராகு (சுபம்) | 3 | 6 | 11 | |
| | வேதை ஸ்தானங்கள் | 12 | 9 | 5 | |
| 9. | கேது (சுபம்) | 3 | 6 | 11 | |
| | வேதை ஸ்தானங்கள் | 12 | 9 | 5 | |

விளக்கம்: சூரியன் ஜென்மத்திற்கு 3இல் சுபபலன் தருகிறான். இதே சமயம், அதன் கீழ்க் காட்டப்பட்ட 9ஆம் இடத்தில் (ஜென்ம ராசியிலிருந்து) குரு இருப்பதாக வைத்துக் கொள்வோம். இதனால் 3இல் சூரியன் கொடுக்க வேண்டிய சுபபலன் இல்லாமல் போகும். இதே நிலையில் சனி இருந்தால், சனியால் சூரியனுக்கு வேதை கிடையாது என்ற குறிப்பைக் கவனிக்கவும். எனவே, சூரியன் தரும் சுப பலன் இந்த நிலையில் பாதிக்கப்பட மாட்டாது. மற்ற கோள்கள் விஷயத்திலும் இப்படியே யூகித்துப் புரிந்து கொள்ளவும்.

விபரீதவேதை முன்னர் சொன்னது, கிரமமானகோசார வேதையாகும். ஒரு கிரகம் அசுபம் தரும்போது அதற்கு இணையாக வேறு குறிப்பிட்ட ஓர் இடத்தில் அதே சமயத் தில் வேறு ஒரு கோள் இருந்து, அந்த அசுப பலன் இல்லாமற் செய்வது, இதற்கு எதிரான அதாவது 'விபரீத வேதை' எனப்படும். அவை வருமாறு: பெரும்பாலும் ஒரு கிரகத்திற்குச் சொன்ன வேதை ஸ்தானங்கள் அது அசுபம் தருவதாக இருக்கும், அதற்கு நேரான சுபபலன் தரும் ராசிதான் விபரீத வேதை ஸ்தானமாக அமையும். இதையும் புரிந்து கொள்ளலாம். இப்பொழுது பட்டியலைப் பாருங்கள்:

1. சூரியன் (அசுபம் தரும் ஸ்தானங்கள்) 9 12 4 5
விபரீதவேதை ஸ்தானங்கள் 3 6 10 11

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. சூரியன் (அசுபம் தரும் ஸ்தானங்கள்) | 9 | 12 | 4 | 5 | | | | | |
| விபரீதவேதை ஸ்தானங்கள் | 3 | 6 | 10 | 11 | | | | | |
| 2. சந்திரன் (அசுபம்) | 2 | 5 | 11 | 8 | 4 | 9 | | | |
| விபரீத வேதை | 7 | 1 | 6 | 11 | 10 | 3 | | | |
| 3. செவ்வாய் (அசுபம்) | 12 | 5 | 9 | | | | | | |
| விபரீத வேதை | 3 | 11 | 6 | | | | | | |
| 4. புதன் (அசுபம்) | 5 | 3 | 9 | 1 | 8 | 12 | | | |
| விபரீத வேதை ஸ்தானம் | 2 | 4 | 6 | 8 | 10 | 11 | | | |
| 5. குரு (அசுபம்) | 12 | 8 | 10 | 4 | 3 | | | | |
| விபரீத வேதை | 2 | 11 | 9 | 5 | 7 | | | | |
| 6. சுக்கிரன் (அசுபம்) | 8 | 7 | 1 | 10 | 9 | 5 | 11 | 6 | 3 |
| விபரீத வேதை | 1 | 2 | 3 | 4 | 5 | 8 | 9 | 11 | 12 |
| 7. சனி, ராகு, கேது, அசுபம். | 12 | 9 | 5 | | | | | | |
| விபரீத வேதை ஸ்தானம் | 3 | 6 | 11 | | | | | | |

செவ்வாய், சனி, ராகு கேதுக்களுக்கு விபரீத வேதை சுபஸ்தானங்கள் ஒன்றேதான்.

சனிக்குச் சூரியனாலும், சந்திரனுக்குப் புதனாலும் விபரீத வேதை கிடையாது.

விபரீத வேதையால் என்ன பயன் என்ற எண்ணம் எழலாம். உண்மையில், இது மிகவும் பயனுடையதாகும்.

ஒருவரின் ஜென்ம ராசிக்கு 12இல் சனி இருப்பது அசுபம்; $7\frac{1}{2}$ சனியின் ஆரம்பமாகும். இதே சமயம் இவர் ஜென்ம ராசிக்கு 3இல் குரு இருந்தால், குரு வருஷக்கோள் ஆகையால், அவர் 3இல் இருக்கும் ஒரு வருஷ காலமும் சனியின் தீய பலன் அதாவது $7\frac{1}{2}$ சனியின் கொடுமை இராது. இதே போல் மற்றவற்றிற்கும் கொள்ளவேண்டும். மேலே கோள்கள் எல்லாவற்றிற்கும் அசுப பலன் தரும் ஸ்தானங்கள் எல்லாவற்றிக்கும் விபரீத வேதை ஸ்தானம் காட்டப்படவில்லை அப்படிப்பட்ட இடங்களில், விபரீத வேதை கிடையாது என்றும், அந்தச் சமயத்தில் அந்த கோளின் அசுபத்தை முழுவதும் அனுபவிக்க வேண்டியதுதான் என்றும் கொள்ளவேண்டும்.

உதாரணமாக, ஜென்ம குருவுக்கு (1இல் குரு) விபரீத வேதை ஸ்தானம் கிடையாது. இதனால் ஜென்ம குரு கோசாரம் உள்ளவர்கள், அதன் முழு அசுப பலனையும் அனுபவித்துத்தான் தீர வேண்டும் என்று புரிந்து கொள்ள வேண்டும். இதே வருஷத்தில் சூரியன், புதன், சுக்கிரன், செவ்வாய் இவர்கள் ஒருமுறையாவது விபரீத வேதை ஸ்தானத்திற்கு வருவார்கள். இதனால் ஏறக்குறைய 4 மாத காலமாவது குருவிற்கு விபரீத வேதை ஏற்படுத்தி, அசுபம் இல்லாமல் செய்வார்கள். இந்த வகையில் இந்தத் தத்துவம் பெரிய அனுகூலமாகும். இதே போன்றும் மற்றவற்றிற்கும் கொள்ளவும்.

### அத்தியாயம் — 24

## கோசாரம் — நக்ஷத்திர சார் பலன்

நமது ராசி மண்டலம் 27 நக்ஷத்திரங்களில்பரந்துள்ளது. எல்லாக் கோள்களும் இந்த நக்ஷத்திரங்கள் மூலமாகவே 12

ராசிகளில் சஞ்சரிக்கின்றன. மனிதர்கள் இந்த 27 நக்ஷத்திரங்களுள் ஒன்றில் சந்திரன் இருக்கும்போதுதான் பிறக்கின்றனர். இதுவே ஒருவர் ஜென்ம நக்ஷத்திரமாகும். இந்த ஜென்ம நக்ஷத்திரத்திலிருந்து, ஒரு கிரஹம் சஞ்சாரம் செய்யும் நக்ஷத்திரத்தைக் கணக்கிட்டு கோசார பலன் சொல்லும் முறையும் உண்டு. இவ்வகையில் இக்கோள்கள் இயற்கையாகத் தம் சுபாவப்படி கொடுக்கும் சுபாவமான சுபபலன் அல்லது அசுப பலனை மாற்றிக் கூட்டியோ குறைத்தோ தருகின்றன.

27 நக்ஷத்திரங்களை 3 ஆகப்பகுத்தால் 9 நக்ஷத்திரங்கள் கொண்ட மூன்று பரியாயங்கள் வருகின்றன. இந்த 1 முதல் 9 நக்ஷத்திரங்களுக்கும் பெயர் உண்டு. அடுத்த இரண்டு பரியாயங்களுக்கும் ஒவ்வொரு நக்ஷத்திரத்திற்கும் அதே பெயர்தான் வரும். எனவே இவற்றில் சஞ்சாரம் செய்யும் கோள்களின் பலனும் ஒரே மாதிரியான வெவ்வேறு பலனாகவே உண்டாகும். அதன் விவரம் வருமாறு.

| | | பலன் |
|---|---|---|
| 1. | ஜென்ம நக்ஷத்திரம் | மத்திமம் |
| 2. | சம்பத்து நக்ஷத்திரம் (தாரை) | உத்தமம் |
| 3. | விபத்துத் தாரை (நக்ஷத்திரம்) | அதமம் |
| 4. | க்ஷேமத்தாரை (நக்ஷத்திரம்) | உத்தமம் |
| 5. | ப்ரத்தியக்குத்தாரை (நக்ஷத்திரம்) | மத்திமம் |
| 6. | தெய்வானுகூலதாரை (நக்ஷத்திரம்) | உத்தமம் |
| 7. | வதைத்தாரை (நக்ஷத்திரம்) | மிகவும் அசுபம் |
| 8. | மைத்ர தாரை (நக்ஷத்திரம்) | சுபம் |
| 9. | பரம மைத்திர தாரை (நக்ஷத்திரம்) | மத்திமம் |

மீண்டும். இரண்டு மூன்றாவது சுற்றுகளிலும், இதே பெயர் வரும். உதாரணத்திற்கு ஒருவருக்கு அசுவினி ஜென்ம நக்ஷத்திரமானால், அவருடைய 3 சுற்றுகளில் உள்ள நக்ஷத்திரப் பெயர்கள் வருமாறு:

| ஜன்மம் | அனுஜன்மம் | திரிஜன்மம் | சுபாசுப சங்கை |
|---|---|---|---|
| 1. அஸ்வினி | 10. மகம் | 19. மூலம் | ஜென்மம் |
| 2. பரணி | 11. பூரம் | 20. பூராடம் | சம்பத்து |
| 3. கார்த்திகை | 12. உத்திரம் | 21. உத்திராடம் | விபத்து |
| 4. ரோஹிணி | 13. ஹஸ்தம் | 22. திருவோணம் | க்ஷேமம் |
| 5. மிருகசீரிஷம் | 14. சித்திரை | 23. அவிட்டம் | பிரத்தியக்கு |
| 6. திருவாதிரை | 15. சுவாதி | 24. சதயம் | தெய்வானுகூலம் |
| 7. புனர் பூசம் | 16. விசாகம் | 25. பூரட்டாதி | வதை |
| 8. பூசம் | 17. அனுஷம் | 26. உத்திரட்டாதி | மைத்ரம் |
| 9. ஆயில்யம் | 18. கேட்டை | 27. ரேவதி | பரம மைத்ரம் |

இதன்படி 2, 11, 20 இந்த நக்ஷத்திரங்கள் அஸ்வினிக்கு சம்பத்துத் தாரைகளாகும். இப்படி விரும்பிய நக்ஷத்திரத்தை முதலாக வைத்து, அவற்றை எண்ணித் தாரா பலனை அறிந்து கொள்ளலாம்.

இதே போல முதல் நக்ஷத்திரம் ஜென்மம் என்றும், இரண்டாம் பரியாயத்தில் முதல் நக்ஷத்திரம் அனுஜன்மம் என்றும், மூன்றாம் பரியாயத்தில் முதல் நக்ஷத்திரம் திரி ஜென்மம் என்றும் சொல்லப் படும். மேலும் அடுத்து வரும் நக்ஷத்திரங்களுக்கெல்லாம் மேலே கொடுத்துள்ள சம்பத்து முதலான பெயர்களாகவே ஒவ்வொரு நக்ஷத்திரத்திற்கும் கணக்கிடப்பட்டு வழங்கும். இன்னும் தெளிவாய் அறியவேண்டுமானால், ஒருவர் பிறந்த நக்ஷத்திரம் முதல்

1, 10. 19 ஆம் நக்ஷத்திரங்கள் — ஜென்மம்
2, 11, 20 ஆம் நக்ஷத்திரங்கள் — சம்பத்து
3, 12, 21 ஆம் நக்ஷத்திரங்கள் — விபத்து
4, 13, 22 ஆம் நக்ஷத்திரங்கள் — க்ஷேமம்
5, 14, 23 ஆம் நக்ஷத்திரங்கள் — பிரத்தியக்கு

6, 15, 24 ஆம் நக்ஷத்திரங்கள் — தெய்வானுகூலம்
7, 16, 25 ஆம் நக்ஷத்திரங்கள் — வதை
8, 17, 26 ஆம் நக்ஷத்திரங்கள் — மைத்திரம்
9, 18, 27 ஆம் நக்ஷத்திரங்கள் — பரம மைத்திரம்

என்று வழங்கும். இந்தக் கணக்குப்படி கிரஹங்கள் பலன் தரும் விதம் —

ஒருவரின் ஜென்ம நக்ஷத்திரம் முதல்

சூரியன் — 2,4,8,9,11,13 மற்றும் 24-ஆவது நக்ஷத்திரங்களில் சுப பலனைத் தருகிறார்.

1, 14, 16, 19, 23-வது நக்ஷத்திரங்களில் அசுப பலனைத் தருகிறார்.

மற்ற நக்ஷத்திரங்களில் நல்லது கெட்டது இரண்டும் அற்ற நிஷ்பலனைத் தருகிறார்.

சந்திரன் — 4, 6, 8, 9, 11, 13, 15, 26 மற்றும் 27ஆம் நக்ஷத்திரங்களில் சுப பலனைத் தருகிறார். 1, 3, 5, 7, 12, 14, 19 மற்றும் 21-வது நக்ஷத்திரங்களில் அசுப பலனைத் தருகிறார். மற்றவற்றில் நிஷ்பலன்.

செவ்வாய் — 9, 11, 17, 22, 24வது நக்ஷத்திரங்களில் சுப பலனைத் தருகின்றான்.

1, 3, 5, 7, 12, 14, 19, 21-வது நக்ஷத்திரங்களில் அசுப பலனைத் தருகின்றார். மற்றவற்றில் நிஷ்பலன்.

புதன், குரு மற்றும் சுக்கிரன் — 4, 6, 13, 15, 17, 20, 22, 24, 26 மற்றும் 27-ஆவது நக்ஷத்திரங்களில் சுப பலனைத் தருகின்றார்கள்.

1, 3, 7, 10, 12 மற்றும் 19வது நக்ஷத்திரங்களில் அசுப பலனைத் தருகிறார்கள். மற்றவற்றில் நிஷ்பலன்.

சனி ராகு கேது } 2, 4, 6, 8, 13, 15, 17, 18, 20, 22, 24-வது நக்ஷத்திரங்களில் சுப பலனைத் தருகின்றார்கள்.

1, 7, 10, 27 - வது நக்ஷத்திரங்களில் அசுப பலனைத் தருகின்றார்கள். மற்றவற்றில் நிஷ்பலன் என்றறியவும்.

இப்படி, சுபம் மற்றும் அசுப பலனைத் தரும்போது முழுச் சுபக்கோள்கள் (குரு, சுக்ரன், வளர்பிறைச் சந்திரன், சுப நோக்கு மற்றும் சம்பந்தமுள்ள புதன்) இவர்கள் ஜென்ம ராசி முதல் திரிகோண ராசிகளில் 9, 5 ராசிகளில் உள்ள மேற்படி சுப நக்ஷத்திரங்களில் சஞ்சாரம் பண்ணினால், மிகவும் அதிக நன்மையையும், ஜென்ம ராசி முதல் 1, 4, 7, 10 ஆகிய கேந்திரங்களில் உள்ள சுப நக்ஷத்திரங்களில் சஞ்சாரம் பண்ணினால், மத்திபமான சுப பலனையும் தருவார்கள்.

இவை, மற்ற ராசிகளில் உள்ள சுப நக்ஷத்திரங்களில் சஞ்சாரம் பண்ணினால், சுப பலன் தரமாட்டார்கள். நிஷ்பலன் ஆகிவிடும்.

மேற் சொன்னதற்கு மாறாக மற்ற அசுபக் கோள்கள் (சூரியன் , தேய்பிறை சந்திரன், பாவ நோக்கு சம்பந்தமுள்ள புதன், சனி, செவ்வாய், ராகு- கேது ஆகியவர்கள்) ஒருவரின் ஜென்ம ராசி முதல் 8, 12ஆவது ராசிகளில் வரும் போது அவற்றுக்குச் சொல்லப்பட்ட அசுப நக்ஷத்திரத்தில் சஞ்சரித்தால், அசுப பலன் எல்லாவற்றையும்விட மிக, மிக அதிகமாகவும் இருக்கும். 4, 10, 7, 2, 3, 11 ஆகிய ராசிகளில் வரும் அசுப நக்ஷத்திரங்களில் சஞ்சாரம் பண்ணும் போது, அசுப பலன் மத்தியமாகவும், மற்ற ஜென்ம ராசி

முதல் 1, 5, 9ஆம் ராசிகளில் வரும் அசுப நக்ஷத்திரங்களில் சஞ்சாரம் பண்ணினால், அசுப பலன் நிஷ்பலனும் ஆகும். அவர்களுடைய தீய பலன் இராது.

உதாரணத்திற்கு, அந்த நக்ஷத்திரத்தை ஜென்ம நக்ஷத்திரமாக உள்ள ஒருவரை எடுத்துக்கொள்ளுவோம். தற்போது இவருக்கு சுக்ரன் 9இல், அதாவது ரிஷபத்தில் சஞ்சாரம் பண்ணுவதாக வைத்துக்கொள்ளுவோம். இந்த ரிஷபத்தில் கார்த்திகையின் பின் 3 பாதங்கள், ரோஹிணி யின் 4 பாதங்கள், மிருகசீரிஷத்தின் முன்னிரண்டு பாதங்கள் உள்ளன. இந்த ராசியில் மிருகசீரிஷ நக்ஷத்திரம் 20வது நக்ஷத்திரமாக ஆகிறது. இது 3ஆவது பரியாயத்தில் சம்பத்து தாரையாக வரும். நாம் முன்சொன்னபடி இது சம்பத்துதாரையில் சுப பலன் தரும். இத்துடன், இது இவர் ராசியான கன்னிக்கு 9ஆன திரிகோணத்தில் இருப்ப தால், அதுவும் சுப பலனே. எனவே, இரண்டு வழிகளிலும் இவருக்கு அதிக பக்ஷமான சுப பலனை ஏற்படும். இதுபோல், மற்றக் கோள்கள் விஷயத்திலும் கணக்கிட்டுப் பலன் அறியவேண்டும்.

இதில் வேறு ஒருவிதமாகவும் பலன் காணலாம். அதாவது, இயற்கையாக கோசாரப்படி சுபபலனைத் தரும் ராசியில் வரும் ஒருகிரகம், ஜென்மம், விபத்து, பிரத்தியக்கு வதை ஆகிய அசுப தாரைகளில் சஞ்சரித்தால் அதன் சுப பலன் இல்லாமல் போய்விடும். இப்படி அசுப பலன் சொன்ன நக்ஷத்திரங்களில் சஞ்சாரம் செய்தால் மத்திம அசுபமாக இருக்கும். விபத்து தாரை சஞ்சாரம் அதற்கடுத்து அதிக அசுபமாக இருக்கும் வதை என்ற 73வது தாரை சஞ்சாரம் எல்லாவற்றையும்விட மிக அதிக அசுப மாக இருக்கும். இவற்றில் கோசாரப்படி அசுபம் தர வேண்டிய கிரகங்கள் அதிக அசுப பலனை, மேற்கண்ட வரிசையில் அசுபத்தை ஒன்றுக்கொன்று அதிகரித்துத் தருகின்றன. மாறாக சுபபலன் தரும் கோள்கள் சம்பத்து, க்ஷேமம், தெய்வானுகூலம் மைத்ரம், பரம மைத்ரம் ஆகிய

நக்ஷத்திரங்களில் சஞ்சரித்தால் சுபபலன் சொன்னதற்கு மேலாக அதிகமாகக் கிடைக்கும் என்று கொள்ளவேண்டும்.

இப்படியே சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி சுபாசுப நக்ஷத்திர சஞ்சார பலனை நுணுக்கமாக மதிப்பிட்டு அறிந்து கொள்ளலாம்.

## நக்ஷத்திர அங்க பலன்

நக்ஷத்திரங்களின் அடிப்படையில், ஜென்ம நக்ஷத்திரம் முதல் கணக்கிட்டுத் தொடர்ச்சியாக குறிப்பிட்ட எண்ணுள்ள நக்ஷத்திரங்களில் கோள்களின் சஞ்சாரத்தை ஒருவன் சிரசு முதல் வெவ்வேறு அங்கங்களில் அவை சஞ்சாரம் பண்ணுவதாகக் கொண்டு, அதற்குத் தனியாகப் பலன்காணும் முறையும் உண்டு, அதன் பலனும் வருமாறு.

**சூரியன்**

| | நக்ஷத்திர எண் | அங்கம் | பலன் |
|---|---|---|---|
| . | ஜென்மம் | முகம் (வாய்) | நாசம் |
| 2: | 2 முதல் 5 வரை | தலை | ஐஸ்வர்யம் |
| 3. | 6 முதல் 9 வரை | மார்பு | வெற்றி |
| 4. | .0 முதல் 13 வரை | இடக்கை | தானம் (செய்வான்) திரவிய லாபம் |
| 5. | 14 முதல் 19 வரை | கால்கள் | திரவிய நாசம் |
| 6. | 20 முதல் 23 வரை | வலக்கை | தேக பீடை நோய் |
| 7. | 24, 25 வரை | கண்கள் | இலாபம் |
| 8. | 26, 27 வரை | குதம் | தேகநாசம் (தீரா நோய்) |

2. சந்திரன்

| | | | |
|---|---|---|---|
| 1. | 1 முதல் 2 வரை | முகம் | பெரிய பயம் |
| 2, | 3 முதல் 6 வரை | தலை | ௌௌக்யம் |
| 3. | 7 முதவ் 8 வரை | முதுகு | சத்ருஜெயம் |
| 4. | 9முதல் 10 வரை | கண்கள் | தனலாபம் |
| 5. | 11 தமுல் 15 வரை | மார்பு | மனமகிழ்ச்சி |
| 6. | 16 முதல் 17 வரை | வலதுகை | பகை |
| 7. | 18 முதல் 23 வரை | கால்கள் | தன் வீட்டில் வாசம் |
| 8. | 24 முதல் 27 வரை | இடக் கை | தன்லாபம் |

குறிப்பு: சந்திரன் துரிதகதியை உடையது. $2\frac{1}{4}$ நாளைக்கு ஒரு ராசியைக் கடந்துவிடுகிறது. எனவே ஜென்ம நக்ஷத்திர முதல் அது இருக்கும் நக்ஷத்திரம் வரை எண்ண வரும் கணக்குப்படி 1, 2 மற்றும் 11 முதல் 15வது நக்ஷத்திரங்களில் மட்டும் தான் அசுப பலன் தருவான். அதாவது, ஒரு மாதத்தில் ஏறக்குறைய 4 நாள்கள் மட்டும் தான் அசுப பலன் தருகின்றான். மற்ற நாள்களில் எல்லாம் நல்ல பலன்தான் தருவான். சந்திரனின் பலன் துரிதமாகவே ஏற்படும் என்பது தெளிவு.

3. செவ்வாய்

| | | | |
|---|---|---|---|
| 1. | 1 முதல் 2 | முகம் (வாய்) | சாவு அல்லது அதுபற்றி செய்தி |
| 2. | 3 முதல் 8 | கால் | பகை, கலகம் |
| 3. | 9 முதல் 11 | கழுத்து | வெற்றி |
| 4. | 12 முதல் 15 | வலக் கை | தன நஷ்டம் |
| 5. | 16, 17 | தலை | லாபம் |
| 6) | 18 முதல் 21 — | முகம் — | அதிக பயம் |

7) 22 முதல் 25 — இடக்கை — சௌக்யம்
8) 26, 27 — கண்கள் — யாத்திரை

4, புதன், குரு, சுக்ரன் மூவருக்கும் பொது

1) 1 முதல் 3 வரை — தலை — துக்கம்
2) 4 முதல் 6 வரை — முகம்(வாய்) — லாபம்
3) 7 முதல் 12 வரை — கைகள் — லாபம்
4) 13 முதல் 17 வரை — வயிறு —திடீரென கெட்ட நிகழ்ச்சி அனர்த்தம்
5) 18 முதல் 19 வரை — குதம் —தனலாபம்
6) 20 முதல் 27 வரை — கால் — நாசம்

5. சனி, ராகு, கேது மூன்றுக்கும் பொது

1) 1 வது நக்ஷத்திரம் — முகம்(வாய்) — துக்கம்
2) 2 முதல் 5 வரை — வலக்கை — துக்கம்
3) 6 முதல் 8 வரை — இடக்கை — பயணம்
4) 9 முதல் 11 வரை — வலக்கால் — நாசம்
5) 12 முதல் 15 வரை — இடக்கால் — லாபம்
6) 16 முதல் 20 வரை — வயிறு — வித விதமான போக சுகம்
7) 21 முதல் 23 வரை — தலை — ஆனந்தம்
8) 24, 25 — கண் —சௌக்யம்
9) 25 முதல் 27 வரை — முதுகு — மரணம்

அங்க கோள்கள் -- சூடாமணி உள்ளமுடையான்

அங்கக் கோள்கள், தமிழ் நூல் சூடாமணி உள்ளமுடையானில் சொன்னபடி, பலனில் சிறிது வேறுபடுவதால், அதுவும் இங்கு தரப்படுகிறது.

1) சனி

| | | | |
|---|---|---|---|
| 1) வாய் | — முதல் நக்ஷத்திரம் | — | தீமை ஆபத்து |
| 2) வலக்கை | — 2 முதல் 5 வது | — | சுகம், இனிமை |
| 3) கால்கள் | — 6 முதல் 11வது | — | யாத்திரை |
| 4) இடக்கை | — 12 முதல் 15வது | — | காரியநாசம் |
| 5) வயிறு | — 16 முதல் 20 வது | — | போஜன சுகம் காரிய அனு கூலம் |
| 6) கண்கள் | — 21,22 வது | — | தனலாபம் |
| 7) புஜங்கள் | — 23,24 | — | கெடுதி, துன்பம் |
| 8) தலை | — 25, 26, 27 வது | — | ராஜ்யாபி ஷேகம் |

அங்க சூரியன்

1) ஜென்மம் முதல் மூன்று — தலை — அரசுபதவி
2) அடுத்த மூன்று — வாய் — கல்வியில் வெற்றி
3) அடுத்த ஐந்து — வயிறு — போஜன சுகம்
4) அடுத்த எட்டு — கைகள் — பொருள் ஈட்டும் நகை நட்டு கூடும்.
5) கடைசி எட்டு — கால்கள் — உலகாளும்.

அங்கச் செவ்வாய்

| | | | |
|---|---|---|---|
| 1) முதல் 3 நக்ஷத்திரம் | — வாய் | — | துக்கம் |
| 2) அடுத்து 2 நக்ஷத்திரம் | — வலக்கண் | — | இன்பம் |
| 3) அடுத்து 2 ,, | — இடக்கண் | — | அழிவு |
| 4) அடுத்து 3 ,, | — கழுத்து | — | மேம்பாடு |
| 5) அடுத்து 3 ,, | — வலக்கை | — | ,, |
| 6) அடுத்து 3 ,, | — இடக்கை | — | துக்கம் |

7) அடுத்து ஒன்று ,, — உடல் பக்கம் — நலம் பூராவும்

8) அடுத்து ஒன்று ,, — உடல் இடபக்கம் — அழிவு பூராவும்

9) அடுத்து 5 ,, — வயிறு — உணவு விருத்தி

10) அடுத்து 2 ,, — வலக்கால் — நன்மை உண்டு

11) அடுத்து 2 ,, — இடக்கால் யாத்திரை

அங்க, குரு, புதன், சுக்கிரன்

1) முதல் 3 ,, — தலை — தனநாசம்

2) அடுத்து 3 ,, — கழுத்து — செல்வம்

3) அடுத்து 3 ,, — வலக்கை — நன்மை

4) அடுத்து 3 ,, — இடக்கை — வியாகூலம் மனக்கஷ்டம்

5) அடுத்து 5 ,, — வயிறு — ஆக்கம் தனலாபம்

6) அடுத்து 2 ,, — இடுப்பு — அழிவு நஷ்டம்

7) அடுத்து 8 ,, — பாதம் வரை — எல்லா நன்மையும் உண்டாகும்

ஜென்ம நக்ஷத்திரம், ஒரு மாதத்தில் எந்தக்கிழமையில் வருகிறதோ, அதற்கேற்ப அந்த மாதத்தின் பலன் அமையும். அதன் விவரம் வருமாறு. இதற்குத் தமிழ் மாதத்தையே கொள்ள வேண்டும்.

1) ஞாயிற்றுக்கிழமையில் வந்தால்— மாதம் பூராவும் யாத்திரை.

2) திங்கட்கிழமையில் வந்தால் — நன்மை;போஜன சுகம்

3) செவ்வாய்க்கிழமையில் வந்தால்— இந்த மாதத்தில் இவன் சோம்பித் திரிவான். இவனுக்கு இம்மாதத்தில் தீ, மின் விபத்துகள் ஏற்படலாம்.

4) புதன்கிழமையில் வந்தால் — கல்வித் தேர்ச்சி அச்ச உணர்வு, குழப்பம்.

5) வியாழக்கிழமையில் வந்தால்— போஜன சுகம், நிம்மதி சுகம், சந்தோஷம்.

6) வெள்ளிக்கிழமையில் வந்தால்— பூரண சுகம், நிம்மதி

7) சனிக்கிழமையில் வந்தால் — மாதம் பூராவும் ஏதாவது கஷ்டம் இருந்துகொண்டே இருக்கும்.

அங்க நக்ஷத்திர பலன் பார்க்கும் விதம் :

ஒருவன் ஜென்ம நக்ஷத்திரம் சித்திரை என்று வைத்துக் கொள்வோம். சனி தற்போது திருவோண நக்ஷத்திரத்தில் சஞ்சாரம். சித்திரை முதல் எண்ண 9—ஆவது நக்ஷத்திரம் ஆகிறது. முதலில் சொன்ன பொது விதிப்படி, இவன் வலக் கையில் நடக்கிறாள்—இதற்குப் பலன் — பயணம்.

இரண்டாவது சொன்ன சூடாமணி உள்ளமுடையான் கருத்துப்படி, இவன் கால்களில் இருப்பான். இதற்கும் பலன் யாத்திரைதான்.

இவற்றில் பொது விதியில் சுபமும், சிறப்பு விதியில் அசுபமும் இணைந்து மத்திம பலன் நடக்கும் என்றும், மாறி வந்தாலும் அதே மத்திப பலன் என்றும் கொள்ள வேண்டும்.

அத்தியாயம் - 25

## மூர்த்தி நிர்ணயப் பலன்கள்

ஒரு கோள், ஒரு ராசியிலிருந்து மற்றொரு ராசிக்குப் பெயரும்போது என்ன [நக்ஷத்திர] ராசியில் சந்திரன் இருப்பானோ, அது ஒருவர் ஜென்ம ராசிக்கு எத்தனை யாவதாக வருமோ, அந்தக் கணக்குப்படி அந்தக் கிரஹம் சுவர்ண [தங்கம்] ரஜதம் (வெள்ளி), தாமிரம் [செம்பு] உலோஹம் [இரும்பு] என்ற மூர்த்திகளாக மாறிப் பலன் தருகின்றனர். இதுவே மூர்த்தி நிர்ணயம் என்று சொல்வது. மேலே சொன்ன வரிசை வரன்முறையில். இவர்கள் அதிக சுப பலன், சாதாரண சுப பலன், சுப பலன், அதம சுப பலன் இவற்றைத் தருகின்றனர். இதன் நிர்ணயமுறை பின் வருமாறு :

1] ஒரு கிரஹப் பெயர்ச்சியன்று சந்திரன் ஒருவரின் ஜென்ம ராசிக்கு 1, 6, 11-ஆவது ராசிகளில் இருந்தால், அவன் சுவர்ண மூர்த்தியாகிறான்.

2] அதேபோல் 2, 5, 9-ஆம் ராசிகளில் இருந்தால், ரஜத மூர்த்தியாகிறான்.

3] 3, 7, 10-ஆவது ராசிகளில் இருந்தால், தாமிர மூர்த்தியாகிறான்.

4] மற்ற 4, 8, 12–ஆவது ராசிகளில் இருந்தால், உலோஹ மூர்த்தியாகிறான்.

முன்னர் சொன்னபடி சுவர்ணமூர்த்தி—முழு சுபம்
ரஜத மூர்த்தி — $\frac{3}{4}$ சுபம்
தாம்பரமூர்த்தி — $\frac{1}{2}$ சுபம்
உலோஹ மூர்த்தி— $\frac{1}{4}$ சுபம்

என்ற அளவில் சுப பலன் தருகின்றனர்.

இவை சுபக்கிரஹங்களான வளர்பிறைச் சந்திரன், குரு, சுக்கிரன், சுப பார்வை சம்பந்தம் பெற்ற புதன் இவர்களுக்குப் பொருந்தும்.

ஆனால் அசுபக் கோள்களான சனி, செவ்வாய், சூரியன், தேய்பிறை சந்திரன், பாபநோக்கு சம்பந்தம் பெற்ற புதன், ராகு, கேது இவர்கள் மூர்த்தி பேதத்தால் பலனளிக்கும் அளவும் கீழ்க்கண்டபடி வேறுபடும்.

1] ரஜதமூர்த்தியானால் முழுச் சுபம்
2] தாமிர மூர்த்தி முக்கால் சுபம்
3] உலோஹ மூர்த்தி அரைச் சுபம்
4] சுவர்ண மூர்த்தி கால் சுபம்

மேற்கண்ட முறையைச் சிறப்புவிதி என்றும், சாதாரண முறைப்படி இயல்பாக கோள்கள் தரும் பலனைப் பொது விதி என்றும் கொள்ள வேண்டும். இந்த வகையில் ஒரு கோள் 8 விதமாகப் பலன் தருகிறது.

1] பொது விதிப்படி பூரண சுப பலன்
2] பொது விதிப்படி பூரண அசுப பலன்
3] சிறப்பு விதிப்படி பூரண சுப பலன் [சுவர்ணம்]
4] சிறப்பு விதிப்படி முக்கால் சுப பலன் [ரஜதம்]
5] சிறப்பு விதிப்படி அரை சுப பலன் [தாமிரம்]
6] சிறப்பு விதிப்படி கால் சுப பலன் [உலோஹம்]

7] இரு விதிப்படியும் பூரண அசுப பலன்
8] இரு விதிப்படியும் பூரண அசுப பலன்

இனி, இந்த 8 விதங்களையும் சீர்தூக்கிப் பார்த்து, பொது விதிப்படியும், சிறப்பு விதிப்படியும் இரண்டும் சேர்ந்து தரும் முழுச் சுபப் பலன் அளவு (Unit Value) ஒன்று என்று வைத்து இரண்டுக்கும் பாதிப்பாதி என்று சமமாகப் பங்கிட்டு, சிறப்பு விதியின் அரைப் பங்கை அதன் 4 வகையில் பிரித்து, மொத்தத்தையும் கூட்ட நிகர சுப பலன் அறியலாம்.

இப்பொழுது உதாரணம் ஒன்றின் மூலம் இதை விளக்கு வோம். 14—8—1991 அன்று குரு கடகத்தில் இருந்து சிம்மத்திற்குப் பெயருகிறார். அன்று கன்னியில் சந்திரன் இருக்கிறார். இதனால் குரு—

1] கன்னி, விருச்சிகம், மேஷ ராசிகளுக்கு சுவர்ண மூர்த்தியாகிறார். பலன் அளவு $\frac{1}{2}$

2] ரிஷபம், சிம்மம், மகர ராசிகளுக்கு ரஜத மூர்த்தி யாகிறார் $\frac{1}{2} \times \frac{1}{2} = \frac{1}{4}$

3] கடகம், தனுசு, மீன ராசிகளுக்கு தாமிர மூர்த்தி யாகிறார் $\frac{1}{2} \times \frac{1}{4} = \frac{1}{8}$

4] மிதுனம், துலாம், கும்ப ராசிகளுக்கு உலோஹ மூர்த்தியாகிறார். பலன் $\frac{1}{2} \times \frac{1}{8} = \frac{1}{16}$

அதாவது பொது விதிக்கு $\frac{1}{2}$ பங்கும், சிறப்பு விதிக்கு $\frac{1}{2}$ பங்கும் பங்கிட்டு, அந்த $\frac{1}{2}$ பங்கை சிறப்பு விதி 4–க்கும் பங்கிடப்பட்டுள்ளது. இப்பொழுது குரு இந்த அளவுப்படி 12 ராசிகளுக்கும் எப்படிப் பலன் தருகிறார் என்று பார்ப் போம். முதலில் இரண்டு வழியையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

1] குரு இம்முறை மேஷம் [5] கடகம் [2] துலாம் [11] தனுசு [9] கும்பம் [7] ஆகிய ராசிகளுக்கு, நக வளைவில் குறித்த இடங்களுக்கு வருவதால் சுப பலன் தருகிறார்.

குறிப்பு : மேஷத்திற்குச் சிறப்பு விதிப்படி இவர் சுவர்ண மூர்த்தி, இதனால் அதிக சுப பலன் தருவார்.

கடகத்திற்கு தாமிரமூர்த்தியாதலால் சுப பலன் குறைகிறது.

துலாத்திற்கு உலோஹமூர்த்தியாவதால் சுப பலன் மிகவும் குறைகிறது.

தனுசுக்கு தாமிரமூர்த்தியாவதால் சுப பலன் குறைகிறது.

கும்பத்திற்கு தாமிரமூர்த்தியாவதால் சுப பலன் மிகவும் குறைகிறது.

1. குரு இம்முறை ரிஷபம், மிதுனம், சிம்மம், கன்னி விருச்சிகம், மகரம், மீனம் ஆகிய ராசிகளில் 4,3,1,12,10,8, 6 ஆகிய இடங்களில் முறையே அசுபம் தருகிறார். இது மூர்த்தி பலத்தால் மாறும் விதத்தைப் பார்ப்போம்.

1. ரிஷபத்திற்கு — ரஜதமூர்த்தி ஆவதால் அசுப பலன் பெரும்பாலும் குறையும்.
2. மிதுனத்திற்கு — உலோஹ மூர்த்தி, 3 இல் குருவும் அசுபம் எனவே தீயபலன் இரட்டிப்பு ஆகிறது.
3. சிம்மத்திற்கு — ரஜத மூர்த்தி — ஆதலால் அசுப பலன் ¾ பங்கு குறையும்.
4. கன்னிக்கு சுவர்ண மூர்த்தி — ஆதலால் அசுபம் ஏறக்குறைய முழுவதும் குறையும்.
5. விருச்சிகம் — இந்த ராசிக்கும் சுவர்ண மூர்த்தி — இதனால் அசுபம் பெரும் பகுதி குறையும்.

6. மகரத்திற்கு — ரஜத மூர்த்தி — இதனால் அசுப பலன் $\frac{1}{9}$ பங்கு குறையும்.

7. மீனத்திற்கு தாமிர மூர்த்தி — இதனால் அசுப பலன் சிறிதளவு ($\frac{1}{4}$) பங்கு குறையும்.

இப்படி மூர்த்தி நிர்ணய பலனை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இதனால் நாம் சுவர்ணம், ரஜதம், தாமிரம், உலோஹம் என்றும் இந்த வரிசையில் சுபபலன் குறைந்து கொண்டே வரும் என்று புரிந்து கொள்ள வேண்டும். இனி இந்த குரு பெயர்ச்சி 12 ராசிகளுக்கும் தரும் கிரக சுப பலன் எவ்வளவு என்பதைப் பார்ப்போம்.

| ராசி | பொதுவிதி | அளவு | சிறப்புவிதி | அளவு | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மேஷம் | சுபம் (5) | 0 .500 | சுவர்ணம் | 0. 500 | 1.00 |
| ரிஷபம் | அசுபம்(4) | — | ரஜதம் | 0. 250 | 0.250 |
| மிதுனம் | அசுபம்(3) | — | உலோஹம் | 0 0625 | 0.0625 |
| கடகம் | சுபம் (2) | 0. 500 | தாமிரம் | 0. 125 | 0.625 |
| சிம்மம் | அசுபம்(1) | — | ரஜதம் | 0. 250 | 0.250 |
| கன்னி | அசுபம்(12) | — | சுவர்ணம் | 0. 500 | 0.500 |
| துலாம் | சுபம் (11) | 0. 500 | உலோஹம் | 0. 0625 | 0.5625 |
| விருச்சிகம் | அசுபம்(10) | — | சுவர்ணம் | 0. 500 | 0.500 |
| தனுசு | சுபம் (9) | 0. 500 | தாமிரம் | 0. 125 | 0.625 |
| மகரம் | அசுபம்(8) | — | ரஜதம் | 0. 250 | 0.250 |
| கும்பம் | சுபம் (7) | 0. 500 | உலோஹம் | 0. 0625 | 0.5625 |
| மீனம் | அசுபம்(6) | — | தாமிரம் | 0. 125 | 0.125 |

இப்படியே கோசார பலனை நிகரக் கணக்கிட்டதைப் பார்த்தால், மேஷம் மிக நன்மை அடைவர் என்பதும் எந்த

ராசியும்அடிமட்ட மானபலனை அனுபவிக்கவில்லைஎன்பதும் புரியும். குரு. சனி, வருஷக்கோள்கள் ஆகையால் இவற்றுக்கு மட்டும் தனித் தனியாகவும், இரண்டையும் மேலும் அளவுகளையும் பாதிபாதியாக்கி பங்கிட்டு 12 ராசிகளுக்கும் கூட்டி நிகர பலனை அறிய முடியும். நமது ஆங்கில குரு பெயர்ச்சி, சனி பெயர்ச்சி கட்டுரைகளில் (Astrological magazine) மற்றும் தனிக் குரு பெயர்ச்சி சனி பெயர்ச்சி நூல்களிலும் இவை தனியாகக் கணிதம் செய்து காட்டப் படுகின்றன.

எனவே, மூர்த்தி நிர்ணயம், சுபபலனை அதிக சுபம் அல்லது அசுபம். இப்படி மாற்றும் தார தம்யவன்மை யுள்ளதுஎன்பதைப் புரிந்து கொள்ளலாம். சனிக்கு4 மூர்த்தி களுக்கும் வடமொழி நூலொன்று பலன் கூறியுள்ளது. விரிவஞ்சி எழுதவில்லை.

அத்தியாயம்—26

# ஏழரைச் சனி மற்றும் சனியின் பலவகை சிறப்புக் கோசார பலன்கள்

சனி எல்லாக்கோள்களையும்விட பாபியாவான். ஆதலால் இதன் பலனைப் பல கோணங்களில் ஆராய்ந்து பலன் கூறியுள்ளனர் நம் முன்னோர், அதனைப் பின் வருமாறு வகைப்படுத்தலாம்.

1. அர்த்தாஷ்டமச் சனி [4 இல் சனி] 2. அஷ்டமச் சனி [8 இல் சனி] 3. கண்டச்சனி (7 இல் சனி) 4. 7½ சனி [12, 1, 2 ஆம் இடச் சனி] 5. ஜன்மச் சனி [7½ சனியின் நடுப் பகுதி] 6. அங்கச் சனி ஆகியவை இவற்றை ஒவ்வொன்றாகக் கவனிப்போம்.

சனி ஒருவர் ஜென்ம ராசிக்கு 3,6,11 ஆம் இடங்களில் மட்டும் சுபபலன் தருகிறார். இவன் ராசி மண்டலத்தை 30 வருஷங்களில் கடக்கிறார். ஒரு ராசிக்கு $2\frac{1}{2}$ வருஷம் வீதம். எனவே ஒரு சுற்றில் மேலேயுள்ள 3 போக மீதியுள்ள 9 இடங்களுக்கு $22\frac{1}{2}$ வருஷம் கஷ்டம் தருகிறார். ஒருவர் 90 வயது வாழ்வதாக வைத்துக் கொண்டால், 3 சுற்றுகளில் சனி $22\frac{1}{2} \times 3 = 67\frac{1}{2}$ வருஷங்கள் மனிதனைக் கஷ்டத்திற் குள்ளாக்குகிறார். இது உண்மையா என்பதை இப்பொழுது கவனிப்போம்.

2. இவன் அசுபபலன் கீழ்க்கண்ட வரிசைகளில் ஒன்றுக் கொன்று அதிகமாகிறது.

1) 3. 6, 11 இல் பூரண சுபபலன்

2) 5, 9, 10 இல் சாதாரண அசுபபலன்

3) 4 இல் அர்த்தாஷ்டம சனி அசுபபலன்

4) 7 இல் கண்ட சனியாகி மேலும் சிறிது அசுபபலன்.

5) 8 இல் அஷ்ட சனியாகி அதைவிட அதிக அசுபம்.

6) 2, 12 ஆம் இடங்களில் $7\frac{1}{2}$ சனியின் முதல் கடைப் பகுதிகளில் கொடிய அசுபபலன்கள்.

7) ஜென்ம ராசியில் ஜென்ம சனியாகி $7\frac{1}{2}$ சனியின் நடுப்பகுதியாகி. எல்லா இடங்களைவிட மிகக் கொடிய பலன்.

எனவே, இந்த $2\frac{1}{2}$ வருஷத்திற்குத் தான் அதிகம் அஞ்ச வேண்டும். இப்படி 3 சுற்றுக்கும் சேர்த்து ஏழரை வருஷம் தான் வாழ்க்கையில் அதிக கஷ்டம். மற்றவற்றில் எல்லாம் தள்ளுபடி ஆகிவிடுகிறது.

3. இவற்றில் சனியின் கோசார பலன் அத்தியாயத் தில் விரிவாக ஒவ்வொன்றிற்கும் பலன் எழுதியுள்ளோம்.

(18 ஆம் அத்தியாயம் பார்க்கவும்,)

இதில், அர்த்தாஷ்டம சனிக்கும் [4 ல் சனி], அஷ்டம சனிக்கும் (8 இல்), முறையே 'லகு கல்யாணி' 'பிருஹத் கல்யாணி' என்றும் பெயர் வைத்து, வடமொழி நூல்கள் தனிப் பலன் கூறியுள்ளன.

லகு கல்யாணி [4 இல்]யின்போது, ரோகம், பந்துஜன விரோதம், கிலேசம், வீண் அலைச்சல், அதிக மனக்கவலை ஆகிய இவற்றை ஏற்படுத்துவான்.

பிருஹத் கல்யாணியின் போது [8 இல்] மாரகம் அல்லது மாரகத்திற்குச் சமமான கண்டம், துன்பம், துக்கம், அக்கினி மற்றும் ஆயுத பயம் போன்ற தீயபலன்களைத் தரு கின்றான்.

4. இனி ஏழரை சனியைப் பற்றிப் பார்ப்போம். 3, 6, 11 தவிர மற்ற இடத்தில் அசுபபலன் தரும் சனி. ஜென்மச் சனியாகும்போது தான் அதிக கொடியபலன் தருகின்றான். இதனுடன் எல்லாக் கோள்களும் பல இடங்களில் அசுபம் தந்தாலும், ஒரே ஓர் இடத்தில்தான் அவற்றில் அசுபம் தரும் என்று வாக்யம் கூறும். அதைத் தனியாகப் பாட லுடன் உரிய இடத்தில் விளக்குவோம்.

இப்படிப் பார்க்கும்போது ஜென்ம சனி, அஷ்டமசனி அர்த்தாஷ்டமச் சனி, கண்டச் சனி என 4 இடங்களில் 10 வருஷம் $4 \times 2\frac{1}{2} = 10$ வீதம் 3 சுற்றில் மொத்தம் 30வருஷம் சனியால் கஷ்டம் ஏற்படுகிறது. இதனால் தான் '30வருஷம் வாழ்ந்தவனும் இல்லை, 30 வருஷம் கெட்டவனும் இல்லை' என்ற பழமொழியும் பழக்கத்தில் உள்ளது. இதில் ஜென்மச் சனிதான் அதிக கெடுதி என்று ஏற்கனவே சொன்னோம்.

இந்த ஏழரை சனியின் முதல் சுற்று 'மங்கு சனி' எனப்படும். இரண்டாம் சுற்று 'பொங்கு சனி' எனப்படும். 3 ஆம் சுற்று 'குங்கு சனி' எனப்படும் 4 ஆம் சுற்று. 'மரண சனி' எனப்படும். இதன் பலனாவது.

1) மங்கு சனியில் வேதனை மிகும். அரசால் கஷ்டம் உண்டாகும். பலசோதனைகள் மிகும். படிப்பு தடைபடல், உடல் நலம் கெடல் போன்றவையும் நேரும். துயரமே மிஞ்சும்.

2) பொங்கு சனி விவாகம் முதலிய சோபன மங்கள காரியங்கள் மிகும். நற்கருமங்கள் செய்வார். இதில் கடைசியில் முற்பகுதியின் இழப்பைச் சரிக் கட்டும். தாய் தந்தையர்க்கு மாரகம் வரலாம்.

3) குங்கு சனி [குமுங்கு சனி] எப்பொழுதும் மன சஞ்சலம் கவலை; துக்கம், துயரம் மிகும். இதில் ஆயுர் தாயம் முடியுமானால் தனக்கே மாரகம் உண்டாகும்.

4) மரணச் சனி இது எதற்கும் பயனில்லை. வயதுக்கு வரம்பு வகுக்கும் மரணமே வரும் என்பதாம்.

இந்த நான்கு சுற்றிலும் ஜென்ம சனியே அதிகெடுதியாகும். இதில் ஆயுர் பங்கம் ஏற்படும். ஜென்மசனியில் [3 அல்லது 4 ஆம் சுற்று] மரணபயமும், மற்றவற்றில் சிறை பயம். வெகு ரோகம், சில்லறைச் சண்டை. மான கௌரவ பங்கம், மாரக பயம். மனம் பயித்தியமாகும் அளவுக்கு குழப்பம் அடைதல் போன்ற அசுபபலன்களே உண்டாகும்.

7½ சனியின் அங்க சனி

இந்த ஏழரை வருஷங்களில் 12 இல் முதல் 2½ வருஷம் சனி தலையில் வருகிறான்.

நடு 2½ வருஷத்தில் இதயத்தில் வருகிறான்.

கடைசி 2½ வருஷத்தில் கால்களில் வருகிறான்.

இதில் இதயத்தில் தான் அதிக கெடுதி செய்கிறான்.

12 ராசிகளில் சரம், ஸ்திரம், உபயம் என 3 வகை ஒவ்வொன்றுக்கும் 4 ராசிகள் உண்டு. மேஷம் முதல் மேற்

கண்ட வரிசையில் அவற்றை மேஷம் சரம். ரிஷபம் ஸ்திரம், மிதுனம் உபயம் என, முறையே அடுத்து அடுத்து மீண்டும் கணக்கிட்டு அறிய வேண்டும்.

இப்படிச்சொல்லப்பட்டதில், தமிழ் புலிப் பாணிச்சித்தர் வாக்கியப்படி சனி ஏழரை சனியில் சர இராசிக்கு அதிக கெடுதியும், ஸ்திர ராசிக்கு அதைவிடக் குறைவான கெடுதியும், உபய ராசிக்கு மிகவும் குறைவாக அசுப பலனும் அதிகம் சுபபலனும் தருவான் என்று கூறுகிறார்.

கேளப்யா கடகம்தான் சிங்கம் ஜென்மம்
கெடுதிமிகச் செய்வனடா வேட லுண்டு
நாளப்பா நலமாகும் மற்ற ராசி
நரச்—சுகமும் கிட்டுமடா வேட்ட முண்டு

மேற்கண்ட பாடலில், கடகம் என்ற சொல்லால், சந்திரனின் ஆதிக்கத்தில் உள்ள கடகம் முதல் கும்பம் வரையில் உள்ள சர ராசிகளையும், சிங்கம்தான் என்று சொன்னதால் சூரியனின் ஆதிக்கத்தில் உள்ள சிம்மம் முதல் மகரம் வரையுள்ளவற்றில் ஸ்திர ராசிகளான சிம்மம் விருச்சிகத்தையும் ஆக மேஷம், கடகம், சிம்மம், விருச்சிகம் இந்த 4 ராசிகளுக்கும், ஜென்மம் என்று சொன்னதால், எந்த ராசியானாலும் ஏழரை ஜென்ம சனியாக வரும் போதும், அதிகம் கெடுதி செய்யும் என்றும் சொல்லப்பட்டது. மற்ற ராசி நாளப்பா நலமாகும் என்று சொன்னதால் ஏழரை சனி ஆரம்பித்து நாள் செல்லச் செல்ல தீய பலன் நல்லதாகிவிடும் என்றும் கொள்ள வேண்டும். எனவே, இந்தக் கருத்துப்படி மேஷம், கடகம், சிம்மம், விருச்சிகம் என்றும் இவற்றிற்குத்தான் ஏழரை சனி அதிகம் கெடுக்கும் என்றும் அறிந்து கொள்ள வேண்டும். மற்ற ராசிக்காரர்கள், நிகரத்தில் சமாளித்துக் கொள்வார்கள் என்றும் கொள்ள வேண்டும்.

ஏழரை சனி மொத்தம் 90 மாதங்கள் (ஏழரை வருஷங்கள்) நடக்கிறது. இதன் அசுப பலனை பண்டை நூலார் விளக்கியுள்ள விதம் வருமாறு :

| இடம் | மாதம் | அங்கம் | பலன் |
|---|---|---|---|
| 1) விரயம் [12] | 7 | தலை | கஷ்டம் நஷ்டம் |
| 2) விரயம் [12] | 9 | கண்கள் | நஷ்டம் |
| 3) விரயம் [12] | 8 | முகம் | லாபம் |
| 4) விரயம் [12] | 6 | கழுத்து | லாபம் |
| 5) ஜென்ம ராசி [1] | 10 | இதயம் | லாபம் |
| 6) ஜென்ம ராசி [1] | 11 | வயிறு | லாபம் |
| 7) ஜென்ம ராசி [1] | 5 | கொப்பூழ் (நாபி) | பயம் |
| 8) ஜென்ம ஸ்தானம் [1] | 4 | குதம் (எரு வாய்) | மரணம் |
| 9) தன ஸ்தானம் [2] | 13 | முழங்கால் | வெற்றி |
| 10) தன ஸ்தானம் [2] | 12 | தொடை | சௌக்யம் |
| 11) தன ஸ்தானம் [2] | 5 | பாதம் | பிரயாணம் |

90 மாதம்

ஆக 90 மாதம் ஏழரை வருஷத்திற்கும் பலனும் சொல்லப்பட்டது. எனவே, ஒவ்வொரு சுற்று ஏழரை சனி முழுவதும் அசுப பலன் தருவதில்லை. முதல் 16 மாதங்கள் அசுப பலனும், அடுத்து தொடர்ச்சியாக 35 மாதங்கள் சுப பலனும், அதை அடுத்த ஜென்ம சனியின் கடைசி 4 மாதங்கள் மிக அசுப பலத்தையும் (இதுதான் மிகவும் மோசமான காலம்) அடுத்து கடைசி பாதச் சனி 30மாதமும் சுப பலனும் தருவதைக் காணலாம்.

அதை அடுத்து 12 ராசிகளுக்கும் தன் ஏழரை வருஷ காலத்தில், எந்த பகுதியில் அதிக கெடுதியைத் தரும் என்ற விபரங்கள் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன.

அதன் விவரம் வருமாறு :-

| எண் | ராசி | பகுதி | காலம் | | சனி உள்ள ராசி |
|---|---|---|---|---|---|
| 1) | மேஷம் | நடு | இரண்டரை வருஷம் | மிகக் கெடுதி | மேஷம் |
| 2) | ரிஷபம் | முதல் | ,, | ,, | மேஷம் |
| 3) | மிதுனம் | முதல் | ,, | ,, | ரிஷபம் |
| 4) | கடகம் | நடு | ,, | ,, | கடகம் |
| 5) | சிம்மம் | முதல் | ,, | ,, | கடகம் |
| 6) | கன்னி | முதல் | ,, | ,, | சிம்மம் |
| 7) | துலாம் | கடைசி | ,, | ,, | விருச்சிகம் |
| 8) | விருச்சிகம் | கடைசி | ,, | ,, | தனுசு |
| 9) | தனுசு | முதல் | ,, | ,, | விருச்சிகம் |
| 10) | மகரம் | முதல் | ,, | ,, | தனுசு |
| 11) | கும்பம் | கடைசி | ,, | ,, | மீனம் |
| 12) | மீனம் | கடைசி | ,, | ,, | மேஷம் |

ஜனன காலத்தில் சந்திரன் இருக்கும் ராசியில் இருந்து கேந்திரத்தில் அல்லது 7-ஆவது ராசியில் சனி இருந்தால் இப்படிப்பட்டவர்களுக்கு ஏழரை சனி அதிகக் கெடுதி தராது என்பதும் ஒரு கொள்கையாகும்.

ஒவ்வொரு ராசிக்கும் ஏழரை சனி எந்த வாகனத்தில் வருகிறது என்ற கணக்கும் உண்டு. சனிப் பெயர்ச்சியின் போது அன்றைய நக்ஷத்திரத்தைக் குறித்து வைத்துக் கொண்டு இது ஒருவன் ஜென்ம நக்ஷத்திரம் முதல் எண்ணி வரும் தொகையை 9ஆல் வகுத்த மிச்சம்

| எண் | | வாகனம் | பலன் |
|---|---|---|---|
| 1. | ஆனால் ஏழரை சனி | கழுதை | கெடுதி |
| 2. | ... ... ... | குதிரை | வெற்றி |
| 3. | ... ... ... | யானை | சௌக்யம் |
| 4. | ... ... ... | எருமை | மத்திமம் |
| 5. | ... ... ... | சிங்கம் | சத்ரு நாசம் |
| 6. | ... ... ... | நரி | சோகம் மனக் கவலை |
| 7. | ... ... ... | காகம் | கலகம் |
| 8. | ... ... ... | மயில் | லாபம் |
| 9. | ... ... ... | அன்னம் | சுகம் |

இதற்குமுன் சொன்ன 12 ராசிக்கும் முதல் இடை கடைப் பகுதிகளில் ஏற்படும் பலனில் வாகனப்படியும் ஒத்துப் பார்த்து, இரண்டும் நல்லதானால் மிகவும் நல்ல பலனும், ஒன்று கெட்டால் மத்திப பலனும், இரண்டும் கெட்டால் அதிக அதமம், அதாவது மட்டமான பலனும் நடக்கும் என்று கொள்ள வேண்டும்.

எனவே, 8 வகையாக தாரதம்யப்படுத்தி ஏழரைச் சனிக்குப் பலன் சொன்னால் இந்த விதிவிலக்குப்படி பெரும் பகுதியும் கெட்ட பலன் குறைந்து விடுவதால், ஏழரைச் சனிக்கு யாரும் பயப்பட வேண்டியதில்லை.

## குருவின் பரியாய பலன்கள்

சனியைப் போலவே குருவும் ஒரு ராசியில் நீண்ட காலம் அதாவது 1 வருஷம் தங்குவதாகும். ஏழரைச் சனிக்குப் பலன் உள்ளது போலவே, இவரும் இவர் சுற்றி வரும் ஒவ்வொரு தடவைக்கும் பல வகையில் பலன்

தருகிறார். 12 வருஷ காலத்தில் ராசி மண்டலத்தை ஒரு சுற்றுச் சுற்றி முடிக்கும் இவர், ஒருவர் வாழ்க்கையில் அதிகபட்சம் 6 தடவை சுற்றி வருவார். இந்த ஒவ்வொரு சுற்றுக்கும் பரியாயம் என்று பெயர்.

ஒருவர் வயதை 12ஆல் வகுத்து, குரு இருக்கும் இடத்திலிருந்து ஒவ்வொரு பரியாயம் அல்லது சுற்றும் ஆரம்பம் ஆகிறது. உதாரணத்திற்கு, 1930ஆம் வருஷம் ஜூலை மாதம் பிறந்த ஒருவர் இப்போது 61 வயதை அடைந்து உள்ளார். இவருக்கு ஜாதகத்தில் மிதுனத்தில் குரு என்று வைத்துக் கொள்வோம். ரிஷபத்தில் குரு வந்த போது இவர் 61 வயதில் (5 x 12 = 60) இவரின் 5ஆவது சுற்று அல்லது பரியாயம் முடிந்து விட்டது. இப்பொழுது வேறு பரியாயத்தில் இருக்கிறார்.

இதில், தற்போது (14—8—1991–க்குப் பின்) இவர் சிம்மத்தில் இருப்பார். இந்த நபர் கன்னி ராசி. எனவே, 6 ஆவது பரியாயத்தில்; ஜன்மத்திற்கு 12–இல் இருப்பார் என்று கொள்ள வேண்டும். மற்றவர்களுக்கும் இப்படியே கணக்கிட்டுப் புரிந்து கொள்ள வேண்டும். இனி, பரியாயங்களின் பலன் வருமாறு :

1) முதல் பரியாயத்தில் குரு ஜென்மத்திற்கு 8–இல் வரும்போது உயிருக்கு ஆபத்து ஏற்படுத்தும். இதே சமயம் இவர் தகப்பனாருக்கு எல்லா நன்மைகளும், பதவி உயர்வும், முன்னேற்றமும் கிடைக்கும்.

2) இரண்டாம் பரியாயத்தில், மேஷம் அல்லது ரிஷபத்திற்கு வரும்போது, ஒருவர் ஜென்ம ராசிக்கு அது 1, 3, 6, 8, 10, 12 ஆவதாக வந்தால், அவர்களுக்குக் கெட்ட பலன் இராது. மாறாக நல்ல பலனே நடக்கும்.

3) மூன்றாம் பரியாத்தில் குரு ஒருவர் ஜென்ம ராசியிலிருந்து 1, 4, 5, 7, 9, 11, 12 ஆகிய இடங்களில் நன்மையே செய்கிறார். இந்த வயது நல்ல இளமையாக

வருவதால், பெரும்பாலும் இதில் குரு பலனும் திருமணமும் ஏற்படும் என்று திடமாக நம்பலாம்.

4) நான்காவது பரியாயத்தில், ஜென்மத்திற்கு 2-இல் வரும்போது அரசாங்கத்தால் பயமும், அதே சமயத்தில் தன விருத்தியும் 4-இல் வரும்போது சுக சௌக்யங்களும்; 9-இல் வரும் போது எல்லாவித முன்னேற்றமும் 11-இல் தன விருத்தியும் ஏற்படுகிறது.

5. ஐந்தாவது பரியாயத்தில், ஜென்மராசிக்கு வரும் போது தீராத மனக் கவலையையும், 2இல் வரும்போது அதிக தனலாபத்தையும், 4இல் வரும்போது சுக சௌக்யம் நிம்மதியையும் தருகிறார்.

6. ஆறாவது பரியாயத்தில் 2,5.7.9, மற்றும் 11ஆவது இடங்களில் வரும் போது, மிக நல்ல பலன்களும் 8இல் வரும்போது மாரகமும் ஏற்படலாம். ஆனால், ஆயுர்த்தாய பரிமாணமும் முடிந்து. $7\frac{1}{2}$ சனி 3ஆம் 4 ஆம் சுற்று போன்றவை இருந்தால்தான் இந்த மாரகம் ஏற்படும்.

அத்தியாயம் 27

# கோசாரமும் அஷ்ட வர்க்கமும் — பலன்களும்

கோசார பலன், சந்திர இலக்னத்திலிருந்து அறியப் படுகிறது. மேனாட்டினர், சூரியன் இருக்கும் இடத்தைக் கொண்டு, கோசார பலன்களை அறிகின்றனர். இன்னும் பிறந்த போது ஒருவருக்கு கீழ் முகட்டில் (Horoizon) உதயமாகும் ராசிப் பாகையையே லக்னமாகக் கொண்டு, அது முதலாகக் கொண்டு வாழ்க்கையின் நிரந்தரமான முக்கியமான பலன்களை அறிகிறோம். இப்படி சந்திரன் சூரியன், லக்னம் ஆகியவற்றிலிருந்து நாம் பலன் காணும் போது, செவ்வாய் லக்னம், புதன் லக்னம், குரு லக்னம்

என்று நாம் பிறந்தபோது அவை இருக்கும் ராசிகளை முதன்மையாக வைத்து ஏன் பலன் காண முடியாது? இந்த எல்லாக் கோள்களும், தாம் இருக்கும் இடங்களில் இருந்து எந்தெந்த இடங்களில் நன்மை செய்கின்றன? எங்கெங்கு தீமை செய்கின்றன? இது ஒவ்வொரு கோளுக்கும் எந்தெந்த இடங்களில் நலம் தீமை செய்யும்? என்ற விசாரணைக்கு விடைதான் அஷ்ட வர்க்கம் எனப்படும்.

7 கோள்களையும் லக்னத்தையும் சேர்த்து 8 ஆகிறது. (ராகு கேது இதில் கணக்கில் வராது). இவை ஒவ்வொன்றும் தாம் இருக்கும் இடத்திலிருந்தும், மற்றக் கோள்கள் இருக்கும் இடங்களில் இருந்தும் குறிப்பிட்ட ராசிகளில் நன்மை செய்கின்றன. இதனைப் 'பிந்து' அல்லது 'பரல்' என்று சொல்லுகிறார்கள், இப்படி ஒவ்வொரு கோள் தரும் பரன்களும், மொத்தக் கோள்களின் பரல்களும், விதம்விதமாக பலன் தரும் முறையை அஷ்டவர்க்கத்தில் சொல்லியுள்ளனர். (7 கோள்களும் லக்னமும் சேர்ந்து எட்டு, அல்லது அஷ்ட வர்க்கம் என்று ஆகிறது)

சந்திரன் நின்ற ராசியிலிருந்து ஒரு குறிப்பிட்ட நாளில் மற்றக் கோள்கள் இருக்கும் தன்மையால் ஏற்படும் பலனை அறிவது ஸ்தூல முறையாகும்.

இதனை அஷ்டவர்க்க பிந்துக்களுடன் இணைத்துத் தாரதம்யத்தைப் பார்த்துப் பலன் அறிவது நுண்ணிய கோசார முறையாகும். இதுவே, அஷ்ட வர்க்க கோசார மாகும்.

கோள்கள் தரும் மொத்தப் பலனை சர்வாஷ்ட வர்கம் என்று குறிப்பிடுகிறோம். இவற்றை, சுப, அசுப தன்மைப்படி திரிகோண சோதனை, ஏகாதிபத்திய சோதனை என்ற பெயர்களில் ஹாணங்கள் (குறைப்பு) செய்து நிகர அஷ்ட வர்க்கப் பலனையும் அறியும் நுணுக்க மான கணிதங்கள் உண்டு. இவற்றை திரு. தமிழ்வாணன்

வெளியிட்டுள்ள 'ஜாதகம் பார்ப்பது எப்படி?' என்ற நூலில் விரிவாக விளக்கியுள்ளதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள். இங்கு, நாம் எல்லாக் கோளுக்கும் சேர்த்துக் காணும் சர்வாஷ்ட வர்க்கத்தையும், ஒவ்வொரு கோள் மட்டும் தரும் அஷ்ட வர்க்கப்பலனான பின்னாஷ்ட வர்க்கத்தையும் மட்டும் கவனித்து, அவற்றைக் கோசாரத்துடன் இணைத்தும் பலன் சொல்லுவோம்.

முதலில் சாதாரண முறையில் ஒவ்வொரு ராசியிலும் அஷ்ட வர்க்கம் பலன்காணும் முறையைக் கூறுவோம். ஒரு ராசியில் 30 பாகைகள் உள்ளன. இவை கீழ்க்கண்ட கணக்குப்படி 7 கோள்களுக்கும் பங்கிடப் பட்டுள்ளன.

1. 1 முதல் $3\frac{3}{4}$ பாகை வரை — சனியினுடையது
2. $3\frac{3}{4}$ முதல் $7\frac{1}{2}$ வரை — குருவின் பாகம்
3. $7\frac{1}{2}$ முதல் $11\frac{1}{4}$ வரை — செவ்வாய் பாகம்
4. $11\frac{1}{4}$ முதல் 15 வரை — சூரியன் பாகம்
5. 15 முதல் $18\frac{3}{4}$ வரை — சுக்கிரனின் பாகம்
6. $18\frac{3}{4}$ முதல் $22\frac{1}{2}$ வரை — புதனின் பாகம்
7. $22\frac{1}{2}$ முதல் $26\frac{1}{4}$ வரை — சந்திரனின் பாகம்
8. $26\frac{1}{4}$ முதல் 30 வரை — லக்ன பாகம்.

இப்படிச் சொல்லப்பட்டதில், ஒரு கிரகம் ஒரு ராசியில் கோசாரத்தில் செல்லும் போது, அந்தக் கோள் ஒருவர் ஜென்ம ராசிக்கு அசுபபலன் தரும்படி அமைந்தாலும், அந்த இராசியில் (சுப) பிந்துக்கள் கொடுத்துள்ள கோளின் பாகையில் செல்லும்போது அது சுபபலனையும், பிந்து கொடாத கோளின் பாகையில் செல்லும் போது, அசுப பலனையும் தருவதாக இருக்கும்.

உதாரணத்திற்கு, கன்னி ராசிக்காரருக்கு சனி 4இல் தனுசில் சஞ்சரிப்பதாக வைத்துக் கொள்வோம். இவர் தற்போது $22\frac{1}{2}$ முதல் $26\frac{1}{4}$ பாகைக்குள் உள்ள சந்திர

னின் பாகத்தில் செல்வதாகக் கொள்வோம். சந்திரன் சனியின் அஷ்ட வர்க்கத்தில் இந்தச் சந்திரன் பகுதியில் சந்திரனால்சுபபிந்து இருப்பின், இந்த $3\frac{3}{4}$ பாகையைச் சனிகடக்கும் வரை நற்பலனே காணும், சனி சுபாவமாகத் தரவேண்டிய அர்த்தாஷ்டமச் சனியின் அசுபபலன் இராது. இதுவே இந்தத் தனுசில் சந்திரனால் பிந்து இல்லாமல் போனால், அர்த்தாஷ்டமச் சனியின் கொடுமை அதிகமாகும். துன்பம் பெருகும் என்று அறிந்து கொள்ள வேண்டும். உதாரணம் புரிவதற்காக ஒரு ரிஷப லக்ன ஜாதகத்தின் சனி அஷ்ட வர்க்கத்தின் பட்டியலை மட்டும் கீழே காட்டியுள்ளோம்,

### சனி அஷ்டவர்க்கம்

| பாகம் | கோள் | மேஷ | ரிஷ | மிது | கடக | சிம்ம | கன்னி |
|---|---|---|---|---|---|---|---|
| $3^{\circ}\ 45^{1}$ | சனி | — | — | — | 0 | — | 0 |
| $7^{\circ}-30^{1}$ | குரு | 0 | — | — | — | — | 0 |
| $11-15^{1}$ | செவ் | — | 0 | — | 0 | 0 | — |
| $15^{\circ}$ | சூரி | 0 | — | 0 | 0 | — | 0 |
| $18^{\circ}-45^{1}$ | சுக்ர | — | — | — | — | 0 | 0 |
| $22^{\circ}-30^{1}$ | புதன் | 0 | 0 | 0 | 0 | 0 | — |
| $26^{\circ}-15^{1}$ | சந்தி | — | — | — | 0 | — | — |
| $30^{\circ}$ | லக்னம் | — | 0 | — | — | — | 0 |
| மொத்தம் | | 3 | 3 | 2 | 5 | 3 | 5 |

| பாகம் | துலா | விருச் | தனு | மக | கும் | மீனம் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| $3^{\circ}\ 45^{1}$ | 0 | — | — | — | — | 0 | 4 |
| $7^{\circ}-30^{1}$ | 0 | — | — | — | — | 0 | 4 |
| $11-15^{1}$ | — | — | 0 | 0 | 0 | — | 6 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 15° | 0 | — | 0 | — | 0 | 0 | 7 |
| 18°-45¹ | — | — | — | — | 0 | — | 3 |
| 22°-30¹ | — | — | — | — | 0 | — | 6 |
| 26°-15¹ | — | 0 | — | — | 0 | — | 3 |
| 30° | 0 | — | 0 | — | 0 | 0 | 6 |
| மொத்தம் | 4 | 1 | 3 | 1 | 4 | 5 | 39 |

இதன்படி பார்த்தால், தனுசு ராசியில் சந்திரன் பாகத்தில் சனி தற்போதுள்ள தனுசு ராசியில் சுபபிந்து பெறவில்லை. எனவே, இந்த 22°30 'முதல் 26°-15' வரை. கடக்கும் வரை சனி அசுபமே தருவான். அர்த்தாஷ்டமச் சனியின் முழு சுபபலனும் அனுபவிக்க வேண்டியது வரும்.

ஆனால் இதுவே செவ்வாய் பாகமான 7°-30¹ முதல் 11°-15¹ வரையில் சனிக்கு பிந்து உள்ளது. எனவே, இந்த பாகையைக் கடக்கும் கால கட்டத்தில், சனியின் அசுப பலன் தான் இருக்கும். அர்த்தாஷ்டம அசுபபலன் அது வரை இராது.

மற்ற கோள்களுக்கும் அவர் அவர் பின்னாஷ்ட வர்க்க பதகம் மூலம் இதுபோல் அறிந்து கொள்ளலாம். எல்லாக் கோள்களுக்கும் இப்படிப் பலன் காண முடியும். இனி ஒவ்வொரு கோளின் அஷ்ட வர்க்க பலனை மேற்கண்ட ஆதாரத்தால் விளக்குவோம்.

## சூரியன் அஷ்ட வர்க்கப் பலன்

சூரியன் தன் அஷ்ட வர்க்கப் படி—

8 பிந்துக்கள் உள்ள ராசியில், சஞ்சரித்தால் அரசாங்க உதவி, தனலாபம், முன்னேற்றம் இவை ஏற்படும்.

7 பிந்துக்கள் உள்ள ராசியில் சஞ்சரித்தால், வீரம், மரியாதை, மகிழ்ச்சி நன்மை ஏற்படும்.

6 பிந்துக்கள் உள்ள ராசியில் சென்றால், காரிய வெற்றி, தன லாபம். புகழ், வாகன யோகம், அதிகார பதவி ஆகியவை கிடைக்கும்.

5 பிந்துக்கள் உள்ள ராசியில் சென்றால், தனலாபமும் வித்யா லாபமும் ஏற்படும்.

4 பிந்துக்கள் உள்ள ராசியில் சஞ்சரித்தால், தன லாபம், உடனே விரயம் ஆகும். இது மத்திம பலன்.

3 பிந்துக்கள் உள்ள ராசியில் சென்றால், யாத்திரையில் களைப்பு, அலைச்சல். பிழைப்பு நிம்மதி இன்மை-இவை ஏற்படும்.

2 பிந்துக்கள் உள்ள ராசியில் சென்றால் பாவகாரியம் செய்தல். ஏமாற்றம், அரசாங்கத்தால் பயம். களவு முதலியவற்றால் நஷ்டம். என்னும் இவை ஏற்படும்.

1 பிந்து உள்ள ராசி வழியாய் சென்றால், நோய், கவலை, துன்பம் எல்லாம் உண்டாகும்.

பிந்து, அதாவது பிந்துவே பெறாத ராசி வழியாகச் சென்றால், இறப்பு அல்லது அதற்குச் சமமான கண்டம் உண்டு.

சூரியன் ஒரு ராசியில் பிந்துக்கள் தராத கோளின்பாதையில் சென்றால், சொல்ல முடியாத துன்பம். துரதிர்ஷ்டம் மனக்கவலை, ராஜாங்கத்தால் பயம், நோய், சோகம் போன்றவை ஏற்படும்.

சூரியன் ஒரு ராசியில் சுபபிந்து பெற்ற கோளின் பாதை பாகத்தில் சென்றால், பகை அழிவு, எண்ணம், ஈடேறல் என்பவை அந்த ராசி காட்டும் பாவ காரகத்திற்கு ஏற்ப நடக்கும்.

## சந்திரன் அஷ்ட வர்க்கப் பலன்

சந்திரன் தன் அஷ்ட வர்க்கத்தில்—

8 பிந்துக்கள் உள்ள ராசியில் சென்றால் எல்லாவித சௌக்யம். புகழ். அந்தஸ்து. கௌரவம் எல்லாம் உண்டு.

7 பிந்துக்கள் உள்ள ராசியில் சென்றால்; உயர்வகை உடைகள், சுவையான தரமான உணவு. சுகந்த பரிமள வகைகள். உல்லாச விழாக்கள், கேளிக்கைகள் எல்லாம் ஏற்படும்.

6 பிந்துக்கள்...மந்திர சாஸ்திரப் பயிற்சி. பெரும் மதத்தலைவர் அல்லது மடாதிபதிகள் அறிமுகம் ஏற்படும்.

5 பிந்துக்கள்...தைரியம், மனத்திருப்தி தரும்.

4 பிந்துக்கள்...மகிழ்ச்சி, கஷ்டம் இரண்டும் அற்ற மத்திய நிலை தரும்.

3 பிந்துக்கள்...பந்து ஜனங்களுடன் சண்டை.

2 பிந்துக்கள்...மனைவி அல்லது சொத்து காரண மாகச் சண்டை, தன நஷ்டம், நண்பர்களிடமிருந்து பிரிவு போன்றவை ஏற்படும்.

1 பிந்து...எதிர்பாராத கஷ்டம். ஆபத்து ஏற்படலாம்.

0 பிந்து இல்லாத ராசி கஷ்டம், கவலை, மிகவும் அதிகமான மனப் பயம், இவை நடக்கும்.

சந்திரன் பிந்துக்கள் தந்த கிரகத்தின் பாகத்தில் சென்றால், ஆடையாபரணாதி லாபம், எண்ணம் ஈடேறல். பெரியோர் ஆதரவு. அவரால் போற்றப் படல் முதலியவை ஏற்படும்.

## செவ்வாய் அஷ்ட வர்க்கப் பலன்

செவ்வாய் ஒரு ராசியைக் கடக்கும் போது, அதில்.

8 பிந்துக்கள் இருந்தால் பூமி. பணவரவு, சத்துருக்களை ஜெயித்தல்.

7 பிந்துக்கள் இருந்தால் — அதிர்ஷ்டம், பணம் சேர்த்தல், சகோதரர்களுக்கு நன்மை, அவர்களால் உதவி.

6 பிந்துக்கள் இருந்தால்—அரசாங்கம் மூலம் சலுகை உதவி.

5 பிந்துக்கள் இருந்தால்—மகிழ்ச்சியான அனுபவம், தான் அழகனாகத் தோற்றம் அளித்தல்.

4 பிந்துக்கள் இருந்தால்—சுகம், துக்கம் கலப்பு நல்லது கெட்டது இரண்டும் சமம்.

3 பிந்துக்கள் இருந்தால்—தன் சகோதரர் அல்லது தன் மனைவி இவர்களைப் பிரிதல்.

2 பிந்துக்கள் இருந்தால்—மனைவி, சொத்து இவை காரணமாகச் சண்டை, தண்டனை பகைவர்களால் அவமானம் ஏற்படும்.

1 பிந்து இருந்தால்—அறுவை சிகிச்சை, ஆயுதத் தாக்கல் போன்றவற்றால் உடலில் ரணம், நெருப்பு, சுரம், வைசூரி போன்ற வற்றால் பாதிப்பு.

0 பிந்துவே இல்லையானால், வயிற்றுவலி, கண் நோய், வலிப்பு நோய் அதிகக் களைப்பு ஆகிய இவை உண்டாகும்.

செவ்வாய் பிந்து ஏற்படுத்திய கோளின் பாகத்தில் சென்றால். தனம் சேரும். ஆரோக்யம் உயரும். வாழ்க்கை ஒளி பெறும். உடலில் ஓர் ஒளி தோன்றும். செவ்வாய் பிந்து தராத கோளின் பாதையில் சென்றால் செரியாமை, தீராத்

தலைவலி, ரத்தக் கெடுதி, பித்தம் இவற்றால் நோய்கள் ஏற்படும்.

## புதன் அஷ்ட வர்க்கப் பலன்

புதன் ஒரு ராசியைக்கடக்கும் போது அந்த ராசியில்—

8 பிந்துக்கள் இருந்தால்—அரசாங்க உதவி அதிர்ஷ்டம்.

7 பிந்துக்கள் இருந்தால்—பணம் சேர்மானம், பாண்டித்தியம். சிந்தை தெளிவு, அறிவு, மேம்பாடு மகிழ்ச்சி ஆகியவை ஏற்படும்.

6 பிந்துக்கள் உள்ள ராசியாக இருந்தால்—எல்லா முயற்சிகளும் வெற்றி.

5 பிந்துக்கள் இருந்தால்—புது நண்பர்கள், உறவினால் அறிமுகம் அவர்களால் உதவி.

4 பிந்துக்கள் இருந்தால்—திருப்தி, ஆனால், எதிலும் தெம்பில்லாத நிலை.

3 பிந்துக்கள் இருந்தால்—பலவித எண்ணங்கள் கலக்கத்தால், நிம்மதியற்ற மனநிலை, தீராத மனக்கவலை உண்டு.

2 பிந்து இருந்தால்—பலவகையாகத் தோன்றும் நோய்கள் ஏற்படலாம்.

1 பிந்து இருந்தால் கட்டாய சிறை தண்டனை' சிறை வாசம் எதிர்பாராத துக்க நிகழ்ச்சிகள். பகைவர்களால் உபத்திரவம் இவை ஏற்படும்.

0 பிந்துக்கள் எதுவும் இல்லையானால்—எல்லாம் எதிர்பாராமல் நஷ்டம், அதனால் தீராத மனக் கவலை. இவை தோன்றும்.

புதன் பிந்து தந்த கோளின் பாகத்தில் சஞ்சரித்தால் மகிழ்ச்சி, நிறைவான போஜன சுகம், தானதர்மத்தில் ஈடுபாடு என்னும் இவற்றைத் தரும்.

புதன் பிரிந்து தராத கோளின் பாகத்தில் சென்றால் உடலில் சில்லறைக் காயங்கள், பகைவருடன் ஓயாத சண்டை கெட்ட கனவுகள், அகால போஜனம் என்னும் இவை ஏற்படும்.

## குரு அஷ்ட வர்க்க பலன்

குரு தன் அஷ்ட வர்கத்தில் கடக்கும் ராசியில்

8 பிந்துக்கள் இருந்தால—அதிகாரம், பதவி, அரச அந்தஸ்து [மந்திரி] போன்றவை கிடைக்கும்.

7 பிந்துக்கள் இருந்தால்—தனலாபம், எல்லாவற்றிலும் மகிழ்ச்சி புத்திரப் பிராப்தி, என்றும் ஏற்படும்.

6 பிந்துக்கள் இருந்தால்— நல்ல ஆடை மற்றும் அலங்கார ப்ராப்தி, வாகன சுகம், சுவர்ண லாபம். என்றும் இவை ஏற்படும்.

5 பிந்துக்கள் இருந்தால்—சத்ரு நாசம். சிவந்த நிற வஸ்து லாபம், உண்மையான நண்பர்களின் அறிமுகம் அவர்களால் லாபம் —இவை ஏற்படும்.

4 பிந்துக்கள்—லாப நஷ்டம் இரண்டும் சமமாக ஏற்படக் கூடும்.

3 பிந்துக்கள் இருந்தால்—காது நோய், நரம்பு தளர்ச்சி, தரித்திரம், நிம்மதியின்மை—இவை உண்டாகும்.

2 பிந்துக்கள் இருந்தால்—அரசாங்கத்தால் கெடுபிடி மனைவி இழப்பு. புத்திரர் இழப்பு. நிலம் மனைச் சொத்துகளும் கைவிட்டுப் போதல்—இவை உண்டாகும்.

1 பிந்து இருந்தால்—எல்லாம் எதிர்பாராமல் இழத்தல், அதனால் கவலை, பகைவரால் கவலை, உறவுப் பகை சத்துருத் தொல்லை இவை ஏற்படும்.

0 பிந்து இல்லை என்றால்—பணம் குழந்தைகள் இழப்பு, மனக்கவலை, சந்ததி சாவு—போன்றவை நேரும்.

குரு சுபபிந்து தரும் கோளின் பாகையில் சாரம் பெற்றால் பணம் சேரும். மனம் மகிழும். நிறைவான தாம்பத்ய சுகம் ஏற்படும். பகை அழியும். அந்தஸ்து உயரும். உடல் வலிமை பெறும். பெரிய உயர்வு, முன்னேற்றம் இவற்றை அனுபவிப்பார். நல்ல உடை சுவர்ண லாபம், எல்லா மகிழ்ச்சி சாதனமும், ஏராளமாகக் கிடைத்தல், உறவினர்களிடமிருந்து பரிசுகள் குவிதல் போன்ற நற்பலன்கள் உண்டாகும்.

குரு பிந்துக்கள் தராத கோளின் பாகத்தில் சென்றால், மூளை, அறிவுத்திறன் குறையும். பணம் நாசமாகும். பண விஷயமாக ஓயாத கவலை, வாகன, பயண விபத்துகள், எல்லாருடனும் சண்டை, அவமரியாதை, ஏசப்படல், அதிகச் செலவு, சத்துருக்களால் தொல்லை என்னும் இவை ஏற்படுகின்றன.

## சுக்கிரன் அஷ்டவர்க்கப் பலன்

சுக்ரன் கோசாரத்தில் நடக்கும் ராசியில், தன் அஷ்டவர்க்கத்தில்—

8 பிந்துக்கள் இருந்தால்—எல்லாவித போகம், நல்ல ஆடை அலங்காராதிகள் பெண்களால் எல்லாவித உதவி, பூரண சுகம் இவை ஏற்படும்.

7 பிந்துக்கள் இருந்தால்—நகை, விலை உயர்ந்த ரத்னாபரணாதிகள் சேர்க்கை ஏற்படும்.

6 பிந்துக்கள் இருந்தால்—அழகிய அன்புள்ள மனைவியால் பூரண சுகமும், சந்தோஷமும் ஏற்படும்.

5 பிந்துக்கள் இருந்தால்—நண்பர்கள் அறிமுகம்.

4 பிந்துக்கள் இருந்தால்—நல்லது கெட்டது இரண்டும் சமபாகம்.

3 பிந்துக்கள் இருந்தால்—பக்கத்து வீட்டுக்காரர், உறவினர் நண்பர்களுடன் சண்டை.

2 பிந்துக்கள் இருந்தால்—நோய் நல்ல பதவியிலிருந்து நீக்கப்படல் ஆகிய இவை நேரும்.

1 பிந்து இருந்தால் ஜலகண்டம் விஷத்தால் பயம் ஏற்படும்.

0 பிந்துக்களே இல்லையானால் எல்லாவிதமான சோகம், கஷ்டம் துயர் எல்லாம் நேரும்.

சுக்கிரன் ஒரு ராசியில் பிந்து தரும் கோளின் பாகத்தில் சஞ்சரித்தால், அந்தஸ்து உயர்வு, அரசு பதவி, கௌரவம் பெண் குழந்தை ஜனனம், ஐம்புலன், இன்பம் தீர்க்காயுள் விளையாட்டுப் பந்தயங்களில் ஈடுபாடு, தன் குறிக்கோளில் வெற்றி மகிழ்ச்சி பொதுவாக எல்லாவித முன்னேற்றமும் ஏற்படும்.

சுக்ரன் ஒரு ராசியில் பிந்து தராத கோளின் பாகத்தில் சென்றால், கஷ்டம், பகைவரால் தனநாசம், பகைவரால் கஷ்டம், மனைவிக்கு தேக நலம் கெடல், அவளுடன் சண்டை, நிலம் பூமி ஆகியவை தன் கைவிட்டுப் போதல், கஷ்டம், மனக்கவலை அடுத்தடுத்துப் பெருஞ் செலவுகள் பயண விபத்துகள் போன்ற சங்கடங்கள் நேரும்.

## சனி அஷ்டவர்க்கப் பலன்

சனி தன் அஷ்டவர்க்கத்தில் கோசாரத்தில் கடக்கும் ராசியில்—

8 பிந்துக்கள் இருந்தால்—அதிகாரம் கட்டளை இடும் பதவி கிடைத்தல்.

7 பிந்துக்கள் இருந்தால்—நிறையப் பணியாட்களும் வீட்டு விலங்குகளும் ஏற்படும்.

6 பிந்துக்கள் இருந்தால்—தலைவர்கள், முரடர்கள், திருடர்கள் இவர்களால் உயர்வாக மதிக்கப்படல், படைத் தலைவர், பழங்குடி மக்கள் தலைவர் இவர்களின் அறிமுகம் அதனால் நன்மை ஏற்படும்.

5 பிந்துக்கள் இருந்தால் பயிர்த் தொழில் உற்பத்தி யால் அவை அதிக அளவில் பெருகி லாபம் அடைதல்.

4 பிந்துக்கள் இருந்தால் நல்லது கெட்டது இரண்டும் சமம்.

3 பிந்துக்கள் இருந்தால் தன நஷ்டம், மனைவி, பணியாளர் இழப்பு, சந்தோஷம் கெடல் இவை நேரும்.

2 பிந்துக்கள் இருந்தால்—சிறைவாசம், தீராத கவலை, நோய் பாதிப்பு இவை ஏற்படும்.

1 பிந்து இருந்தால் கீழ்த்தரமான, தாழ்ந்த அங்கீக மான வாழ்க்கை நிலை போன்றவை ஏற்படும்.

0 பிந்தானால் எல்லாவற்றிலும் துரதிர்ஷ்டம், மரண பயம் இவை ஏற்படும்.

சனி தன் அஷ்டவர்க்கத்தில் சுபபிந்து தரும் ராசியின் பாகத்தைக் கடந்தால் வழக்குகளில் வெற்றியும் பூர்வீக சொத்தும் கிடைக்கும். எல்லாக் காரியமும் வெற்றி பெறும். பெருந்தலைவர்களால் உதவி கிடைக்கும். பல தரப்பட்ட உயர்ந்தோர் சந்திப்பும், பூமி லாபமும் உண்டாகும். பகை வெல்லல், தார்மிகப் புண்ணியகாரியங் களில் ஈடுபாடு, அரசாங்கத்தால் எதிர்பாராத பெரும் உதவிகள் போன்றவை ஏற்படும்.

பயிர்த் தொழிலில் அதிக லாபம் உண்டாகும். சனி தன் அஷ்டவர்க்கத்தில் சுபபலன் தராத கோளின் பாகத்தில் சஞ்சரித்தால், தீராத கஷ்டம், அரசாங்க பயம் சங்கடங்கள் அதிகமாதல், உறவினர் தொல்லை, விபத்து அல்லது ஆயுத தாக்குதலால் ரணகாயம், தனநாசம், மனவுளைச்சல், பூமி மனை கைநழுவல், பயணத்தின்போது நஷ்டம் ஆகியவை ஏற்படுகின்றன.

சனி அஷ்டவர்க்கத்தில் மிகக்குறைந்த பிந்துக்கள் உள்ள ராசி எது என்று பாருங்கள். ஒவ்வொரு நாளும் வாழ்க்கை பூராவும், அந்த ராசி லக்னமாக வரும்போது, அந்த லக்ன காலம் வரை ஜாதகன் தினமும் ஏதாவது கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பான். அதே போல் சூரியன் இந்த ராசியைக் கடந்து செல்லும் ஒரு மாத காலமும் இவனுக்கு மனக்கவலை தரும். இந்த மாதத்தில், இந்த லக்னம் உதிக்கும் நேரத்தில் மாரக தசை முதலியனவும் ஒத்துப் போனால் மாரகமும் நடக்கலாம்.

## அஷ்டவர்க்கம்: பொது விஷயங்கள்

1. சர்வாஷ்ட வர்க்கத்தில் 28 பிந்துக்களுக்கு மேல் வரும் ராசிகள் என்ன என்ன என்று பாருங்கள். இவை ஜென்ம ராசிக்கு 6, 8, 12 ஆக இருந்தாலும் இந்த ராசியைக் கடக்கும் கோள்கள் அசுப பலனுக்குப் பதிலாக சுபபலனே தரும்.

2. சூரியன் அஷ்ட வர்க்கத்தில் எந்த ராசியில் அதிக பிந்துக்கள் உள்ளனவோ (4 பிந்துகளுக்கு மேல் உள்ள ராசிகள்) அந்த ராசிகள் குறிப்பிடும் தமிழ் மாதங்கள் ஒவ்வொன்றும், ஜாதகருக்கு நல்ல பலன் தரும். அந்த மாதங்களில் தொடங்கிய காரியங்கள் எல்லாம் வெற்றி பெறும்.

3. சூரியன் அஷ்டவர்க்கத்தில் சூரியன் இருக்கும் ராசி முதலாக நான்கு நான்கு ராசிகளாகக் கணக்கிட்டு வரும் 3

பகுதிகளில் எந்தெந்தத் தொகுதியில் அதிகப்படி பிந்துக்கள் உள்ளன என்று பார்த்து வைக்கவும், இப்பொழுது ஒரு நாளின் பகற் பொழுதை மூன்றாகப் பங்கிடவும். மேலே சொன்ன தொகுதியில் எதில் அதிக பிந்துக்கள் வந்தனவோ தினத்தின் அந்தப் பகுதியில் செய்யும் காரியம் யாவும் வெற்றி பெறும். அந்தக் காலம் ஒவ்வொரு நாளும் நிம்மதியும் சுகமும் தருவதாக அமையும்.

4. சூரியன் அஷ்ட வர்க்கத்தில் குறைவாகப் பிந்துக்கள் உள்ள ராசி வழியாக சனி சஞ்சாரம் செய்யும் போது பிதாவுக்கு அரிஷ்டம். இதே போன்று ஒவ்வொரு காரகன் விஷயத்திலும் சொல்ல வேண்டும்.

5. சந்திரன் அஷ்டவர்க்கத்தில் அதிகப்படி பிந்துக்கள் உள்ள ராசியில் சந்திரன் வரும்போது சுப பலனே நடக்கும். அந்தச் சமயம் செய்யும் காரியம் வெற்றி பெறும். அந்த ராசியில் பிறந்த பெண் சிறந்த மனைவியாக அமைவாள். இதே போன்று பணியாள், குரு போன்றவர்களைப் பற்றியும் சொல்லலாம்.

6. ஜாதக சந்திர அஷ்ட வர்க்கத்தில்6 பிந்துகளுக்குக் குறையாமல் வரும் ராசிகள் எவை எவை என்று பாருங்கள். இந்த ராசிக்காரர் முகத்தில் காலையில் விழித்தால் அன்று பூராவும் வெற்றிதான். இந்த ராசிக்காரர் ஜாதகருக்கு மிகவும் நன்மை செய்பவராகவும் இயைந்து போகிறவராகவும் இருப்பார். சந்திரன் அஷ்டவர்க்கத்தில் பிந்துக்கள் இல்லாத ராசிகளில் சந்திரன் வரும் போதெல்லாம் துக்கம், நோய், வருத்தம் முதலியவை ஏற்படும்.

7. செவ்வாய் அஷ்ட வர்க்கத்தில் அதிக பிந்துக்கள் உள்ள ராசியில் கோசாரச் செவ்வாய் வரும்போது வீடு, நிலம், சொத்து வாங்க விற்க லாபம் ஆகும்.

8. புதன் அஷ்ட வர்க்கத்தில் அதிக பிந்துக்கள் உள்ள ராசியில் குரு வரும்போது புத்திரப்ராப்தி ஏற்படும். இந்த

காலக் கட்டத்தில் மந்திர உபாசனை மேற் கொண்டால் மிகவும் நன்மை தரும்.

9, குரு அஷ்ட வர்க்கத்தில், அதிக பிந்துக்கள் உள்ள ராசியில் குரு வரும்போது புத்ரப்ராப்தி ஏற்படும். இந்த காலக் கட்டத்தில் மந்திர உபாசனை மேற்கொண்டால் மிகவும் நன்மை தரும்.

10. சுக்கிரன் அஷ்ட வர்க்கத்தில் அதிக பிந்துக்கள் உள்ள ராசியில் சுக்கிரன் வரும்போதெல்லாம், ஸ்திரீ போகம், சுக போகப் பொருள், ஆடை ஆபரணாதிகளின் லாபம், சுகந்த பரிமள வஸ்துக்கள் போன்றவை எல்லாம் கிடைக்கும்.

11. சர்வாஷ்ட வர்க்கத்தில் எல்லாவற்றையும் விடக் குறைவாக பிந்துக்கள் உள்ள ராசியில் சனி வரும் போது, நோய் கண்டம் போன்றவை ஏற்படலாம். அதே போல் அதிக பிந்துக்கள் உள்ள ராசியில் குரு முதலிய சுபக் கோள்கள் செல்லும்போது அவ்வக் கோள்கள் குறிக்கும் நன்மைகள் உண்டாகின்றன.

12. சர்வாஷ்ட வர்க்கத்தில் 25-க்குக் குறைவாக பிந்துக்கள் உள்ள ராசிகள் குறிக்கும் லக்னம், மாதம், அதில் சந்திரன் தங்கும் நாள்கள் எல்லாம் தீமையே தரும். எனவே, இது குறிக்கும் கால கட்டங்களில் புதுக் காரியங் களை ஆரம்பிக்கக் கூடாது.

சர்வாஷ்ட வர்க்கத்தில் லக்னம் முதல் சனி வரை உள்ள ராசிகளின் பிந்துக்களைக் கூட்டி, 7 ஆல் பெருக்கி, 27ஆல் வகுக்க வரும் ஈவு குறிக்கும் வயதில் ரோகம், சோகம் முதலியவை ஏற்படும்.

இதே போன்று சனி முதல் லக்னம் வரையுள்ள மொத்தப் பிந்துக்களையும் கூட்டி 7-ஆல் பெருக்கி 27-ஆல்

வகுக்க வரும் ஈவு குறித்த வயதில், அதே போல் ரோகம், சோகம் போன்றவை உண்டாகும்.

அத்தியாயம் — 28

## லக்னம் பத்தாம் இடத்தைக் கொண்டு கோசார பலன்கள்

சந்திரனைக் கொண்டுதான் கோசார பலன்கள் சிறப்பாகப் பாதிப்பை ஏற்படுத்துவதால், அதுவே பெரிதும் பார்க்கப்படுகிறது. ஆனால், லக்னம் வாழ்க்கையின் ஆரம்பத்தைக் குறிப்பதாலும், 10-ஆம் இடம் வாழ்க்கையின் நடு உச்சியைக் குறிப்பதாலும், இந்த இரண்டு நிலைகளையும் கோசாரத்தில் கோள்கள் கடப்பதை மேனாட்டு ஆசிரியர்கள் சிறப்பாகக் கூறியுள்ளனர். அதன் விவரம் வருமாறு:

1. சூரியன் லக்னத்தைக் கடந்தால் புதுப் பொறுப்பு: தெம்பு, சக்தி ஏற்படுகிறது. வாழ்க்கையின் ஒரு நம்பிக்கை நக்ஷத்திரம் உதயமாகும். சத்துரு ஜயம் உண்டாகும். ஒரு புது வருஷம் ஆரம்பமாகிறது. கருத்து வேற்றுமையை வளர்த்துக் கொள்ளக் கூடாது. ஆரோக்யத்தைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்

2. சந்திரன் லக்னத்தில் சஞ்சரிக்கும் பொழுது உணர்ச்சி வசப்படுவான்; சந்திரனின் வலிமைக்கேற்பப் புது உறவுகள் நல்லதாகவோ தீமையாகவோ அமையும். எதிர்ப்பாலினருடன் இயைந்த அன்பான நட்பும் ஏற்படும்

3. செவ்வாய் லக்னத்தில் சஞ்சாரம் செய்யும் போதுஎல்லாம், குழப்பமும், கருத்து வேற்றுமையால் பாதிப்பும் ஏற்படும். தந்திரத்தைக் கையாண்டு கெட்டிக்காரத்தன

மாக சிக்கல்களிலிருந்து தப்பித்துக் கொள்ள முயல வேண்டும். எந்த வேலையையும் இப்பொழுது சாதித்துக் கொள்ள முடியும். உணவுப் பழக்கத்தை கவனிக்கவும். அதிக உழைப்பு வேண்டாம். பூசல், கருத்து வேற்றுமை களைத் தவிர்க்க வேண்டும்.

4. லக்னத்தைப் புதன் கடக்கும் போது எதையும் பேசி முடித்துச் சாதிக்கலாம். வியாபாரம், எழுத்து மூலம் வெற்றி, பயணம், மானசீக உழைப்பால் ஏற்படும். பணிகள் எல்லாம் பயனளிக்கும்.

5. குரு லக்னத்தைக் கடக்கும் போது, மிகவும் சாதக மான காலம். உத்தியோகம், தொழில் ஓங்கும். உடல் நலம் பெருகும். சமூகம் மற்றும் நண்பர் நடுவில் அதிக பயன் ஏற்படும். முக்கியஸ்தர்கள் உறவால் வாழ்க்கை முன்னேறும். வீட்டில் குடும்ப நிம்மதியும் அமைதியும் பெருகும். வியாபார இலாபப் பயணங்களும் ஏற்படும்.

6. சுக்கிரன் லக்னத்தைக் கடக்கும் பொழுது சொந்த உறவுகள் பெருகும். அன்பும் பாசமும் பெருகும். இது வரை எல்லாருடனும் இருந்து வந்த கருத்து வேற்று மைகள் மறையும். புதுக் காதல் அல்லது நட்பு ஏற்பட்டு, அதனால் நன்மையும் ஏற்படும். ஹோட்டல், விருந்துகள், விழாக்கள் இவற்றால் உல்லாசமும், மகிழ்ச்சியும் பெருகும். இந்தச் சமயம் நல்ல தனவிருத்தியும் ஏற்படும். பொருளாதாரமும் ஓங்கும்.

7. சனி லக்னத்தைக் கடக்கும் போது அது வாழ்க்கையின் ஒரு முக்கிய திருப்பமாகும். பொறுப்புகள் அதிகமாகி, அதிகம் உழைக்க வேண்டியது வரும். பழைய தீராத, முடியாத வேலைகள் இப்பொழுது நிறைவு பெறும். மேலதிகாரிகள் உங்கள் வேலைப் பளுவை அதிகமாக்குவர். புது முயற்சி திட்டம் எதுவும் வேண்டாம். பழைய பணியை, திட்டத்தை முடியுங்கள்.

ராகு சனியைப் போலவும், கேது செவ்வாய் போலவும் இந்த வகையில் பலனளிப்பார்கள்.

## 10-ம் இடத்தைக் கோள்கள் கடக்கும் கோசார பலன்

1. சூரியன் உங்கள் ஜாதகப்படியுள்ள 10-ஆம் இடத்தைக் கடந்தால், உங்களை அதிகம் வலுவாளியாகவும் திறமைசாலியாகவும் ஆக்குகிறது. குறிக்கோள்களை இச் சமயம் நிறைவேற்றிக் கொள்ளும் வாய்ப்புள்ளது. மேலதிகாரிகள் உங்களுக்குச் சாதகமாக இருப்பார்கள். புகழ், பதவி, அந்தஸ்துகள் உயரும். தன வரத்தும் ஏற்படும்.

2. சந்திரன் உங்கள் 10 ஆம் வீட்டைக் கடக்கும் போது ஒரு குழுவுக்குத் தலைமை தாங்கி, அதனால் பயனுண்டு. புகழுண்டு சொந்தச் சிக்கல்கள் தீரும். அவசரப்படாமல் நிதானமாக இருந்தால் எல்லாவற்றையும் சமாளித்துக் கொள்ளலாம்.

3. உங்கள் 10 ஆம் இடத்தை செவ்வாய் கடக்கும் போது எதிலும் தயங்காமல் முன்னின்று செயல்படுங்கள். லாபமும் வெற்றியும் உண்டாகும். திட்டமிட்டு உணர்ச்சி வசப்படாமல், திடீரென்று எதையும் செய்யாமல் நிதானமாகச் செயல்படுங்கள். வெற்றியுண்டாகும். இரும்பு சம்பந்தமான வேலைகள் வியாபாரங்கள் துணிச்சலான செயல்கள் இவற்றால் நன்மை உண்டு.

4. உங்கள் 10ஆம் இடத்தை புதன் கடந்தால் பிறருடன் பேச்சு வார்த்தைகளில் வெற்றி ஏற்படும். தொழில் உத்தியோகம் சம்பந்தமான கடிதம் ஏதாவது வரலாம். அதனால் லாபம் உண்டு உங்கள் அந்தரங்க விஷயங்கள் பாதிக்கப்படும்.

5. குரு உங்கள் 10ஆம் இடத்தைக் கடக்கும்போது உங்கள் முயற்சி, நம்பிக்கை, காரியம் எல்லாம் செயலாகும்.

வியாபாரம், தொழில் ஆகியன மேலும் பெரிய அளவில் விரிவு பெறும். உத்தியோகம் உயரும். உங்கள் திறமையும் போற்றப்படும். மேலதிகாரிகள் மூலம் ஆதாயம் ஏற்படும். தொழிலில் சாதனை ஏற்படும். எல்லாக் காரியங்களும் துரிதமாக நடக்கும்.

6. உங்கள் 10ஆம் இடத்தை சுக்கிரன் கடக்கும்போது காதல், போகம், திருமணம் இவற்றில் உங்கள் கவனம் திரும்பும் ஒரு புதுக் காதலி அல்லது காதலர் உங்கள் வாழ்க்கையில் இப்பொழுது நுழையலாம். உத்தியோகம் முன்னேறும். புதிய தொடர்பு, கலைத்துறை முன்னேற்றம் பொழுதுபோக்கு, உல்லாசப் பயணம் போன்றவை ஏற்படும். நல்ல துணை கிடைக்கும். கல்யாணம் நிச்சய மாகும். காதல் சரச வாழ்க்கை ஆகியவை ஏற்படும். இது சந்தேகமின்றி மிக நல்ல காலமாகும்.

7. உங்கள் 10ஆம் இடத்தைச் சனி கடக்கும்போது முக்கியமான புதுப் பொறுப்புகளும் கடமைகளும் ஏற்படும். குறிக்கோள்கள், முயற்சிகள் வெற்றி பெறும். உங்கள் ஆரோக்கியத்தைக் கவனியுங்கள். குறுக்கு வழிகள் தோல்வியில் முடியும். சூழ்நிலைக் கேற்ப உங்களை மாற்றிக் கொள்ளுங்கள்.

அத்தியாயம் — 29

# ஜாதகக் கோள்களைக் கோசாரக் கோள்கள் கடக்கும் பலன்

## சூரியன்

1. உங்கள் ஜாதகச் சூரியனைக் கோசாரச் சூரியன் கடக்கும்போது. இதுதான் உங்களுக்கு வாழ்க்கையில் ஒரு புது வருஷம் ஆரம்பமாவதைக் குறிக்கும். புது முயற்சிகள்

வெற்றி பெறும். புதுத் தொழில்கள் முதலியவை ஆரம்ப மாகும். புதிய தெம்பையும் சக்தியையும் சூரியன் இதுசமயம் கொடுப்பான்.

2. உங்கள் ஜாதகச் சந்திரனை கோசாரச் சூரியன் கடக்கும்போது, இது மிகவும் வலிவான சேர்க்கையாகும். வாழ்க்கையில் ஒரு முழு மாற்றம் ஏற்படும். இப் போதுள்ளதைவிட உயர்நிலை ஏற்படும். பெண்களுடன் புதுத் தொடர்புகள் ஏற்பட்டு நன்மையில் முடியும். பெண்கள் விஷயத்தில் இது நன்மை தராது.

3. உங்கள் ஜாதகச் செவ்வாயைக் கோசாரச் சூரியன் கடக்கும்போது, மிகவும் நெருக்கடியான ஒரு காலமாகும். தன் நம்பிக்கை அதிகம் தோல்வியில் முடியும். திறமை வலிமை உண்டு, துணிச்சலுண்டு. அதிகச் செலவு ஏற்படும். புதுத் திட்டம் ஆரம்பிக்க உகந்த நேரம். மனத்தில் அடங்காத போராட்டமும் கொதிப்பும் ஏற்படும். செவ்வாய் சம்பந்தமான நோய்கள் ஏற்படலாம். தீவிபத்து ரண காயங்கள் போன்றவை ஏற்படலாம்.

4. உங்கள் ஜாதகப் புதனை கோசார சூரியன் கடக்கும்போது பயணம் மூலமும், எழுத்துத் தொழில் மூலமும் பயன் உண்டு. புது வியாபாரம் கடிதப் போக்கு வரத்து ஆகியவை நன்மை தரும். சாமர்த்தியமாகப் பிறருடன் பழகி வெற்றி பெறுவீர்கள். எதிர் காலத்தைப் பற்றிய திட்டம் வகுக்க உகந்த நேரம் இது. வக்கீல்கள், இலக்கியப் பணியாளர்கள் இக்காலத்தில் அதிக வெற்றி பெறுவார்கள்.

5. உங்கள் ஜாதகக் குருவைக் கோச்சார சூரியன் கடக்கும்போது, வெற்றி அதிர்ஷ்டம், பலவித இலாபம் சமூகத்தில் கௌரவம், காரிய அனுகூலம் ஆகியவை ஏற்படும். வாழ்க்கையில் சீரான முன்னேற்றம் ஏற்படும். பிறர் உதவியும், பயனுள்ள புதுத் தொடர்புகளும்

ஏற்படும். உத்யோக உயர்வும் உண்டாகும், மிக நல்ல காலம் இது.

6. உங்கள் ஜாதக சுக்கிரனை கோசார சூரியன் கடக்கும்போது, பெரும்பாலும் திருமணம் நடக்கும். பிறர் உதவி கிட்டும். ஆசைகள் பூர்த்தியாகும். புது உறவுகள் ஏற்படுத்திக் கொள்ள நல்ல காலம். பணம் பதவி முதலியவை வந்து சேரும். இளம் பெண் தொடர்பும் காதல் வாழ்வும் ஆரம்பமாகும். அவளால் உண்மையான ஆதாயமும் ஏற்படலாம். வீண் செலவுகளை விலக்கி உலக இன்பத்தில் அதிகமாக ஈடுபடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

7. உங்கள் ஜாதகச் சனியைக் கோசாரச் சூரியன் கடக்கும்போது, இது சாதகமற்ற, மிக நெருக்கடியான காலமாகும். எல்லாம் முரணாகும். சந்தேகம மிரட்டல் ஆகியவை உங்கள் மேல் நிர்ப்பந்தமாகச் சுமத்தப்படும். புதுப் பொறுப்புகள் சுமையாக வரும். நிதானம் தேவை. உடல் நலம் கெடும். வாதம் பக்கவாதம் போன்ற நோய்கள் உண்டாகும். எதிலும் திருப்தி இராது. அரசாங்கத்தால் கெடுபிடியும் அதுகுறித்து அச்சமும் உண்டாகும்.

8. உங்கள் ஜாதக ராகுவைக் கோசார சூரியன் கடக்கும்போது நல்ல அதிர்ஷ்டமான காலம். அமைதியும் மகிழ்ச்சியும் ஏற்படும். போட்டிப் பந்தயங்களில் வெற்றி உண்டாகும். மகிழ்ச்சியான திருமண வாழ்க்கை தொடங்கும். சமூகத்தில் அந்தஸ்து கௌரவம் உயரும். இப்பொழுது கேது 7இல் வருமானதால் மனைவியின் பிரிவோ அல்லது அவளுக்கு மாரகமோ கூட ஏற்படலாம்.

9. உங்கள் ஜாதக கேதுவைச் சூரியன் கோசாரத்தில் சேரும்போது அந்தக் காலம் நல்லதல்ல. வீடு, குழந்தை களைப் பார்த்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு உங்கள் மேல் விழுந்து விடும். (மனைவி உடல்நலம் கெடல் முதலிய

வற்றால்) இதுவே கவலையாக மாறி விடும். அரசு அதிகாரிகளைப் பகைத்துக் கொள்ளாதீர்கள். சுகமற்ற கட்டாய சூழ்நிலையில் நீங்கள் தள்ளப்படலாம்.

## 2. சந்திரன்

1. உங்கள் ஜாதக சூரியனைச் சந்திரன் கோசாரத்தில் சேரும்போது சமூக நிலையில் உங்களுக்கு ஏற்றம் மாற்றம் ஏதாவது ஏற்படும். குறிக்கோள்கள் ஈடேறும். ஆனால் உடல் நலம் பாதிக்கும். காய்ச்சல் போன்ற நோய்கள் காணும். வீடு அல்லது சூழ்நிலைகளை மாற்ற வேண்டியது வரும். புதுப் பொறுப்புகள் ஏற்படும்.

2) உங்கள் ஜாதகச் சந்திரனைக் கோசார சந்திரன் கூடும்போது காலம் மிக நல்லதாகும். சந்திரன் ஜாதகத்தில் உள்ள பாவத்தைப் பற்றிய காரக விஷயங்கள் இப்பொழுது முட்டின்றி முடியும். வீடு அல்லது தொழில் மாறும். புதுத் தொடர்பால் லாபம் உண்டு. ஆனால். இது 2¼ நாள் உள்ள குறுகிய காலம் ஆனதால், அவ்வளவு பெரிதல்ல.

3) உங்கள் ஜாதகச் செவ்வாயைக் கோசார சந்திரன் கூடும் போது, நல்லது கெட்டது இரண்டும் நடக்கும், கோபம் ஏற்படும்; சமாளியுங்கள். வாகன, தீ விபத்துகள் ஏற்படலாம். காய்ச்சல், தொற்று நோய்கள் பற்றிக் கொள்ளும். எதிர்ப் பாலினருடன் பகையைத் தவிருங்கள். சொந்தக் காரியங்கள் மிகவும் பாதிக்கப்படும்.

4) உங்கள் ஜாதக புதனைக் கோசார சந்திரன் கூடும் போது, சாதகமான காலமாகும். அறிவுத் திறனால் ஆகக் கூடிய கணிதம். ஜோதிடம், எழுத்துத் தொழில் ஆகியவை வெற்றி பெறும், எதிர்ப்பாலினர் உறவு இப்பொழுது அதிக நன்மை தரும். வாக்கு வன்மை அதிகமாகும். அதனால் பயனுண்டு. பெண்கள் மிகவும் விரும்புவார்கள்.

5) உங்கள் ஜாதகக் குருவைச் சந்திரன் கோசாரத்தில் கூடும்போது நிலைமைமுன்னேறும், நிதிவசதிகள் பெருகும். அந்தஸ்துகள் உயரும். முன்னேற்ற வாய்ப்புகள் தேடி வரும். புதுத் திட்டங்கள் தொடங்க உகந்த காலம் இது. சுகம் உல்லாசம் பெருகும். அதிக உழைப்பும் அதற்கேற்ற ஆதாயமும் பெருகும். பெண்களுடன் தொடர்பு நன்மையில் முடியும். பொது மக்கள் அதிக ஜனங்கள் சம்பந்தப்பட்ட காரியங்கள் வெற்றி தரும். எல்லா உறவினராலும் [கணவன் அல்லது மனைவி உறவினர்களால் மட்டும் நீங்கலாக] லாபம் உண்டு.

6) உங்கள் ஜாதக சுக்கிரனைக் கோசார சந்திரன் கூடும்போது, இந்த இரண்டு அழகுக் கோள்களின் கூட்டம். வாழ்க்கையின் சுகானுபவம், சிற்றின்பம், சுகம், மற்றும் கோலாகலம் எல்லாம் பொங்கி வழியும். புதுத் தொடர்புகள் ஏற்படும் பெண்கள், இக்காலத்தில் மேலும் பளிச்சிடுவர். கவர்ச்சித் தோற்றம் அதிகமாகும். திருமணம் நிச்சயமாகும். எல்லாம் நல்லதாக முடியும். உடல் நலமும் செம்மையாகும்.

7) உங்கள் ஜாதக சனியை கோசார சந்திரன் கூடும் போது. அவ்வளவு நல்ல பலன் தராது. நிர்ப்பந்தம், கட்டுப்பாடு. கவலை, சொல்லத் தெரியாத வருத்தம் எல்லாம் இருக்கும். புது முயற்சிகள் எதுவும் கைகூடாது. பெரியோர் உங்கள்மேல் இரக்கம் காட்டமாட்டார்கள். குடும்ப வாழ்க்கையில் நிம்மதி இராது. எதையுடன் விழிப்புடன் கையாள வேண்டும். மனைவி எதிர்ப்பாலினர் உறவில் சுகம் இராது. வாகனசுகம் ஆரோக்யம் எல்லாம் உண்டு.

8) உங்கள் ஜாதக ராகுவை கோசார சந்திரன் கூடும் போது உங்கள் தோற்றம் பொது மக்கள் நினைவில் நிற்கும். உங்கள் வாழ்வில் பெண்கள் இப்பொழுது முக்கிய பொறுப்பினை ஏற்பர்.

9) உங்கள் ஜாதக கேதுவைக் கோசார சந்திரன் கூடும் போது மனஉளைச்சல் ஏற்படும். உணர்ச்சிவசநிலை அமைதியைக் கெடுக்கும். பொது ஜனத் தொடர்பைத் தவிர்க்கவும். பெற்றோருடன் கருத்து வேற்றுமை உண்டாகும்.

## 3. செவ்வாய்

1. உங்கள் ஜாதகச் சூரியனுடன் கோசார செவ்வாய் கூடும் போது சுரம், தீக்காயம், உஷ்ண சம்பந்தமான நோய் ஏற்படும். செவ்வாய் அஸ்தங்கதனாகாமல் இருந்தால், மரியாதையும் அந்தஸ்தும் உயரும். அதே சமயத்தில் அமைதியின்மையும் பூசலும் கூடவே உண்டாகும்.

2. உங்கள் ஜாதக சந்திரனுடன் கோசாரச் செவ்வாய் கூடும்போது தாயுடன் பகை ஏற்படும். இதுசமயம் பொய் ஏமாற்றல், இவற்றில் ஈடுபடுவார். ஆயுதங்கள் வியாபாரத் தில் ஈடுபாடு நன்மை தரும். பெண்களுடன் ஏற்படும் விவகாரத்தில் சாதகம் ஏற்படும்.

3. உங்கள் ஜாதக செவ்வாயைச் கோசாரச் செவ்வாய் கூடும்போது, உடல் அளவுக்கு மீறி திடம் பெறும். அதற் கேற்ப அதிகஉழைப்புள்ள வேலைகளிலும்ஈடுபட்டு எளிதாக முடித்து வைக்கலாம். விளையாட்டு முதலியவற்றில் புகழ், முன்னேற்றம் ஏற்படும். எதையும் எதிர்ப்புடன் செய்ய வேண்டாம். புதிய திட்டங்கள் இருக்கும், கூடவே எதிர்ப்பும் இருக்கும்.

4. உங்கள் ஜாதக புதனை கோசார செவ்வாய் கூடும் போது, மனம் பலவீனமாகும். சில்லறை விஷயங்களில் மனநிறைவு ஏற்பட்டுவிடும். பிறர் வீட்டு உணவில் ஆசை ஏற்படும். இது கேந்திரமாக அமைந்திருந்தால் மணம் நேரும். மகிழ்ச்சி ஏற்படும். குத்துச்சண்டை போன்றவற்றில் வெற்றி ஏற்படும். மருந்து இரசாயனப் பொருள்கள் மூலம் நன்மையும் லாபமும் உண்டு. பெண்கள் மூலம் கெட்ட

பெயர் உண்டாகும். கஷ்டம் ஏற்படும். பிறருடன் கருத்து வேற்றுமை எளிதில் ஏற்பட்டு விடும். நிதானம் மிகத் தேவை.

5. உங்கள் ஜாதக குருவை கோசாரச் செவ்வாய்கூடும் போது, நடத்தை மேம்படும். பகை வெல்லும். தலைமை ஏற்படும். பணம் பல வழியிலும் வரும். தந்திர, ஜோஸ்ய சாஸ்திரப் பயிற்சிகள் ஏற்படும். கஷ்டமான நெருக்கடியில் எங்கிருந்தாவது எதிர்பாராத (தெய்விக) உதவிகள் ஏற்படும். அதிக உடல் உழைப்பு மூலம் இலாபம் பெருகும். பொருளாதாரத் திட்டங்கள் வெற்றி தரும். உடல் நலம் ஓங்கும். எல்லாம் நன்மையே எனலாம்.

6. உங்கள் ஜாதக சுக்கிரனைச் செவ்வாய் சேரும் போது அவசர உணர்ச்சி, மிதமிஞ்சிய பாலுணர்வு, அதைத் தீர்த்துக் கொள்ளும் ஆவேசம் ஆகியவைஏற்படும். சுக்கிரன் பாப சம்பந்தம் பெற்றிருந்தால் தம்பதியரிடையே பிரிவும் ஏற்படும். பெண்கள் உறவு சில சமயம் அபவாதம், பழி, கெட்ட பெயர் ஆகிய இவற்றையும் ஏற்படுத்தும்.

7. உங்கள் ஜாதக சனியைக் கோசாரச் செவ்வாய் கூடும் போது, உறுதியான முடிவுகளை எடுக்க வேண்டியது வரும். அதன் படியே நடக்க வேண்டும். உடன் பிறந்தா ருடன் கருத்து வேறுபாடுகள் உண்டாகும். பகைவர்கள் முளைப்பார்கள். போராட்டமான வாழ்க்கை தொடரும். வாத பித்த நோய்கள் மேலிடும். குடும்பத்தில் யாரேனும் இயற்கை எய்தக் கூடும். திருட்டு, கொள்ளை, களவால் பணம் நகைகள் போகும். எவருக்கும் ஜாமீன்நிற்கக்கூடாது. பொறுமை இராது. எவரும் ஒத்துழைக்க மாட்டார்கள். இது காலம் அதிக உழைப்பும் விழிப்புணர்ச்சியும் பொறுமை யும் தேவைப்படும்.

8. உங்கள் ஜாதக ராகுவை கோசாரச் செவ்வாய் கூடும் போது, உடல் சம்பந்தமான பணிகளில் ஈடுபாடு

விளையாட்டுகளில் ஆர்வம் மிகுதியாகும். அளவுக்கு மீறிய பாலுணர்வு ஏற்படும். உடன் பிறந்தவர்களிடமிருந்து நல்ல உதவிகள் கிடைத்து அதனால் வாழ்க்கை முன்னேறும்.

9. உங்கள் ஜாதக கேதுவை கோசாரச் செவ்வாய் இணையும் போது, பதவிக்கும், அதிகார வெறிக்கும் ஆசை அதிகமாகும். ஆனால், அதைச் சாதித்துக் கொள்ளும் அளவுக்குப் பொது மக்கள் அல்லது உரியவர்களின் ஆதரவு இராது. வியாபாரத்தில் தேவையில்லாத பிரச்சினைகள் தோன்றும். தொழிலில் பெயர் கெடும். அரசியல் வட்டாரங் களில் ஆதரவை இழக்க நேரிடும். எதிலும் தன்னடக்கமாக இருக்க வேண்டும்.

## 4. புதன்

1. உங்கள் ஜாதகச் சூரியனைக் கோசார புதன் கூடும் போது, மனத் தெளிவும், ஆக்கபூர்வமான யோசனைகளும், திட்டங்களும் தோன்றும். எழுத்து, கடிதப் போக்குவரத்து இவற்றின் மூலம் நன்மை கிடைக்கும். தொழில் விருத்தி யாகும். அதனால் ஆதாயமும் கிடைக்கும்.

2. உங்கள் ஜாதகச் சந்திரனைக் கோசார புதன் கூடும் போது, மன உணர்ச்சிகள் ஒரு நிலையாக இரா. பிறருடன் பழகுவதில் நிதானம் தேவை. கடிதப் போக்கு வரத்துகள் வெற்றியில் முடியும். குடும்பக் கவலைகள் பெரிதாக இருக்கும். பெண்களால் நன்மை உண்டாகும்.

3. உங்கள் ஜாதகச் செவ்வாயை கோசார புதன் கூடும் போது அவசர புத்தி துணிச்சல் அதிகமாக இருக்கும். பட்டி மன்றம், பேச்சுப் போட்டிகள் முதலிய வற்றில் வெற்றியுண்டு. ஆனால் வீண் வாக்குவாதத்தால் பகையை வளர்த்துக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ளவும்.

4. உங்கள் ஜாதகப் புதனை கோசார புதன் கூடும் போது அறிவு, எழுத்துத் துறை, கணித சோதிடத்துறை இவற்றில் வெற்றி முன்னேற்றம் ஆகியவை உண்டு. புது ஆய்வு, இலக்கியப் படைப்புகளுக்குப் பரிசு கிடைக்கும். பத்திரிகை, புத்தகம், ஆடிட்டர் தொழில்களில் பெருத்த முன்னேற்றம் உண்டு.

5. உங்கள் ஜாதக குருவை கோசார புதன் கூடும் போது வியாபாரம், பங்கு மார்க்கட், புதிய முதலீடுகள். அறிவுத்துறைத்தொழில்கள் (வக்கீல், ஆசிரியர், எழுத்தாளர்) முன்னேறும், வாதத் திறமையால் லாபம் உண்டு. பிறருடன் மோதலில் வெற்றியும் உண்டு. எல்லா முயற்சியும் கை கூடும். அந்தஸ்தும் மதிப்பும் உயரும். சுகபோகப் பொருள்கள் எல்லாம் கிடைக்கும். பழம்பகை நீங்கி ஒற்றுமையாவதால் லாபம் உண்டாகும்.

6. உங்கள் ஜாதக சுக்கிரனைக் கோசார புதன் கூடும்போது கலை, இசை, நாட்டியம், நாடகம், ஒப்பனைக் கலை முதலியவற்றில் திறமையும் லாபமும் ஓங்கும். இலக்கியத் துறையில் சிலருக்கு முன்னேற்றம் உண்டாகும். விருப்பமான பெண்ணுடன் இனிய காதல் மலரும், தனம் அந்தஸ்து, அதிகாரம் பூர்ண, போகம் எல்லாம் கிடைக்கும்.

7. உங்கள் ஜாதக சனியைக் கோசார புதன் கூடும் போது மிகவும் வேண்டியவரைப் பிரிய வேண்டியது வரும். கண் மூடித்தனமாக எதையும் செய்யக் கூடாது. குறுகிய மனப்பான்மை உங்களைக் குழியில் தள்ளிவிடும். பேச்சைக் கட்டுப் படுத்திக் கொள்ளுங்கள். கருத்து வேற்றுமையைத் தவிர்க்கவும்.

8. உங்கள் ஜாதக ராகுவைப் புதன் கூடும்போது உங்கள் மனோசக்தி (Psychic Power) அதிகமாகும். மனத்தில் புதுத் தெம்பும் உற்சாகமும் தோன்றும். உடன்

பிறப்புகளால் உரிய நேரத்தில் உதவிகள் ஏற்படும் அதனால் வாழ்க்கையில் ஒரு புதிய திருப்பமும் ஏற்படும்.

9. உங்கள் ஜாதக கேதுவை புதன் கூடும்போது, (கோசாரத்தில்) சற்று நெருக்கடியான காலம். புது முயற்சிகளில் பிறருடன் பூசல் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எழுத்து வகையில் யாரிடமாவது சிக்க நேரும். (ஜாமீன் கையெழுத்து) எச்சரிக்கை தேவை. நிம்மதியற்ற, பயனற்ற பெரும்பயணங்கள் ஏற்படும்.

## 5. குரு

1. உங்கள் ஜாதக சூரியனைக் கோசார குரு கூடும் போது, நல்ல ஆரோக்யம் உண்டு. இது முதல் ஒரு 12 வருஷகாலம் புது சகாப்தம் வாழ்க்கையில் ஆரம்பமாகிறது. புதுத் திட்டங்கள் உருவாகும். உங்கள் தொழில் மேலும் விரிவு பெறும். பயணங்கள், நூலாராய்ச்சி இவற்றால் நன்மை உண்டு. புதிய தொடர்புகளால் நன்மை உண்டாகும். வாழ்க்கையில் கட்டுப்பாடற்ற ஒரு புத்துணர்ச்சி ஏற்படும். முதலீடுகள் செய்யாதீர்கள். தகப்பனும் மகனும் ஒன்றாய் இருந்தால் மேலும் நன்மை உண்டாகும்.

2. உங்கள் ஜாதகச் சந்திரனைக் கோசார குரு கூடும் போது தலைமைப் பதவி, சத்துரு ஜெயம், தர்ம சிந்தனை, ஆன்மிக உணர்வு இவை ஏற்படும். மிகவும் பணிவுடன் கடமையாற்றுகின்ற மனைவியும் அமைவாள். உடன் பிறப்புகள் சுமுகமாகும். கண் பார்வை பாதிப்பாகும். மன அமைதியும். எதிர்பாராத (தெய்வீக ) உதவிகளும் உண்டாகும் 3,6.8 பாவங்கள் இல்லாதஇடங்களில் இந்தச் சேர்க்கை மிக நன்மைதரும். பெண்கள் மூலம் மகிழ்ச்சியும் நன்மையும் ஏற்படும்.

3. உங்கள் ஜாதக செவ்வாயை கோசார குரு கூடும் போது தைரியம், பணத்துணிச்சல், உயர் பதிப்பு எல்லாம்

உண்டாகும். அதிர்ஷ்டமான திருப்பமும் ஏற்படும். மகன் நல்ல குணமுள்ளவனாயினும் அவனுடன் சண்டை உண்டாகும். அதிக உழைப்பும் அதனால் பயனடையும் வாய்ப்பும் ஏற்படும். விபத்துகள் ஏதாவது ஏற்படலாம். எச்சரிக்கை தேவை. புது வேலைகளைத் தொடங்க நல்ல சமயம்.

4. உங்கள் ஜாதக புதனைக் கோசார குரு கூடும் போது பலமுனையிலும் லாபம் ஏற்படும். எல்லாரையும் எளிதில் கவர்ந்து வரலாம். பகை எல்லாம் ஒழியும். அறிவுத் திறனாலும் நடன, இசைகளாலும் லாபம் ஏற்படும். தன்னம்பிக்கையும் ஓங்கும். வாசனாதி திரவிய லாபமும் ஏற்படும். வழக்குகள் வெல்லும். எல்லா வகையிலும் நன்மையான காலமே.

5. உங்கள் ஜாதக குருவைக் கோசார குரு கூடும் போது மற்றொரு 12 வருஷகால புது சகாப்த கால ஆரம்ப மாகும். திடீர் அதிர்ஷ்டங்கள், அதிர்ஷ்டமான திருப்பங்கள் இவை ஏற்படும். தனவரவு அதிகமாகும். முக்கிய பெரும் புள்ளிகள் நட்பால் மேன்மை ஏற்படும். பிறரிடம் நீங்கள் எதையும் தட்டிக் கேட்டுப் பெறுவீர்கள். கல்வி ஓங்கும். பயணங்கள் பயன் தரும். முதலீடுகள் வியாபார விருத்தி இவற்றுக்கு மிகவும் நல்ல காலம் இது.

6. உங்கள் ஜாதக சுக்கிரனைக் கோசார குரு கூடும் போது எல்லாக் கருத்து வேற்றுமையும் பகையும் நளின மாக மூடப்பட்டு மறையும். புதுக்காதல் தொடர்பும் அதனால் நன்மையும் ஏற்படும். கோபத்தைக் குறையுங்கள். உணவில் கட்டுப்பாடாக இருங்கள். கௌரவம் ஓங்கும். உடல் நலத்தைக் கெடுக்கக்கூடும். நாளுக்கு நாள் உங்கள் புகழ் ஓங்கும்.

7. உங்கள் ஜாதக சனியைக் கோசார குரு கூடும் போது இந்தச் சேர்க்கை 1,2.4,5,7,9,12 ஆகிய வீடுகளில் அமைந்தால் தன நாசம், கௌரவ பங்கம் போன்றவை

ஏற்படும். ஆனால் இந்தக் கூட்டு, மற்ற வீடுகளில் ஏற் பட்டால், அந்தஸ்து ஓங்கும். அரசால் கௌரவம் உண்டாகும். எல்லாவகையிலும் அதிர்ஷ்டமான திருப்பம் ஏற்படும். அதிகாரம் செய்யும் குணம் ஓங்கும். வேலை மாற்றம் அல்லது வீடு மாற்றம் ஏற்படும்.

8. உங்கள் ஜாதக ராகுவைக் கோசார குரு சேரும் போது சமூகத்தில் அந்தஸ்து உயரும். திறமை போற்றப் படும். தன்னம்பிக்கை ஓங்கும். பிறமதங்களை, கொள்கை களைத் தழுவும் குணம் உண்டாகும். ராகுவுக்குத் திரிகோணத்தில் குரு போகும்போது பெரிய அளவில் அதிர்ஷ்டம் ஏற்பட வழி உண்டு.

9. உங்கள் ஜாதகக் கேதுவை கோசார குரு கூடும் போது பொது வாழ்க்கையில் மதிப்புகுறையும். தன்இஷ்டப் படி நடப்பதால் கஷ்டம் உண்டாகும். எதுவுமே தன் போக்கில் செய்யவும் செய்யவிடவும் மாட்டான். இது நல்லதல்ல.

## 6. சுக்கிரன்

1. உங்கள் ஜாதகச் சூரியனைக் கோசார சுக்கிரன் கூடும் போது, பிறருடன் பாசம் பெருகும். பொழுது போக்கும் உல்லாசமும் மிகும். பெண்களை விட ஆண் களுடன் சேர்ந்து செய்யும் காரியம் எல்லாம் அதிகச் சாதக மாகும். கற்பனைத் திறன் மிகும். இது கலைப் பணியில் பயன்படும்.

2. உங்கள் ஜாதகச் சந்திரனைக் கோசாரச் சுக்கிரன் கூடும்போது சஞ்சல புத்தி மிகும். ஆனால் அதிர்ஷ்டத் திருப்பம் இருக்கும். நல்ல சுபாவம். விட்டுக் கொடுக்கும் கொள்கை இருப்பினும், தன் கொள்கையை விட்டுக் கொடுக்க மாட்டார்கள். அதிகம் பேசுவதைத் தவிர்க் கவும். எதையும் வெகுளித்தனமாக வெளிக் காட்டு வதையும் தவிர்க்கவும். இசைத் திறன் மிகும். உங்கள்

கலை, இசையைப் பிறர் போற்றுவர். பிறருடன் பூசல் ஏற்படும். போக இச்சை அளவுக்கு மீறும். கட்டுப்பாடு வேண்டும். பிடிவாதத்தை விட்டு வளைந்து கொடுத்தால் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பெண்களால் உதவியுண்டு.

3. உங்கள் ஜாதகச் செவ்வாயைக் கோசார சுக்கிரன் கூடும்போது, அவசர புத்தியும் முன்கோபமும் மிகும். இதைக் கட்டுப்படுத்தவும். பெரும்பகுதியும் பெண்களுட னேயே பொழுதைக் கழிக்கும் நிலையும் வரும். இதனால் நன்மையும் ஏறபடும். ஆனால், அதில் மூழ்கி விடாயல், எல்லையை மீறாமல் காத்துக் கொள்ள வேண்டும். உல்லாசப் பயணம் ஏற்படும், அதனால் நன்மையுண்டு. மொத்தத்தில் இது மிக நல்ல அமைப்பாகும். போக இச்சை அதிகமாகும், அளவோடு நிற்க வேண்டும்.

4. உங்கள் ஜாதக புதனைக் கோசார சுக்கிரன் கூடும் போது, மரியாதை, அந்தஸ்து புகழ் ஆகியவை ஓங்கும். பணமும், பவிசும் கூடும். அழகும் பொலிவும் அதிகமாகும்; நகைச்சுவைப் பேச்சால் பிறரைக் கவரும் திறமையும் மிகும். பெண்களுடன் அதிகம் பழகும் வாய்ப்புகள் பெருகும். ஆனால், அதில் அளவுடன் இருக்க வேண்டும். அவர்களால் லாபமும் உண்டு.

5. உங்கள் ஜாதக குருவைக் கோசார சுக்கிரன் கூடும் போது, எல்லா உறவுகளும் பயன் தரும். சமூகத்தில் அந்தஸ்து உயரும். திடீர் என்று எதிர்பாரா வகையில் லாட்டரி மற்றும் போட்டிப் பந்தயங்களில் பெருந் தொகைகள் கிடைக்கும் வாய்ப்புண்டு. புது உறவு, கல்யாண உறவால் ஆதாயம் கிடைக்கும். புகழ் ஓங்கும். தேகப் பொலிவும் கவர்ச்சியும் ஏற்படும். நல்ல மனைவியை அடையலாம்; எல்லாவிதமான நன்மையும் ஏற்படும்.

6. உங்கள் ஜாதக சுக்கிரனைக் கோசார சுக்கிரன் கூடும்போது புதிய காதல் தொடர்புகள் ஏற்படும். புதிய திட்டங்கள் ஒப்பந்தங்களுக்கு நல்ல காலம் அழகுப்

பொருட்கள், கலைப் பொருட்கள் கிடைக்கும். இசை ஞானமும் இலக்கியத் திறனும் மிகும். எல்லா வகையினரிட மிருந்தும் உதவிகள் கிடைக்கும்.

7. உங்கள் ஜாதகச் சனியைக் கோசார சுக்ரன் சேரும் போது சமூகத்தில் ஆதரவும் புகழும் பெருகும். வாழ்க்கை யில் முன்னேற்றத்திற்கான வாய்ப்புகள் அதிகமாகும். தனிமையில் சுகம் காணும் மனப்பான்மையும் ஏற்படும். தன் சுகத்தைப் பாராமல் விட்டுக் கொடுக்கும் உழைப்பால் ஆதாயம் அதிகமாகும். வேண்டியவர்களைப் பிரிய வேண் டியது வரும். பயணங்கள் பயன் தரும். உணர்ச்சி வசக் காதல், அல்லது கவர்ச்சியால் மயக்கம் என்று இல்லாமல் உண்மை நேசமும் ஒருவர்க்கொருவர் உதவும் காதலாகவும் உறவு ஏற்படும். பெரியோர் மூத்தோர் அறிவுரைகள் முன்னேற்றத்திற்கு வழி கோலும்.

8. உங்கள் ஜாதக ராகுவைக் கோசார சுக்கிரன் கூடும் போது சமூகத்தில் ஆதரவும் புகழும் ஓங்கும். எல்லா வகை யினராலும் உதவி கிட்டும். திருமணமாகாதவராக இருந் தால் ஆதரவும் ஆதாயமுமுள்ள காதல் திருமணம் கைகூடும்.

9. உங்கள் ஜாதக கேதுவைக் கோசார சுக்கிரன் கூடும் போது, பொது வாழ்வில் பற்று இராது. எதிலும் தனிமையில் அடங்கும் குணம் அதிகமாகும். காதலில் பர பரப்பு இராது. வியாபாரம் மந்தமாக இருக்கும். பொருளாதார திட்டங்கள் அவசரப் பட்டால் பயன் தராது. இது திருமணத்திற்கு ஏற்ற நேரமுமல்ல. ஏற்கெனவே திருமண மானவர் குடும்ப வாழ்க்கையில் அமைதி கெடும். கொந் தளிப்பும் அதிகமாகும்.

## 7. சனி

1. உங்கள் ஜாதகச் சூரியனைக் கோசார சனி கூடும் போது உழைப்பால் தொழிலில் முன்னேற்றம் ஏற்படும். அதிக பொறுப்புகள் உண்டாகும். தடைப்பட்ட

திட்டங்கள் நிறைவேறும். தீ விபத்து, பிறரால் ஏமாற்றம், இழப்பு ஆகியவை ஏற்படும். மெத்தனமும் பிடிவாதமும் தோல்வியைத் தரும். சில சமயம் பழைய சொத்து வந்து சேரும். அதிர்ஷ்டம் குறையும் கஷ்டமான காலமாகும். சூரியன் நன்கு அமைந்தால் சந்ததியால் நன்மையும் முன்னேற்றமும் உண்டாகும். மனைவியுடன் கருத்து வேற்றுமை, அரசியல்வாதிக்கு அதிக தொல்லை — இவையும் உண்டாகும். உண்மையான உழைப்பு மட்டுமே நன்மை தரும்.

2. உங்கள் ஜாதக சந்திரனைக் கோசார சனி கூடும் போது நல்ல சுபாவம் இருக்கும். ஆனால் காதலுக்கும் சுகத்திற்கும் பொருளை வாரி வாரி இறைக்க நேரும். பொருத்தமற்ற தொடர்பும் ஏற்படும். சந்திரன் 3,10,11 இல் இருந்தால் உடல் நலம், தன விருத்தி, சகல சௌக்யம் எல்லாம் ஏற்படும். உண்மை உழைப்புப் பெரும் பயன் தரும். ஆனால் எப்படி இருப்பினும் இது நிம்மதி இன்மை. மனம் தாங்க முடியாத கஷ்டம், மாரக தசை உள்ளவர்களுக்கு மாரக பயம், பெரும் இழப்புகள், நோய்கள். சண்டைகள், சிறைவாச பயம் இவை எல்லாம் ஏற்படும். காரணம் இது ஏழரை சனியின் அதிகக் கொடுமையான ஜென்ம சனியாகும்.

3. உங்கள் ஜாதகச் செவ்வாயைக் கோசார சனி கூடும்போது, மனோதிடமும் நிர்ணய புத்தியும் மேலிடும். குறிக்கோளை விடாமல் சாதிப்பீர்கள். உடன் பிறப்பு வகையில் விரயம் உண்டாகும். சத்துரு ஜெயம் உண்டாகும். எதற்கெடுத்தாலும் சண்டை போடும் மனப்பான்மை ஏற்படும். 3,6,11 இல் இந்தச் சேர்க்கை ஏற்பட்டால் அரசனுக்குச் சமமான மகோன்னதமான வாழ்க்கை ஏற்படும். பிதிரார்ஜித சொத்தும் சேரும். வருத்தமும் தோல்வி மனப்பான்மையும் ஏற்படும், வெட்டு. ரண காயங்கள். விபத்து முதலியவற்றால் உடல் நலம் பாதிக்கப்படும். அதிக

கோபமும் வரும். அதை அடக்குங்கள். இல்லாவிட்டால் அதனால் ஆபத்துத்தான்,

4. உங்கள ஜாதக புதனைக் கோசார சனி கூடும்போது தன்னம்பிக்கையற்ற நிலைமையை ஏற்படுத்தும். வெளித் தொடர்புகள் மகிழ்ச்சி தராது. திட்டங்கள் தோற்கும். சில சமயம் இலக்கியம், எழுத்துத் தொழில் முன்னேற்றம் உணடு. பழி வாங்கும் எண்ணமும் முரட்டுத்தனமும் மேலிடும்.

5. உங்கள் ஜாதக குருவைக் கோசார சனி கூடும் போது நிம்மதியற்ற நிலை உண்டாகும். கட்டுப்பாடான கடும் உழைப்புத் தேவை, குரு நன்கு அமைந்தால் முன்னோர் சொத்து சுகம் சேரும். அதிக உழைப்பும் பொறுமையும் இருக்கும். குரு கெட்டிருந்தால், உழைப் பெல்லாம் வீணாகும் வேலை மாற்றம் அல்லது வீடு மாற்றம் ஆகியவை ஏற்படலாம். ஒழுங்கைக் கடைப் பிடித்து உழைத்தால் நன்மை உண்டாகும்.

6. உங்கள் ஜாதகச் சுக்கிரனைக் கோசார சனி கூடும் போது பொறுப்புகள் கூடும். தனிமை மேலிடும். சொந்தச் சுகத்தைப் பாராமல் அதிகம் உழைக்க வேண்டியது வரும். உறவினர்கள் உண்மையாக உதவுவர். பொருளாதார விஷயத்தை அடக்கமாகவும் வெளியிடாமலும் இருங்கள்.

7. உங்கள் ஜாதகச் சனியைக் கோசார சனி கூடும் போது பெரிய மாற்றங்கள் ஏற்படும். இந்தச் சேர்க்கை 29 வருஷங்களுக்கு ஒரு முறைதான் ஏற்படுவதால் முக்கியத் துவம் வாய்ந்ததாகும் முதல் சேர்க்கையில் உறவினர் மாற்றம் தொழில் மாற்றம் இவை ஏற்படும். இரண்டாவது சேர்க்கையில் ஓய்வு ஏற்பட்டு விடலாம். (Retirement) இப்பொழுது வீடு மாற்றமும் ஏற்படலாம். பழையவை முடியும். புதிய நம்பிக்கையான வாழ்க்கைத் திருப்பங்கள் ஏற்படும்.

8. உங்கள் ஜாதக ராகுவைக் கோசார சனி கூடும் போது உங்கள் மதக் கொள்கைகளுக்கு விரோதமாக நடப்பீர்கள். பொருளாதாரம், வேலை, வியாபாரம் இவற்றில் சிக்கல்கள் உண்டாகும். கவலைகளும் பயமும் உண்டாகும். தனிமை ஏற்படும். சுயநலமற்ற பொதுஜன சேவைகள் நன்மை தரும்.

9. உங்கள் ஜாதக கேதுவைக் கோசார சனி கூடும் போது சமூக விரோதமான செயல்களில் ஈடுபடுவீர்கள். மதம், சம்பிரதாயம். சடங்குகளில் நம்பிக்கை இராது, எல்லா விதத்திலும் தாழ்வு மனப்பான்மை, தோல்வி, வெறுப்பு இவையே ஏற்படும். இது ஓர் அசுப கோசார மாகும்- நிதானமும் எச்சரிக்கையும் தேவை. நெருங்கிய உறவினர்களின் இறப்பும் நேரிடும். புதிதாக எதுவும் ஆரம் பிக்கக் கூடாது.

## 8. ராகு

1. உங்கள் ஜாதக சூரியனைக் கோசார ராகு கூடும் போது சொந்த வாழ்க்கையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். விதி உங்களுக்கு இப்பொழுது மிகவும் சாதக மாக இருக்கும். ஆனால், கணவன் மனைவியரிடையே பிரிவும் ஏற்படலாம்.

2. உங்கள் ஜாதக சந்திரனுடன் கோசார ராகு கூடும் போது, புதுப் பொறுப்பும் நன்மையும் ஏற்படும். ஆசைகள் எல்லாம் நிறைவேறும்.

3. உங்கள் ஜாதக செவ்வாயுடன் கோசார ராகு சேரும்போது குத்துச் சண்டை, விளையாட்டுகள் போன்ற வற்றில் ஈடுபாடும், அதனால் நன்மையும் உண்டாகும். சில சமயம், புலன் உணர்வுகள் அதிகமாகத் 'தூண்டப்படும். சில சமயம் அதிக போக ஈடுபாடும் ஏற்படும். உடன் பிறந்தார் உதவியால் நல்ல முன்னேற்றம் ஏற்படும்.

4. உங்கள் ஜாதக புதனைக் கோசார ராகு சேரும் போது நல்ல எழுத்துத்திறன், உள்மன ஆற்றலால் தோன்றும் அரிய யோசனைகள் வாழ்க்கைக்குப் பயன் தரும். உற்சாகமும் தெம்பும் மேலிடும். உடன் பிறப்பு சுளுடன் ஒருவருக்கொருவர் உதவி மேன்மை பெறலாம்.

5) உங்கள் ஜாதக குருவை கோசார ராகு கூடும் போது இது அதிர்ஷ்ட சூசகமாகும். பெரிய உயர்நிலை வேதாந்தத் தத்துவப் புலமை ஏற்படும் பொருளாதார முன்னேற்றமும் உலகாயத முன்னேற்றமும், இதற்கிணை யாகவே இருக்கும். அதிர்ஷ்டமான திருப்பம் கட்டாயம் உண்டு.

6) உங்கள் ஜாதக சுக்கிரனைக் கோசார ராகு கூடும் போது பாசம் அன்பு மேலிடும். வாழ்க்கையில் நல்லவை எல்லாமே முயற்சியின்றி வந்து சேரும். பெண்கள் கூட்டத்தின் நடுவே பெயரெடுக்கலாம். கல்யாண சம்பந்தங்கள் அதிர்ஷ்டமானதாக அமையும்.

7) உங்கள் ஜாதக சனியைக் கோசார ராகு கூடும் போது எந்தப் பொறுப்பையும் சோர்வின்றி நிறைவேற்றும் பொறுமை ஏற்படும். ஆரோக்கியமும் சிறிது பாதிக்கப் படலாம்.

8) உங்கள் ஜாதக ராகுவைக் கோசார ராகு கூடும் போது, வருவாயில் மிச்சம் பிடிக்கும் குணம் மேலிடும். வியாபாரத்தில் மாற்றங்கள் செய்வது அவ்வளவு நன்மை தராது. பெரிய பொறுப்பை முன்னிட்டு (Risk) எதையும் ஏற்றுக் கொள்ளவே வேண்டாம். நிதானத்துடன் ஈடுபட் டால் நன்மை உண்டு. மேலதிகாரிகளுடன் கவனமாக நடந்து கொள்ளுங்கள். பயன் தரக்கூடியது என்று நினைப்ப வற்றை மட்டுமே மேற்கொள்வது நல்லது.

9) உங்கள் ஜாதக கேதுவைக் கோசார ராகு கடப்பதற்கு செவ்வாய்க்கு சொன்ன பலனையே இங்கும் எடுத்துக் கொள்ளவும்.

## 9. கேது

1) உங்கள் ஜாதக சூரியனைக் கோசார கேது கூடும் போது ஏமாற்றம். அதிக உழைப்பு, எதிர் பாராத திடீர் சிக்கல்கள் போன்றவை ஏற்படும். போட்டிப் பந்தயங் களைத் தவிர்க்கவும் உடல் நலம் கெடும். தகப்பனார் அல்லது அதற்குச் சமமானவர் இறப்பும் நேரலாம். களைப்பு, சோர்வு, தோல்வி மனப்பான்மை, வெறுப்பு எல்லாம் தோன்றும். உங்கள் பிடிவாத முரட்டுக்குணத்தால் சில காரியங்கள் கெடும்.

2) உங்கள் ஜாதகச் சந்திரனைக் கோசார கேது கூடும் போது, தாயைப் பிரிதலும், அவளுக்கு உடல் நலம் கெடுதலும் ஏற்படும். வீட்டில் குழப்பம் ஏற்படலாம். பொறுமையைக் கையாளுங்கள். புதுச் சொத்துகள் வாங்குவதைவிட இருப்பதைத் திருத்திப் பாதுகாத்துக் கொள்வது நல்லது. உங்களைப் பிறர் தங்கள் சுயநலத் திற்குப் பயன்படுத்திக் கொள்ளாமல் பார்த்துக் கொள் ளுங்கள், உங்கள் குறிக்கோள்களையும் கொள்கைகளையும் விட்டுக் கொடுக்காதீர்கள்.

3) உங்கள் ஜாதகச் செவ்வாயை கோசார கேது கூடும் போது பல தவறுகள் செய்வீர்கள். இதனால் உத்தியோகம் தொழில் இவற்றில் சரிவு ஏற்படும். தொழிலில் பிடிக்காத, கட்டாய மாற்றம் ஏற்படும். அதற்கு இடம் கொடாமல் பொறுமையாக இருங்கள். நண்பர்கள் உறவினர்களின் வெறுப்புக்கு ஆளாக வேண் டாம். உடல் நலம் கெடும். பெண்கள், மனைவி உட்பட எவரும் ஒத்துழைக்க மாட்டார்கள். அவசரம் சிடுசிடுப்பு கவலை பொறாமை இவை ஏற்படும். நிதானமாகவே செயல்படுங்கள்.

4) உங்கள் ஜாதக புதனைக் கோசார கேது கூடும் போது அமைதி இன்மை நிலவும். நிதானம் தேவை.

பிறருக்கு உதவப்போய் உங்கள் காரியம் கெடும். பெருந் தொகைப் பணத்தை எச்சரிக்கையாகக் கையாள வேண்டும். இழக்கும் வாய்ப்பு உள்ளது. நெடுநாளைய திட்டம் தீட்டாதீர்கள். எதையும் விரைந்து முடிக்கும் குறுகிய காலத் திட்டங்களையே தீட்டுங்கள்.

5) உங்கள் ஜாதக குருவைக் கோசார கேது கூடும் போது எதிர்பாராத பெரும் செலவினமும் நஷ்டமும் ஏற்படலாம். இச்சைகளைச் சமனப்படுத்திக் கொள் ளுங்கள். உயர்ந்த பெஞ்சு, கட்டில் முதலியவற்றின் மேல் படுக்காதீர்கள். கீழே உருண்டு விழும் ஆபத்துண்டு. கடன் கூடாது. வீட்டு அமைதியைக் கெடுக்கும்படி நடக்கக் கூடாது. உடல் நலம் கெடலாம். எடை குறையலாம்.

6) உங்கள் ஜாதக சுக்கிரனைக் கோசாரக் கேது கூடும்போது காதல் முதலியவற்றிற்கு இது உகந்த நேரம் இல்லை. திருமணத்திற்கும் இதுவே பொருந்தும். தப்பபிப் ராயம் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். விவாக ரத்து அல்லது பிரிவும் ஏற்படலாம். அச்சமுண்டு. பொரு ளாதாரத் திட்டம் இப்பொழுது வேண்டாம். பண நஷ்டம் ஏற்படும். வியாபார, தொழில் மாற்றம் வேண்டாம்.

7) உங்கள் கோசார சனியைக் கோசார கேது கூடும் போது இதுவும் ஆகாத காலமே. யாரையும் பகைத்துக் கொள்ளாதீர்கள். உடல் நலத்தைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள். நிறையத் தூங்கவும் களைப்பாறவும் செய்யுங்கள். பிரிவும் சோக மன நிலையும் ஏற்படும். பெரியோர்களுடன் உணர்ச்சி வசப்பட்டு நடந்து கொள் ளாதீர்கள். இரத்த நாளம், எலும்புக்கூடு இவை பாதிக்கப்படலாம்.

8) உங்கள் ஜாதக ராகுவை கோசாரக் கேது கூடும் போது, நிதானப் புத்தியுடன் ஈடுபட்டால் மட்டும் நன்மை

உண்டு. யாரிடமும் ஏமாறாமல் விழிப்பாய் இருங்கள். எதையும் செய்யாமல் சோம்பி இருக்கும் மனோபாவம் இருக்கும்; இதை விட்டுவிட்டுச் செயல்படத் தொடங் குங்கள்.

9) உங்கள் ஜாதக கேதுவுக்குச் சொன்ன பலனையே இங்கேயும் ஏற்றுக் கொள்ளவும்.

அத்தியாயம் — 30

## கிரஹணங்களும் கோசாரமும்

சூரியன் சந்திரன் பூமி இவற்றின் வெவ்வேறு சுழற்சிகளில், ஒன்றுக்கொன்று இடையில் வரும்போது, அவற்றின் நிழல் மற்றையதன்மேல் விழுவதால், சூரிய சந்திர கிரஹணங்கள் ஏற்படுகின்றன. இதை விளக்கமாக இளமையில் பாடப் புத்தகங்களில் நாம் படித்துள்ளோம். இந்த நிழலின் மறைப்பு சக்தியால் மனித வாழ்க்கையில் பலவகைப் பாதிப்புகள் ஏற்படுகின்றன. இந்த கிரஹணங்கள் எந்த ராசி, பாகை அல்லது நக்ஷத்திரங்களில் ஏற்படுமோ, அதற்கேற்பப் பாதிப்பு என்ன என்பதை முன்னோர் தெளிவாகக் கண்டுணர்ந்துள்ளனர்.

கிரஹணங்கள் சந்திர ராசியிலிருந்து ஏற்படும்போது ஏற்படும் பாவத்தின் பலனையும், கோள்களின் காரக பலனையும் பாதிக்கின்றன. இவை சூரியன் சந்திரன் 10ஆம் இடம், இவற்றுடன் சம்பந்தப்படும் போது அழிவு, துக்கம், தீரா நோய் ஏன் இறப்புங்கூட ஏற்படுவதாக அனுபவத்தில் காணப்பட்டுள்ளது. இந்த வகையில், சூரிய கிரஹணம் எத்தனை மணி நேரம் நடந்ததோ அத்தனை வருஷங் களும், சந்திர கிரஹணம் எத்தனைமணி நேரம் ஏற்படுமோ அத்தனை மாதங்களும் இவை பாதிப்பை ஏற்படுத்து

கின்றன " என்பதும் அனுபவத்தில் அறிந்த உண்மை களாகும்.

சூரிய சந்திர கிரஹணங்கள் முறையே அமாவாசை மற்றும் பௌர்ணமி அன்று ஏற்படுகின்றன என்பது யாவரும் அறிவர். இந்த மறைப்பு சந்திரன் மேல் விழும் போது தாயையும், சூரியன் நிலையில் நடக்கும் போது தந்தையையும், புதன்மேல் விழும்போது தாய் மாமனையும் குருவின்மேல் விழும்போது சந்ததியையும், சுக்கிரன்மேல் விழும்போது மனைவி மற்றும் பெண் உறவினர்களையும், செவ்வாயின்மேல் விழும்போது உடன் பிறந்தவரையும் பாதிப்புக்குள்ளாக்குகின்றன. இனி இந்திய ஜோதிட முறைப்படி இவற்றின் வெவ்வேறு பலன்கள் வருமாறு :

1] சந்திர கிரஹணம்—ஜாதகத்தில் சூரியன் உள்ள பாகையில் ஏற்பட்டால், ஜாதகருக்குக் கஷ்டமும் அரிஷ்டமும் ஏற்படுகிறது. இது ஜாதகரின் தகப்ப னாருக்கும் கெடுதியைத் தருகிறது.

2] இது சந்திரன் பாகையில் நடந்தால், தாய்க்கு அரிஷ்டம் கண்டம் ஏற்படுகிறது.

3] சூரிய சந்திர கிரஹணங்கள் ஏற்படும் நக்ஷத்திரம், இதற்கு முன்பின் நக்ஷத்திரம், இவற்றிற்கு ஜன்மானுஜன்ம நக்ஷத்திரங்கள் இவற்றில் பிறந்தவர்களையும், பல வகை யிலும் பாதிக்கின்றன. இதனாலே, இந்த நக்ஷத்திரக் காரர்கள் சாந்தி செய்து கொள்ள வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

அடுத்து லக்னம் அல்லது ஜென்ம ராசியில் இருந்து 12 பாவங்களிலும் ஏறபடும் கிரஹண பலனை விவரிப் போம்.

1) லக்கினத்தில், அல்லது ஜென்ம ராசியில் கிரஹணம் ஏற்பட்டால், உடல் நலம் பாதிக்கப்படுகிறது. வாகன விபத்து அல்லது வழுக்கி விழுவதால் விபத்து இதனால்

எலும்பு முறிவு முதலியவை ஏற்படுகின்றன. இந்தக் கிரஹணத்திற்கு குரு சுக்கிரன் பார்வை இருந்தால். ஜாத கருக்கு நீடித்து நிற்கும் முன்னேற்றத்தைத் தரும். இவர் காரியங்கள் எல்லாவற்றிலும் வெற்றி பெறுவார்.

2) 2 ஆம் வீட்டில் கிரஹணம் ஏற்பட்டால், அந்த இடத்துக்குச் சுபபார்வை இருந்தால். பொருளாதாரம் மிகவும் முன்னேறும். இப்படிப்பட்ட நேரங்களில் போட்டிப் பந்தயங்களில் வெற்றியும் உண்டாகும். அசுப பார்வை இருந்தால் பொருளாதார இழப்புகள், திட்டத்தோல்விகள் ஆகியவை ஏற்படும்.

3) 3 ஆம் இடத்தில் கிரஹணம் ஏற்பட்டால், சுப பார்வை இருந்தால் உறவினர் நண்பர்களின் உதவியால் வாழ்க்கை முன்னேறும். நல்ல செய்திகள் வரும். அசுப பார்வை ஆனால், பயனற்ற பயணம், உறவினர் நண்பர் களால் தொல்லைகள் முதலியவை ஏற்படும்.

4) 4 ஆம் இடத்தில் சுப சம்பந்தத்துடன் கிரஹணம் ஏற்பட்டால் குடும்ப சுகமும், நிம்மதியும் உண்டாகும். பெற்றோரால் மகிழ்ச்சியும் உதவியும் ஏற்படும். அசுப பார்வை ஏற்பட்டால் பெற்றோருக்கு அரிஷ்டம், கண்டம் போன்றவை ஏற்படும்.

5) 5 ஆம் இடத்தில் சுபத்துவமானால், எல்லாமே சந்தோஷம்; சந்ததிக்கு முன்னேற்றம், அசுபமானால் சந்த திக்கு நோயும் தொல்லையும் படிப்புக் கெடுதலும் உண்டாகும்.

6) 6 ஆம் இடத்தில் உண்டானால், சுபத்துவம் பெற்றால் ஆரோக்கியம் முன்னேறும், உத்தியோகமும் தொழில்களும் மிக ஓங்கும்; உயர்வு கிடைக்கும். அசுப மானால் நோய் நொடிகள் உண்டாகும். தொழிலில் தவறு களும் தண்டனைகளும் ஏற்படலாம்,

7) 7 ஆம் இடத்தில் ஏற்பட்டு சுபத்துவமானால் கூட்டாளிகள் உதவி செய்வார்கள். புதிய சமூக உறவுகளும் அதனால் இலாபமும் ஏற்படும். அசுபமானால், மேற் கண்டவை எல்லாம் பாழாகும். கூட்டு வியாபாரத்தில், கூட்டாளிகள் இவரை ஏமாற்றி விடுவர். இந்த நிலையில் ஜாமீன் கையெழுத்து முதலியவற்றை யோசித்துப் போட வேண்டும்.

8) 8 ஆம் இடத்தில் சுபத்துவமாக வந்தால். பங்கு மார்க்கெட்டில் அதிக இலாபம், எதிர்பாராத உயர்வு போன்றவை ஏற்படும். போட்டிப் பந்தயங்கள்சாதகமாகும். வழக்குகள் மூலம் பழைய சொத்துகள் கிடைக்கலாம். 'இன்ஷ்யூரன்ஸ்' முதலியவற்றில் நிறைய ஆதாயம் காணும். இதுவே அசுபமானால் ஏமாற்றம், தோல்வி, கடன், அதிகத் தொகை இழப்பு முதலியவை ஏற்படும்.

9) 9 ஆம் இடத்தில் சுபத்வத்துடன் கிரஹணம் ஏற்பட் டால், வீட்டுக்குப் பொருளாதார முன்னேற்றமும், எல்லா நன்மைகளும் கிடைக்கும். தொலைவான நெடும் பயணம் மற்றும், வெளிநாட்டுப் பயணங்கள் முதலியவை ஏற்படும். அதனால் சந்தோஷம் பெருகும், ஆதாயமும் காணும். இதுவே அசுபமானால்,பயணத்தில் விபத்து, பாதியில் உடல் நலம் கெடல், எல்லா முயற்சிகளும் தோல்வி—இப்படி எதுவும் தீமையாகவே முடியும்.

10) 10 ஆம் இடத்தில் சுபத்துவத்துடன் நடந்தால் உத்தியோகம் உயரும் பதவி உயர்வு முதலியன கிடைக்கும். வேலை செய்யும் சூழ்நிலைகள் பளுக் குறைந்தும், சௌ கரியங்கள் பலவும் உள்ளதாகவும் இருக்கும். அசுபமானால் உத்தியோகத் தவறுகள் தண்டனைகள் ஏற்படும். சில சமயம், தகப்பனார் அல்லது தாயார் இறக்கவும் கூடும்.

11) 11 ஆம் இடத்தில் சுபத்துடன் ஏற்பட்டால் நண்பர்கள் மேலிடத்தாரின் உதவி, சிபாரிசு இவற்றால் எல்லாம் முன்னேற்றம் அடையும். இதுவே அசுபமானால்,

இவர்களே இவர்களைக் காலை வாரிவிட்டு விடுவார்கள். பல கஷ்டங்களுக்கு ஆளாக்குவர். ஏமாற்றமும் தோல்வியும் அதிகமாகும். இந்தச் சமயத்தில் நண்பர்களின் உண்மை யான தன்மையை அறிந்துதான் அவர்களிடம் உதவிபெற முயல வேண்டும்.

12) 12 ஆம் இடத்தில் சுபத்துடன் ஏற்பட்டால், இது கர்ம வினையைக் குறிப்பதால், ஒன்று இவருக்குப் பலரின் உதவியால் வாழ்வு முன்னேறும். அல்லது, இவர் பலருக்கு உதவுவார். மருத்துவமனை நிறுவனங்கள். சிறைகள் இவற்றில் இருப்பவரானால், உதவி உண்டாகும். அசுப மானால், இவர்களாலேயே கெடுதல்கள் ஏற்படும். இவருக்கே உடல்நலம் கெட்டு, மருத்துவ மனைக்குப் போக வேண்டியது வரும். தன் பிள்ளைகள் பெண்கள் திருமணத் திற்குச் சுப விரயம் ஏற்படும். அசுபமானால், வீண் செலவு களும் பெருந் தொகை இழப்பும் ஏற்படும்.

அத்தியாயம்—31

# பலவகைக் கோசார, மற்றும் அது தொடர்பான பலவகைச் செய்திகள்

## கோசார ஏகராசி அசுப நிர்ணயம்

''ஒன்பது கோள்களும், ஒவ்வொரு ஜன்மராசிக்கும் பல்வேறு இடங்களில் அதாவது ஒன்றுக்கு மேற்பட்ட இடங் களில், அசுப பலன்களைக் கொடுக்கின்றன. அப்படிச் சொல்லப்பட்டவற்றில், அவை ஒவ்வொன்றும் ஏதாவத் ஒவ்வோர் இடத்தில்தான் அதிக நேரக் கெடுதலைக் கொடுக்கின்றன'' என்று தமிழ் ஆன்றோர் கண்டுள்ளனர். அதன் வாக்கியம் வருமாறு:

இரவியஞ்சா மிடந்தனிலே திங்க ளெட்டில்
ஏழதனிற் செவ்வாயும் இரண்டில் புந்தி
விரவுகுரு மூன்றிடத்தில் சுங்க னாறில்
மிக்கசனி ஜன்மத்தில் இருபாம் பொன்பான்
திரமுடனே இத்தலங்கள் சேரு மாகில்
சிறைகாவல் வெகு நோயாம் சிலுகு சண்டை
உரைத்திடுமா னச் சேதம் மரணம் சேதம்
உற்ற பலன் ஆகாதென்றுரைக்கலாமே!

இதன்படி—

1. சூரியன் 1,2,4,5,7,8,9,12 ஆகிய இடங்களில் அசுப பலனைக் கொடுத்தாலும் இவற்றில் ஜென்ம ராசியி லிருந்து 5 இல் மட்டும்தான் அதிகக்கெட்ட பலனைத் தருகிறார். ஆகையால் மற்ற ராசிகளில் ஏற்படும் அசுப பலனைச் சமாளித்துக் கொள்ளலாம்.

2. சந்திரன் 2,4,5,8,9.12 ஆகிய இடங்களில் அசுப பலனைத் தருகிறார். இதில் 8 ஆம் இடத்தில்தான் அதிகக் கெடுதி செய்வார். ஆகையால் மற்ற ராசிகளில் இவரின் அசுபபலனைச் சமாளித்துக் கொள்ளலாம்.

3. செவ்வாய் 3,6,11 ஆம் இடம் நீங்கலான மற்ற இடங்களில் அசுபபலனைத் தருபவர். இதில் 7 ஆம் இடத்தில் தான் இவருடைய அசுபம் அதிகமாக இருக்கும். மற்ற வற்றைச் சமாளித்துக் கொள்ளலாம்.

4. புதன் 1,2,3,5,7 9,12 ஆகிய இடங்களில் அசுப பலனைத் தருகிறார். இதில், ஜென்ம ராசியில் இருந்து 2 ஆம் இடத்தில்தான் அதிகக் கெடுதியைச் செய்வார். மற்ற வற்றைச் சமாளித்துக் கொள்ளலாம்.

5. குரு 1,3,4,6,8.10,12 ஆகிய இடங்களில் அசுப பலனைச் செய்கிறார். இதில் 3 ஆம் இடத்தில்தான் அதிகக் கெடுதியைச் செய்வார். மற்றவற்றைச் சமாளித்துக் கொள்ளலாம்.

6. சுக்கிரன் 6,7,10 ஆகிய இடங்களில் அசுபபலனைக் கொடுக்கிறார். அவற்றில் 6 இல் தான் அதிக அசுப பலன் கொடுப்பார். மற்ற இரண்டையும் சமாளித்துக் கொள்ள லாம்.

7. சனி பகவான் 3,6,11 நீங்கலான மற்ற இடங்களில் அசுப பலனைத் தருகிறார். இதில், ஜென்ம ராசியில்தான் அதிகக் கெடுதி செய்கிறார். மற்றவற்றில் ஏற்படும் அசுபத்தைச் சமாளித்துக் கொள்ளலாம்.

8. ராகுவும், கேதுவும் 3,6,11 நீங்கலான மற்ற ராசிகளில் அசுப பலனைத் தருவார்கள். இதில் 9-ஆம் இடத்தில் தான் இராகு அதிக அசுப பலனைத் தருவார். இதனால் மற்ற இடத்தின் அசுபங்களைச் சமாளித்துக் கொள்ளலாம்.

9. கேதுவும் ராகுவைப் போலத்தான். இப்படி ஒன்பது கோள்களும், ஒவ்வோர் இடத்தில்தான் அதிகபட்ச அசுப பலனைத் தருவார்கள். அவை வருமாறு:

விலங்கு பூண வேண்டியது வரும். சிறை பயம், பல வகையான நோய்கள், சில்லறைச் சண்டைகள், மான கௌரவபங்கம், மரண பயம், இப்படி எல்லாவகையிலும் ஆகாத பலன்களே நடக்கும் என்று அறிய வேண்டும். இப்படி, ஒரே இடத்தில்மட்டும் மிகுதியான கெட்ட பலன் சொன்னதால், கோசார பலனைப் பற்றியே நாம் பெரிதும் கவலைப்பட வேண்டியதில்லை என்பது தெளிவாகிறது.

## வருஷ தசை

ஜென்ம நக்ஷத்திரம் முதலாகப் பிறந்த நாள் முதல் ஆயுட்காலத் தசாபுக்திகள் கணிப்பதுபோல், ஒவ்வொரு வருஷமும் 9 தசைகளும் கணிதம் செய்வதே, வருஷ தசை யாகும். இதனால், ஒவ்வொரு வருஷமும் நல்ல காலப் பகுதி எப்பொழுது வரும் என்பதை அறிய முடியும்.

இதற்குச் சித்திரை மாதம் முதல் தேதியைக் கணக்கிட்டுக் கூறும் தமிழ் வருஷத்தைத்தான் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். ஒரு வருஷப் பலன் அறிய விரும்பு பவர்கள், அந்த வருஷத்திற்கு முந்தின பங்குனிமாதம் வளர் பிறைப் பிரதமையன்று என்ன நக்ஷத்திரம் என்று பார்த்துக் கொள்ள வேண்டும். தெலுங்கு வருஷப் பிறப்பு முதல்தான் சந்திரமான வருஷம் ஆரம்பம் ஆகின்றது. அதனாலேயே இதைக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டது. ஒருவன் ஜென்ம நக்ஷத்திர முதல் மேற்கொண்ட பங்குனி பூர்வ பக்ஷம் பிரதமை அன்று உள்ள நக்ஷத்திரம் வரை எண்ணிக் கொள்ள வேண்டும். அடுத்து அந்த எண்ணை 5-ஆல் பெருக்கிக் கொள்ள வேண்டும். அப்படி வந்த தொகையை 9-ஆல் வகுக்க வரும் மிச்சம் 1 முதல் 9 வரை வருவதைக் கீழ்க்கண்ட தசைகளாய்க் கொள்ள வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரிய தசை | — | 20 நாள் |
| 2. | செவ்வாய் தசை | — | 28 நாள் |
| 3. | குரு தசை | — | 58 நாள் |
| 4. | கேது தசை | — | 21 நாள் |
| 5. | புதன் தசை | — | 56 நாள் |
| 6. | சுக்கிர தசை | — | 70 நாள் |
| 7. | சனி தசை | — | 36 நாள் |
| 8. | சந்திர தசை | — | 50 நாள் |
| 9. | ராகு தசை | — | 21 நாள் |
| | | ஆக மொத்தம் | 360 நாள் |

இதில், எந்தத் தசை முதலில் வருகிறதோ அதை முதலாகக் கொண்டு கொடுத்துள்ள வரிசையில் மற்ற வற்றைத் தொடர்ந்து கணக்கிடவும். உதாரணமாக, ஒருவர் ஜென்ம நக்ஷத்திரம் சித்திரை என்று வைத்துக் கொள்வோம். இவருக்கு குறிப்பாக பிரஜோத்பத்தி வருஷ தசை கணக்கிட வேண்டும். இதற்கு, முந்தின

